# காளமேகப் புலவர் தனிப்பாடல்கள்

புலியூர்க் கேசிகன்


மங்கை வெளியீடு



693

# காளமேகப் புலவர் தனிப்பாடல்கள்

புலியூர்க் கேசிகன்

 மங்கை வெளியீடு

சென்னை - 600 018.

☎ 9790706549 / 9790706548

நூல் கிடைக்குமிடம் :

| கௌரா புத்தக மையம் | கௌரா புத்தக மையம் |
|---|---|
| செயிண்ட் ஜான் சர்ச் வணிக வளாகம் | 4, வெங்கட்ரங்கம் பிள்ளை தெரு, |
| 9, ராக்கின்ஸ் சாலை, திருச்சிராப்பள்ளி-1 | திருவல்லிக்கேணி, சென்னை - 5. |
| ☎ : 99520 34876 / 0431 2419584 | ☎ : 94456 73791 / 97907 06549 |

விலை : ரூ. 70.00

* முதற் பதிப்பு : டிசம்பர் 2010
* © உரிமை : பதிப்பகத்திற்கே
* பதிப்பாசிரியர் : எஸ். கௌமாரீஸ்வரி M.A., M.L.I.S.,
* நூலின் பெயர் : காளமேகப் புலவர் தனிப்பாடல்கள்
* பக்கங்கள் : 160
* ஒளி அச்சு : ஜெய் ஜீனா
* வெளியீடு : மங்கை வெளியீடு
  B 6, திருவேணி அடுக்ககம்,
  ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 18.
* அச்சிட்டோர் : கிளாசிக் பிரிண்டர்ஸ், செ - 2

CODE : 470

கௌரா ஏஜென்ஸீஸ்

10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

☎ : 044-2844 3791 / 97907 06548 / 97907 06549

www.gowrabookfair.com. E-mail : gowra_09@yahoo.in / gowra09@gmail.com

# காளமேகப் புலவர்

தமிழ்ப் புலவர் பலருடைய வாழ்க்கை வரலாறுகள், ஓரளவிற்குச் சுவையான புனைகதைகளைப் போலவே நம் நாட்டில் நிலவி வருகின்றன. வியத்தகு கற்பனை நிகழ்ச்சிகளோடு கலந்து, ஒரு வகைத் தெய்வீக இணைப்புடனே அவை வழங்குகின்றன. 'கவிதை நயத்தையும், அக்கவிதைகள் காட்டும் பொருள் வளத்தையும் தெய்வீகச் சிந்தனைகளோடு சேர்த்தே நாம் அறிந்து உணர வேண்டும்' என்ற உயரிய நினைவே இவற்றுக்குப் பெரும்பாலும் காரணமாக இருக்கலாம்.

புலவர் வரலாறுகளைப் பற்றியவரை, நிலையானவொரு பகுதியாக இன்னொன்றும் விளங்கி வருகிறது. அது, அவர்கள் காலத்தையும் வரலாற்றையும் பற்றி அறிஞரிடையே நிகழும் வாதப் பிரதிவாதங்கள். இந்த இரு வகையான பொது அம்சங்களிலும் காளமேகப் புலவரின் வரலாறும் எள்ளளவும் குறைந்துவிட வில்லை. அதனை ஓரளவிற்குச் சுருக்கமாக நாம் முதற்கண் காண்போம்.

திருக்குடந்தைப் பகுயிலே, வடமரான பிராமணர் மரபிலே தோன்றியவர் இவர் என்பர். அவ்வூரிற் பிறந்த சோழியப் பிராமணர் என்றும் சிலர் உரைப்பர்.

நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகத் திகழ்வது பாண்டி நாட்டுத் 'திருமோகூர்' என்னும் தலம். அந்தத் தலத்திலே கோயில் கொண்டிருக்கும் பெருமாளுக்குக் 'காளமேகப் பெருமாள்' என்று பெயர். அந்தக் கோயிற் பரிசாரகராயிருந்த ஒருவருடைய மகனார் இவர் எனவும் சிலர் உரைப்பர். இவர் மோகூர்ப் பெருமாளைப் பாடியிருப்பதனையும், அப்பெருமாளின் பெயரும் காளமேகமாக இருப்பதனையும் இக் கருத்திற்குச் சான்றாகவும் அவர்கள் காட்டுவர்.

இவர்களுடைய கருத்துப்படி 'காளமேகம்' என்பது இவருடைய இயற்பெயரே ஆகின்றது. மற்றையோர் இதனை ஏற்பதில்லை. தேவியின் அருளினாலே ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைக் கவிதைகளையும் கார்மேகத்தைப் போலப் பொழிதலைத் தொடங்கிய பின்னரே இப்பெயர் இவருடைய சிறப்புப் பெயராக அமையலாயிற்று என்பார்கள் அவர்கள்.

**வாசவயல் நந்தி வரதா திசையனைத்தும்**
**வீசு கவிகாள மேகமே - பூசுரா**
**வீண்தின்ற வெவ்வழலில் வேகுதே பாவியேன்**
**மண்தின்ற பாணமென்ற வாய்.**

என்ற செய்யுளை அதிமதுரகவி செய்தனர். இதன் முதல் அடியில் குறிப்பிடப்பெறும் **வரதா** என்ற சொல்லைக் கொண்டு, அதுவே இவருடைய இயற்பெயராகலாம் என்பர் **திரு.மு. இராகவய்யங்கார்** அவர்கள்.

இவருடைய இளமைப் பருவம் எத்தகைய சிறப்பும் இன்றிக் கழிந்திருக்க வேண்டும் என்றே கொள்ளலாம். இவர், பிற்காலத்துப் பரிசாரகத் தொழிலில்அமர்ந்திருந்ததனை எண்ணினால், அவ்வாறு கருதுவதற்கு இடமும் உண்டாகின்றது.

## பரிசாரகர் வரதன்

வரதன், தமக்கு வயது வந்ததும், தமக்கு ஏற்ற ஒரு பணியினை நாடித் தம் ஊரினின்றும் வெளியேறிவிட்டார். பலவிடங்கட்கும் சென்று வேலை தேடித் திரிந்தவர், இறுதியில் திருவரங்கத்துப் பெரியகோயிலை அடைந்தார். அங்கு, அவருக்குப் பரிசாரகர் வேலைதான் கிடைத்தது.

கோயில் மடைப்பள்ளி அலுவல்களில் இந்தப் பரிசாரகர் பணியும் ஒன்று. உணவு அங்கேயே கழிந்துவிடும் கிடைக்கிற சிறு ஊதியம் மிச்சம். அதனால் வரதன் நிம்மதியாக அவ்வேலையில் இருந்தார். இருந்தாலும், அவருடைய கட்டிளமைப் பருவம், அப்படி நிம்மதியுடன் நிரந்தரமாக இருக்குமாறு அவரை விட்டுவிடவில்லை. விதி, அவரை ஆட்டிப்படைக்கத் தொடங்கிற்று.

## மோகனாங்கியின் தொடர்பு

திருவரங்கம் பெரியகோயில் ஒரு பிரசித்தி பெற்ற திருமால் திருப்பதி. அதனருகே, சிறிது தொலைவிலே திருவானைக்காத் திருக்கோயில் உள்ளது. இது பிரபலமான சிவன்கோயில். சம்புகேசுவரராகச் சிவபிரான் இங்கே கோயில் கொண்டிருக்கின்றார்.

சம்புகேசுவரர் கோயிலும் ஒரு பெரிய கோயில். இங்கேயும் பணியாட்கள் மிகுதியாக இருந்தனர். இறைவனின் முன்பு ஆடியும் பாடியும் தொண்டு செய்து வருவதை மரபாகக் கொண்ட தேவதாசியர் பலரும் அந்நாளில் இந்தக் கோயிலில் இருந்தனர். அவர்களுள் மோகனாங்கி என்பவளும் ஒருத்தி. இவள் நல்ல அழகி; நடனத்திலும் வல்லவள்.

அழகு கொஞ்சிக் குடிகொள்ளும் இளமைப் பருவமும் மோகனாங்கிக்கு அப்போது அமைந்திருந்தது. இயல்பிலேயே

அழகியான மோகனாங்கிக்கு, இளமைப் பருவத்தின் செழுமையான பூரிப்பு மேலும் அதிகமான கவர்ச்சியை அளித்தது.

அவளைக் கண்டதும் வரதன் அவள்பால் மையல் கொண்டனர். அவளை அடைவதற்கும் முற்பட்டனர். அவளும் அவருடைய அழகிலே மயக்கமுற்றாள். அவர் கருத்திற்கும் இசைந்தாள். இருவர் வாழ்வும் ஒன்றாகிக் கனிந்து, அளவற்ற இன்பநாதத்தை ஒலித்துக் கொண்டிருந்தது.

வரதன், ஒரு பெருமாள் கோயில் பரிசாரகர், மோகனாங்கி, ஒரு சிவன் கோயில் தாசி. அவர்களின் உறவு சைவர், வைணவர் ஆகிய இருந்திறத்தாராலும் வெறுக்கப்பட்டது. ஆனால், அதைப்பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. அவர்கள் உள்ளம் ஒன்று கலந்துவிட்டபின், உலக விவகாரங்களை நினைப்பதற்கு அங்கு இடமே இல்லை.

## கேலியும் ஊடலும்

ஒரு சமயம், மார்கழி மாதத்தில், சம்புகேசுவரர் கோயிலில் திருவெம்பாவைப் பாராயணம் நடந்து கொண்டிருந்தது. கோயில் தாசிகள் பலரும் கூடி இனிமை ததும்பப் பாடிக் கொண்டிருந்தனர். ‘உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்’ என்ற பாடலை அவர்கள் பாடத் தொடங்கினார்கள்.

‘எம்கொங்கை நின் அன்பர்அல்லார் தோள் சேரற்க’, என்ற அடியினைப் பாடுவதற்கு இயலாதபடி மோகனாங்கி திணறினாள். எப்படி அவளால் பாட முடியும்? அவள் உறவு கொண்டிருப்பதோ ஒரு வைணவருடன். ஆகவே, அவள் மனம் சஞ்சலத்தில் சிக்கிக் கொள்ள, அவள் செயலற்று நின்றுவிட்டாள்.

இயல்பாகவே அவள் கொண்டிருந்த பொருத்தமற்ற உறவினை வெறுத்து வந்த அந்தப் பெண்கள், மோகனாங்கியைச் சுட்டி, அப்போது வெளிப்படையாகவே பழிக்கத் தொடங்கி விட்டனர். ‘எப்படியடீ உன்னால் பாடமுடியும்?’ என்ற அவர் களின் ஏளனமான கேள்வி மோகனாங்கியை வாட்டி வதைத்தது.

மோகனாங்கி சிலையானாள். அவள் தோழியர் கும்மாள மிட்டனர்; கைகொட்டிச் சிரித்தனர். அவர்களின் குறும்புகளால் அவளது வேதனைத் தீ சுவாலையிட்டு எரியத் தொடங்கிற்று. தூய சிவபக்தி அவளை அப்போது ஆட்கொள்ள, அவள் ஒரு முடிவுக்கு வந்தவளாகத் தன் வீட்டை நோக்கி விரைந்து நடந்தாள்.

## மூடிய கதவம்

“வாயிற் கதவைச் சார்த்திவிடு; வரதர் இன்றிரவு வந்தால் உள்ளே நுழைவதற்கு இடம் தரவேண்டாம், சிவன் கோயில் தாசியாகிய நான், வைணவரான அவருடன் திருவரங்கத்துக்

கோயில் பரிசாரகரான அவருடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்த உறவு அனைத்தும் இன்றோடு முடிந்தது" என்று தன் வேலைக்காரியிடம் கூறிவிட்டுப் படுக்கையில் படுத்தும் உறக்கங் கொள்ளாமல் தான் செய்த சிவ அபசாரச் செயலை நினைத்து வருந்தியவளாகத் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தாள் மோகனாங்கி.

வழக்கம்போல் வரதன் வந்தார். "மோகனா" என அன்புடன் அழைத்தவாறே கதவைத் தட்டினார். கதவு மெல்லத் திறந்தது. வேலைக்காரி எதிரே நின்றாள். தன் தலைவியின் நிலையைச் சுருக்கமாகச் சொல்லி விளக்கினாள்.

வரதன் நிலைகலங்கினார். தம்முடைய உறவுக்கு இடையூறாகத் தம் மதக்கொள்கை இருப்பதை நினைத்தார். ஒரு முடிவுடன் விரைந்து சென்றார். அந்த முடிவுக்கு வந்ததுமே அவர் முகம் தானாக மலர்ந்தது. அவரிடம் புதியதொரு மிடுக்கும் எழுந்தது. அவர் நடையிலே என்றுமில்லாத ஒரு விரைவும் காணப்பட்டது.

## அன்பின் ஆற்றல்

மறுநாள் பொழுது விடிந்ததும் வரதன் சம்புகேசுவரர் கோயிலை நாடிச் சென்றார். தாம் சிவசமயத்தை ஏற்றுக் கொள்ளுவதற்கு விரும்புவதாகக் கூறினார். அவருடைய முடிவைக் கேட்டு அங்கிருந்தோர் அதிசயித்தனர். ஆனாலும், வைணவர் ஒருவர், தாமே வலிய வந்து சிவநெறியை ஏற்க விரும்புவதை மகிழ்வுடன் வரவேற்றனர். அவருக்குச் சிவதீட்சை செய்துவைத்துச் சிவசமயத்திற் சேர்த்துக் கொள்வதற்கான சடங்குகளையும் உடனே செய்து வைத்தனர். வரதன் சைவசமயி ஆயினார். அவரைச் சம்புகேசுவரர் கோயிற் பரிசாரகராகவும் அவர்கள் நியமித்தனர்.

சிவ சின்னங்கள் உடல் முழுவதும் பொலிவுடன் விளங்கத் தம் அன்புடையாளைக் காணச் சென்றார் வரதன். அவள் கொண்ட ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. அகமும் முகமும் மலர அவரை வரவேற்று உபசரித்தாள். தனக்காக அவர் சைவராக மாறின செயல், அவள் உள்ளத்தே நிரம்பி நின்றது. அவரை ஆர்வத்துடன் தழுவி, அவரது காதலன்பின் பெருமைக்கு அடிமையாகிப் போற்றி இன்புற்றாள். வரதனும் கவலை தீர்ந்தவராகிக் களிப்பிலே திளைத்திருந்தார்.

## தேவி உபாசகன்

தேவி உபாசகன் ஒருவன் தனக்கு நிறைந்த புலமையைத் தந்தருளுமாறு ஒரு சமயம் தேவியை வேண்டுவானாயினான். திருவானைக் காவிலே, சம்புகேசுவரரின் தேவியாகக் கோயில் கொண்டிருக்கும் அம்பிகையின் திருமுன்னே, இரவு பகலாக

நோன்பு இயற்றியும் வந்தான். அவனுடைய கடுமையான உபாசனை, தேவியின் திருவுளத்தேயும் அவனுக்கு அருளவேண்டும் என்னும் கருணையினை உண்டாக்கிற்று.

தேவி, ஒரு சிறு பெண்ணாக வடிவு எடுத்தாள். இரவின் நடுச்சாம வேளையிலும் கண்ணுறங்காதவனாகத் தியானத்திலே இருந்த அந்த உபாசகனின் முன்னே சென்று நின்றாள். அவள் திருவாயிலே தாம்பூலம் நிறைய இருந்தது. அதனை அவள் மென்றுகொண்டும் இருந்தாள்.

"அன்பனே! நின் வாயைத் திற, இதனை நின் வாயில் உமிழ்கின்றேன். நீ நினைத்த சக்தியை அடையப் பெறுவாய்" என்றாள் தேவி.

அவன் கண்விழித்தான். எதிரே நின்ற சிறுபெண்ணின் வடிவைக் கண்டான். அவள் வாய் நிறையத் தாம்பூலத்தைக் குதப்பிக் கொண்டிருந்த நிலையையும் கண்டான். 'தன் தவத்தைக் கலைக்கவந்த பெண்' என்று தவறாகக் கருதி மயங்கினான். அவளைக்கடிந்து வெருட்டவும் முற்பட்டான்.

'ஏடீ, சிறு பெண்ணே! என்னிடம் வந்து என் தவத்தைக் கலைத்து, என்னைக் கெடுக்கவோ நினைத்தனை. உடனே இங்கிருந்து அகன்று போய்விடு. இன்றேல், நான் என்ன செய்வேனோ எனக்கே தெரியாது' என்று கூச்சலிட்டான்.

நிறைவான அறிவு பெறுவதற்கு உரிய நற்காலம் அவனுக்கு வரவில்லை என்பதைத் தேவி அறிந்தாள். தான்கொண்ட அந்த வடிவுடனேயே திரும்புவாளானாள். வழியிலே ஒரு மண்டபத்தே உறங்கியிருந்த வரதனைக் கண்டாள். அவனுடைய நல்லூழ் அவள் நினைவிற்பட்டது. அவன் அருகே சென்று, அவனைத் தட்டி எழுப்பினாள்.

## அருள் பெற்றான்

'இன்று எனக்குக் குடவரிசைப் பணி உளது. இரவில் வீடு திரும்புவதற்கு நெடுநேரமாகும். தங்கள் பணி முடிந்த பின், அம்மன் கோயில் மண்டபத்தே எனக்காகக் காத்திருங்கள். நானும் அங்கே வருகிறேன். இருவரும் ஒன்றாகவே வீட்டுக்குப் போய்விடலாம்' இப்படிச் சொல்லியிருந்தாள், அன்று மாலை மோகனாங்கி.

அவள் விருப்பப்படியே, தம் பணி முடிந்ததும், மண்டபத்தே சென்று வரதர் அவளுடைய வருகையை எதிர் பார்த்தபடி காத்திருந்தார். அங்கேயே படுத்து அயர்ந்து உறங்குபவரும் ஆயினார்.

மோகனாங்கி தான் சொன்னபடியே மண்டபத்திற்கு வந்தாள். அவர் உறங்கிக் கிடப்பார் என்று நினையாத அவள்.

அவரைக் காணாமையால், அவர் வீட்டிற்கே போயிருப்பார் எனக் கருதித் தானும் சென்றுவிட்டாள்.

கோயிலாரும், குடவரிசை முடிந்தபின், கோயிற் பெருங் கதவை மூடித் தாளிட்டு விட்டனர்.

அந்த நிலையிலேதான், தேவி அவரிடத்தே சென்றனள். வரதரை எழுப்பி, 'வாயைத் திற' என்றதும், அவர் வாய் தானாகவே எவ்வித மறுப்புமின்றித் திறந்து கொண்டது. தேவியும் தன் வாயின் தாம்பூலச்சாற்றை அவர் வாயில் உமிழ்ந்துவிட்டுச் சென்றாள்.

அந்தக் கணமே, வரதராகிய பரிசாரகரின் உள்ளத்தில் பெரியதொரு உத்வேகம் எழுந்தது. கடல் மடை திறந்தாற் போன்று அவர் கவிமழை பொழியலானார்; அவருடைய அந்தப் புதிய சக்தியை நினைந்ததும், அவருக்கே வியப்பாக இருந்தது. தேவியின் கருணைப் பெருக்கை எண்ணி அவளைப் பாமாலையால் போற்றினார்.

## காளமேகம் ஆயினார்

பொழுது விடிந்ததும், பழைய பரிசாரகராக வரதர் இல்லை. முத்தமிழ் தவழ்ந்துவரும் செஞ்சொற் கவிஞராக அவர் விளங்கினார். தம் அன்புக் காதலியிடம் சென்று தம்முடைய கவித்திறனைக் காட்டினார். தேவியின் திருவருளையும் விளக்கமாக உரைத்தார். அவளும் அதனைக் கேட்டதும், தேவியின் திருவருளைப் போற்றிப் பேரின்ப வயத்தினளாயினாள்.

அன்று முதல், **ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்** என்னும் நால்வகைக் கவிகளையும் பொழியும் **காளமேகமாக** ஆயினார் வரதன். தமக்கு அருள்பாலித்த தேவியின் கருணைக்கு நன்றியாகத் '**திருவானைக்கா உலா**' என்னும் அரியதொரு பிரபந்தத்தைச் சொற்சுவையும் பொருட் சுவையும் மிளிரும்படியாக இயற்றினார். உலாவின் இனிமை அறிவுடையோரை ஆட்கொள்ள, அன்று முதல் அனைவரும் **கவி காளமேகம்** என்றே அழைக்கலாயினர்.

## தல யாத்திரை

திருவானைக்காவிலே தம் அன்பிற்கு உரியவளான மோகனாங்கியுடன் சில காலம் இன்புற்று இருந்த பின்னர் தமிழகம் முழுவதும் சென்று தம் கவிதை வெள்ளத்தைப் பரப்பிவர வேண்டுமென்னும் பேரவா இவருக்கு எழலாயிற்று. அதனால், அவளிடத்தே பிரியாவிடை பெற்றுத் தமிழ் நாடெங்கனும் காளமேகம் செல்வாராயினார்.

செல்லும் இடங்களில் எல்லாம் கவிமழை பொழிந்து, தமிழகம் முற்றும் தம்மைப் போற்றப் புகழ்க்கொடியும் நாட்டினார். பின்னர், மீண்டும் திருவானைக்காவிற்கே வந்து மோனாங்கியுடன் இன்பமாக வாழ்ந்திருந்தார்.

## திருமலை ராயன்

தஞ்சை மாவட்டத்துக் கடற்கரையோரத்தே, நாகைக்குச் சில கல் தொலைவிலே விளங்கும் திருமலைராயன் பட்டினம் என்னும் ஊரினைத் தலைநகராகக்கொண்டு, அந் நாளையிலே ஒரு சிற்றரசன் ஆண்டு வந்தான். அவன் பெயர் திருமலைராயன்.

விஜயநகர மன்னர்கட்கு உட்பட்ட தலைவனாக அவன் அந்தப் பகுதியை ஆண்டுவந்தான் (கி.பி.1455-1468). அவன் தெலுங்கு மொழியினன். எனினும் அவன்பால் தமிழார்வமும் நிரம்ப இருந்தது. தமிழ்ப் புலவர்கள் பலரைத் தன் அவையிலே வைத்து அவன் உபசரித்து வந்தான்.

அவனுடைய தமிழன்பின் சிறப்பையும், வள்ளன்மை யினையும் கேட்டறிந்தார் காளமேகம். தாமும் சென்று அவனைக் காணவும், அவனைப் பாடி பரிசில்பெற்று வரவும் விரும்பினார். அந்த விருப்பத்தைச் செயற்படுத்துவதற்கான தக்க நேரத்தையும் எதிர்பார்த்திருந்தார்!

## தண்டிகைப் புலவர்கள்

மேற்சொன்ன திருமலைராயன் அவையிலே, அறுபத்து நான்கு புலவர்கள் 'தண்டிகைப் புலவர்கள்' என்ற சிறப்புடன் திகழ்ந்தனர். அரசனால் அளிக்கப்பெற்ற விருதான பல்லக்குகளிலே அமர்ந்து அவர்கள் செல்வார்கள். அதனால் தண்டிகைப் புலவர்கள் ஆயினர். அந்தச் சிறப்பும் செழுமையும் அவர்க ளிடத்தே புலமையைக் காட்டினும் செருக்கினையே பெருக்கிக் கொண்டிருந்தன. தம் அரசனின் உதவியை நாடிவரும் பிறபுலவர் களை எல்லாம் வஞ்சகமாக மடக்கிக் தலைகவிழச் செய்து, அதனால் அவர்கள் மகிழ்ச்சியடைந்து வந்தனர்.

வறுமையிலே வாடி அரசனின் உதவியை எதிர்பார்த்தவர்க ளாகவும், புலமையால் அரசனிடத்தே பரிசுபெறுவதை விரும்பியவ ராகவும் வந்த புலவர்களுட் பலர், இந்தத் தண்டிகைக் கூட்டத்தினரின் செயலினால் மனங்குன்றி, யாதும் பெறாதே வருத்தமுடன் திரும்பிச் செல்வாராயினர். இந்த கும்பலின் கொடுஞ்செயல் பற்றிய செய்தி தமிழகத்தின் எப்புறத்தும் பரவி இருந்தது. 'இவர்கள் செருக்கினை அடக்கி இவர்களுக்குத் தக்க பாடத்தைக் கற்பிக்க வேண்டும்' எனக் காளமேகம் நினைத்தார்.

## அதிமதுரக் கவி

இந்தத் தண்டிகைப் புலவர்களின் தலைவராகத் திகழ்ந்தவர் அதிமதுரக் கவிராயர் என்பவர். மிகவும் இனிதான கவிதைகள் இயற்றலிலே வல்லவர் அவர். அதனால் அரசன் அவருக்கு மனமுவந்து அளித்த விருதே 'அதிமதுரக் கவிராயர்' என்பது.

அந்தப் பெயருக்கு ஏற்றவாறே புலமைச் செறிவு உடையவராகவும் அதிமதுரம் விளங்கினார்.

இவருடைய சொந்த ஊர் 'திருக்கோயிலூர்' என்பர். இதற்குச் சான்றாகக் 'கோவன் மதுரா' எனஒரு செய்யுளில் வருவதனையும் காட்டுவர். திருக்கோயிலூர் மலையமான்களுக்கு உரியதாகப் புகழுடன் விளங்கியதோர் ஊரர்கும். இந்நாளில், தென்னாற்காட்டு மாவட்டத்தே உள்ளது. இவ்வூரவரான இப்புலவர், தம்முடைய கவிவன்மையினாலே. திருமலை ராயனின்பாற் சென்று, அவன் அன்பைப்பெற்று, அவன் அவைப் புலவர் தலைவராகவும் விளங்கிவந்தனர்.

புலமைச் செறிவுடையவர் எனினும், ஒருவர் அகந்தைப் பெருநோய்க்கு இடங்கொடுத்தால் அவர் புகழடைதல் கூடுமோ! அந்த நிலைக்கு அதிமதுரமும் உள்ளாயிருந்தனர். அரசன் அளித்த தகுதியும், செல்வ சம்பத்துகளும் இவரை அகந்தையுடையோராக ஆக்கியே அலைக்கழித்தன.

இவருடைய செருக்கை அடக்கி வெற்றி பெற வேண்டும் என்ற எண்ணமும் காளமேகத்திற்கு எழுந்தது. அது நிறைவேறத் தொடங்கும் காலமும், திருமலைராயன் பட்டினத்து முத்துக் குளித்தலின் தொடக்கத்துடன் வரலாயிற்று.

## முத்து வேண்டும்

நாட்டின் பல பகுதிகளிலும், திருமலைராயன் பட்டினத்து முத்துக்குளித்தலைப் பற்றிய செய்தி பரவலாயிற்று. அங்கு நன்முத்துக்கள் பல கிடைத்தும் வந்தன. அவற்றை வாங்கும் பொருட்டுப் பல திசையினரும் அங்குச் செல்வாராயினர். அப்படிச் சென்று வந்தவர்களுள் ஒருவர் மோகனாங்கியிடம் சென்று, தாம் கொண்ட சிறந்த முத்துக்களைக் காட்டினர். அவற்றைக் கண்டதும், அவளுடைய உள்ளத்தே ஆசைப்புயல் கால்கொள்ளலாயிற்று, அவள் பெண் அல்லவா!

திருமலைராயனைக் கண்டு, அவனால் அளிக்கப் பெறும் பரிசினைப் பெற்றுவர வேண்டும் என்ற ஆர்வமும், அவன் அவைத் தலைவரான அதிமதுரத்தை வென்று செருக்கொழித்து வரவேண்டும் என்ற நினைவும் கொண்டிருந்த காளமேகத்திடத்தே, மோகனாங்கி, ஒருநாள் தன் முத்து விருப்பத்தையும் பக்குவமாகச் சொன்னாள்.

"சுவாமி! திருமலைராயன் பட்டினத்திற்குப் போய் ஒரு முத்துமாலைக்குத் தேவையான அளவு முத்துக்கள் பெற்று வாருங்களேன்" என்றாள் அவள். அவரும் அதற்கிசைந்தவராக அன்றே தம் பயணத்தைத் தொடங்கினார்.

### கண்ட சாட்சி

பல நாட்கள் நடந்து, பல ஊர்களையும் கடந்து, ஒரு நாள் காலை வேளையிலே திருமலைராயன் பட்டினத்தை அடைந்தார் காளமேகம். அந்த ஊரின் வளமையைப் பறைசாற்றுவன போல மாடிவீடுகள் இருபுறமும் வானத்தைச் சென்று முத்தமிட முயல்வனபோலத் திகழ்ந்த ஒரு தெரு வழியே அவர் சென்று கொண்டிருந்தார். ஒரு பெரிய ஊர்வலம் அப்போது எதிரே வந்துகொண்டிருந்தது.

மங்கல பேரிகைகள் ஜாம் ஜாமென்று முழங்க, சுற்றிலும் மக்கள் ஆரவாரத்துடன் வாழ்த்திப்போற்ற, ஆடம்பரமாக அலங்கரிக்கப்பெற்ற பல்லக்கு ஒன்றிலே அமர்ந்தபடி, அதிமதுரக் கவிராயர் அந்த ஊர்வலத்தின் நடுநாயகமாக வந்து கொண்டிருந்தார். அவரைத் தொடர்ந்து அறுபத்து மூன்று பல்லக்குகளிலும் புலவர்கள் அமர்ந்து வந்தனர். கட்டியக்காரன், 'அதிமதுரக் கவிராய சிங்கம் பராக்' என்று கூறிவர, அந்த முழக்கம் அனைவராலும் தொடர்ந்து முழக்கப்பெற்ற முழக்கொலி வானதிர எழுந்து கொண்டிருந்தது.

தமிழ்வாணர்கள் செல்லும் தகவுடைய அந்தப் பெருமிதத்தைக் கண்ட கவிஞரின் உள்ளம் பூரிப்படைந்தது. திருமலைராயனின் தமிழார்வத்தை உள்ளத்தாற் போற்றினார். 'தமிழறிந்தாரின் நல்வாழ்வே தமிழின் தமிழரின் நல்வாழ்வாகும்' என்பதனை உணர்ந்து, செயலிலேயும் அதை நிறைவேற்றி வந்த திருமலைராயனின் செயல் அவரைப் பெரிதும் ஆட்கொண்டது. நடுத்தெருவில் தம்மை மறந்தவராக மெய்மறந்து நின்று கொண்டிருந்தார் காளமேகம்.

### எதிர்பாராத சம்பவம்

கட்டியக்காரர்களுள் ஒருவன், தமிழ் மயக்கத்தால் மெய் மறந்து நின்ற காளமேகத்தைக் கண்டான். அனைவரும் முழக்கும் அதிமதுரக் கவிராய சிங்கத்தின் புகழ் வாசகத்தை அவர் கூறாது நிற்பதறிந்து வெகுண்டான். அவரருகே சென்று, தன் கைத்தடியினாலே தட்டி அவர் மயக்கத்தைக் கலைத்து, "நீயும் கவிராயரைப் புகழும் முழக்கத்தைப் பிறருடன் முழக்குவாயாக" என்றான்.

காளமேகம் வெகுண்டார். எனினும் நோவவேண்டியது அவனையன்று என்பதனை அறிந்த அவர்,

**அதிமதுர மென்றே அகிலம் அறியத்**<br>
**துதிமதுர மாயெடுத்துச் சொல்லும்-புதுமையென்ன**<br>
**காட்டுச் சரக்குலகிற் காரமில் லாச்சரக்குக்**<br>
**கூட்டுச் சரக்கதனைக் கூறு.**

என்ற செய்யுளை உடனே சொன்னார். 'அதிமதுரம் என்பது ஒரு காட்டுச் சரக்கு; அதை எதற்காக இப்படிப் போற்றி முழக்க வேண்டும்?' என்ற ஏளனம் செய்யுளில் எதிரொலித்தது.

கட்டியக்காரன் அவரைப் புலவர் என்று அறிந்து கொண்டான். அந்தச் செய்யுளையும் நடந்த சம்பவத்தையும் அதிமதுரத்திடம் சென்று சொன்னான். அவர் அதனைக் கேட்டதும், ஏளனம் செய்தவரைத் தலைகுனிய வைக்க எண்ணினார். அவர் யாவரென அறிந்து வருமாறு அந்த ஏவலனைப் பணித்துவிட்டு, ராஜசபையை நோக்கிச் சென்றார்.

## சூழ்ச்சிக்கு முனைதல்

அரசவையினை அடைந்த அதிமதுரம், வழியிடையே தாம் கண்ட புதிய கவிராயரையும், அவர் சொன்ன செருக்கான அந்தச் செய்யுளையும் துண்டிகைப் புலவர்கட்கும் அரசனுக்கும் மிக வருத்தத்தோடு எடுத்துச் சொன்னார். அவரை எப்படியும் அவமானப்படுத்தி அனுப்பவேண்டும் என்றும் எச்சரிக்கை செய்தார்.

காளமேகத்தைப்பற்றி அறியச் சென்ற கட்டியக்காரன் அவைக்கு வந்தான், கவிராயரே தந்த ஒரு சீட்டுக்கவியினை அதிமதுரத்திடம் தந்து நின்றான். அதனைப் படித்ததும் அதிமதுரம் மேலும் சினம் கொண்டார், அதனைப் படித்த அரசனும் அறிந்த பிறரும் அவ்வாறே ஆயினர்.

## அவையில் வந்தனர்

'அந்தப் புலவரை உடனே இங்கு கொண்டு வருக. நம் அவைப்புலவர் பெருமானைப் பழித்த அவருக்குத் தகுந்த பாடம் கற்பிக்க வேண்டும். கட்டி இழுத்தாயினும் கொணர்க' என்று ஆணையிட்டுத் தன் ஏவலரைப் போக்கினான் திருமலைராயன்.

அவர்களும் காளமேகத்தை அணுகி அரசனின் ஆணையைக் கூற அவரும் நிகழ்ந்திருக்கும் குமுறலை எண்ணியவாறே அவர்களைத் தொடர்ந்தார்.

அரசவையிலே நுழைந்தார் காளமேகம். மன்னனை வாழ்த்தினார். தாம் கொண்டு வந்திருந்த எலுமிச்சம் பழத்தை அவனிடம் அளித்தார். அதனை வாங்கிய அவன், அவருக்கு இருக்கை அளித்து உபசரியாமல் வாளாயிருந்தான்.

காளமேகம் அதனைக் கண்டு சிரித்தார். அதிமதுரத்தின் சூழ்ச்சி வலையிலே அரசனும் சிக்கியிருந்த உண்மையைக் கண்டார். தமக்கு உதவும் தேவி அகிலாண்டவல்லி கோயில் கொண்டிருக்கும் திசையை நோக்கிக் கரங்குவித்து தியானித்தார். அதன்பின் தமக்கொரு இருக்கை அருளுமாறு கலைமகளை வேண்டிப் பாடினார்.

அப்போது திருமலைராயன் வீற்றிருந்த சிம்மாசனமே ஒருபுறமாக வளர்ந்து பெருகிற்று. பெருகி வளர்ந்த அந்தப் புறத்தே சென்று கம்பீரமாக அமர்ந்துகொண்ட காளமேகம், தமக்குத் துணை செய்த கலைவாணியை மீண்டும் போற்றினார். கண்டோர் அனைவரும், அவருடைய தெய்வீக சக்தியைக் கண்டு, எதுவும் சொல்லுவதற்கு வாயெழாமல் திகைப்புற்றிருந்தனர்.

காளமேகமோ அங்கிருந்த புலவர்களைச் சுட்டி, 'நீவிர் யாவரோ?' என்று மிகவும் கனிவாகக் கேட்டனர். அவர்கள் 'யாம் கவிராயர்கள்' என்றனர். 'கவிராயர்' என்ற பதத்தினைக் 'குரங்குகள்' என்று பொருள்கொண்டு காளமேகம் கேலியாக உரையாடப் புலவர்கள் பெரிதும் சீற்றங்கொண்டனர்.

'நீவிர் யாவரோ?' என்று அவர்கள் கேட்க, இவர் 'யாமே காளமேகம்' என, அதனைக் 'கார்மேகம்' எனப்பொருள் கொண்டு அவர்களும் ஏளனம் செய்தனர். அதனைக் கேட்டதும் கவிபாடுதலில் தாம் காளமேகம் என்று ஒரு செய்யுளைக் கவிஞர் சொல்லினர்.

அதிமதுரக் கவிராயர், 'எம்போல் நீவிர் விரைவாகக் கவிபாட வல்லீரோ? என்னும் பொருள்பட, 'மூச்சு விடு முன்னே' என்ற செய்யுளைச் சொல்லக் காளமேகம் 'அதனினும் விரைவாகப் பாடுவோம்' என்று பொருள்படும் 'அம்மென்னும் முன்னே' என்ற செய்யுளைச் சொல்லினர்.

**அரிகண்டம்**

காளமேகத்தின் செயலினால் சினம் மிகுதியாகப் பற்றித் தம்மை எரிக்க, அதிமதுரம், 'நீர் அரிகண்டம் பாடி எம்மை வெற்றிபெற இசைகின்றீரா?' என்றனர்.

'அரிகண்டமோ? அதன் முறைமை எப்படியோ? சொன்னால், யாம் அதன்பின் எம் இசைவைச் சொல்வோம்' என்றனர் காளமேகம்.

"கழுத்திலே கத்தியைக் கட்டிக்கொள்ள வேண்டும். கேட்கும் குறிப்புப்படி உடனுக்குடன் செய்யுள் சொல்ல வேண்டும்; சொற்பிழை, பொருட்பிழை, இலக்கணப்பிழை இல்லாமலும் இருக்க வேண்டும். பிழைபட்டால் கழுத்து வெட்டப்படும்; வென்றால் பாராட்டப் பெறுவார்கள்" என்று விளக்கினார் அதிமதுரம்.

அதனைக் கேட்டுக் காளமேகம் கதிகலங்கிப் போவார் என்று எதிர்பார்த்த அதிமதுரம் திடுக்கிட, 'அரிகண்டம் ஒரு பெரிதோ? 'யாம் எமகண்டமே பாடி உங்களை வெல்வோம்' என்று காளமேகம் முழங்கினார்.

'எமகண்டமோ' என்ற திகைப்புடன் அதிமதுரம் வினவ, காளமேகம் அதனை விளக்கினார்.

### எம கண்டம்

பதினாறடி நீளம், பதினாறடி அகலம், பதினாறடி ஆழம் உடையதாகப் பூமியிலே ஒரு பெரிய குழியினை முதலிலே வெட்ட வேண்டும். அதன் நான்கு மூலைகளிலும் பதினாறடி உயரமுள்ள இரும்புக் கம்பங்கள் நாற்றப் பெறும். அவற்றின் மேலாக, நாற்புறமும் சட்டமிட்டு, அச் சட்டங்களின் நடுப்பகுதியிலே இரு குறுக்குச் சட்டங்களை இடவேண்டும். அந்தக் குறுக்குச் சட்டங்கள் சந்திப்பதும், குழிக்கு நடுவே மேலேயிருப்பதுமான பகுதியிலே இரும்புச் சங்கிலிகளால் தாழவிடப்பெற்ற உரியொன்று தொங்கும்.

குழியினைப் பருத்த புளியங்கட்டைகளால் நிரப்பி, அதன் நடுவிடத்தே ஒரு பெரிய எண்ணெய்க் கொப்பரையை வைத்து, அதனுள் அரக்கு, மெழுகு, குங்குலியம் போன்றவைகளை இடவேண்டும், கட்டைக்கு நெருப்பிட்டு, அந்த எண்ணெய்க் கொப்பரை கொதித்துக் கொண்டிருக்கும் பருவத்திலே, போட்டி யிடுபவர் அந்த உரியிற் சென்று அமர்ந்து கொள்வார்.

நயமான எஃகினாலே அடித்ததும், கூர்மையாகச் சமைத்ததும், பளபளவென்று தீட்டப்பெற்றதுமான எட்டுக் கத்திகளைச் சங்கிலியிற் கோர்த்து, அப்படி உரியிலிருப்பவர் தம் கழுத்தில் நான்கும், இடையில் நான்குமாகக் கட்டிக் கொள்வார்.

குழியின் நான்கு முனைகளிலும் நாற்றியிருக்கிற தூண்களருகே நான்கு யானைகளை நிறுத்தி, அந்தக் கத்திகளிற் கோர்த்த சங்கிலிகளை அவற்றின் துதிக்கைகளினாற் பற்றியிருக்கும் படியும் செய்யவேண்டும்.

இந்த நிலையிலே, உரியிலிருப்பவர், கொடுக்கப்பெறும் குறிப்புகளின்படி எல்லாம் அரை நொடி அளவிற்குள்ளாக ஏற்ற செய்யுட்களைச் சொல்லி வருவார். அச் செய்யுட்கள் பிழைபட்டாலோ, அன்றி அவர் செய்யுளே கூறத் தவறினாலோ, யானைகள் பற்றியிருக்கும் சங்கிலிகளை இழுக்க கழுத்தும் இடையும் துண்டிக்கப்பட்டு, அவர் உடல் கொதித்துக் கொண்டிருக்கும் எண்ணெய்க் கொப்பரையுள் வீழ்த்தப்படும், இதுவே எமகண்டம் பாடுவது என்பது. இதனை நீர் செய்தற்கு வல்லீரோ?' என்றனர் காளமேகம்.

### வென்ற கவிஞர்

அதிமதுரத்திற்கு அதனைக் கேட்டதும் நடுக்கம் எடுத்தது. அத்தகைய போட்டியை நினைக்கவே அச்சம் எழுந்தது. காளமேகத்தையே அதனிடத்து ஈடுபடுத்திவிட நினைத்தார்.

"எம்மைப் பாடுவீரா? எனக் கேட்கும் நீர்தாம் அங்ஙனம் பாட வல்லீரோ?" என்றார்.

காளமேகம் அதற்கு இசையவே, திருமலைராயன் போட்டிக்கான ஏற்பாடுகளை எல்லாம் விரைவாகச் செய்தான். போட்டி பற்றிய செய்தி நாற்றிசையும் பரவிற்று. திருமலைராயன் பட்டினத்தே நிகழும் அந்த வைபவத்தைக் கண்டு களிப்பதற்கெனப் பெரியதொரு புலவர் கூட்டமும் வந்து திரண்டது.

போட்டியும் தொடங்கிற்று. அதிமதுரமும் அவரைச் சேர்ந்த தண்டிகைப் புலவர்கள் அறுபத்து நால்வரும் பற்பல குறிப்புகளைக் கொடுத்தனர். அவற்றுக்கு எல்லாம் ஏற்ற செய்யுட்களைச் சொல்லியபடி கம்பீரமாக வீற்றிருந்தார் காளமேகம். போட்டியில் அவர் வெற்றிபெற்றார் என்றும் அறிவித்தனர்.

பேர்ட்டியில் வெற்றிபெற்ற பின்னரும், அவரைப் போற்றி உபசரியாது அலட்சியப்படுத்தினான் திருமலைராயன். தன் அவைப் புலவர்களை அவர் அவமானப் படுத்திவிட்டார் என்ற நினைவே அவன்பால் நிரம்பி நின்றது.

காளமேகம் அரசனின் செயலைக்கண்டு மனங்குமுறினார், இவர் கவிதையுள்ளம் கனலும் உள்ளமாயிற்று. அவ்வூர் அப்படியே அழியுமாறு வசை பாடினார். தாம் விரும்பிவந்த முத்துக்களையும் மறந்து வெளியேறினார். பல இடங்கட்கும் சென்று மீண்டும் திருவாரூர் வந்து தியாகராசப் பெருமானை வழிபடுபவராகச் சில நாட்கள் அவ்விடத்தே தங்கியிருந்தார்.

**மண்தின்ற பாணம்**

அப்படித் தங்கியிருந்த நாளிலே, அதிமதுரக் கவிராயரும் திருவாரூர்ப் பெருமானைத் தரிசிக்க வந்திருந்தார். பெருமானைப் போற்றிச் செய்யுள் செய்ய நினைத்த அவர் 'நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம் பாணந்தான்,' என்று தொடங்கி, மேலே முடிக்கும் வகையறியாதவராய் மதிற்சுவரில் எழுதிவிட்டுச் சென்றிருந்தார்.

பிற்றைநாள் வந்தவர், தம் செய்யுள் முடிக்கப் பெற்றிருந்ததைக் கண்டதும் வியந்து நின்றார்.

**நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்**
**பாணந்தான் மண்தின்ற பாணமே-தாணுவே**
**சீராரூர் மேவும் சிவனேநீ யெப்படியோ**
**நேரார் புரமெரித்த நேர்.**

என்ற அந்தச் செய்யுளின், 'மண் தின்ற பாணம்' என்ற வாசகம் அவரை அப்படியே மெய்ம்மறக்கச் செய்தது. அதனை எழுதியவர் காளமேகமே என்று அறிந்த அவர், அவர் புலமைச் செறிவை

வியந்து உளமாறப் பாராட்டி உவந்தார். தாமும் பிற புலவர்களும் சேர்ந்து அவரை எதிர்த்து வாதிட்டதெல்லாம் அவர் நினைவில் அலையலையாக எழுந்தன, கவிராயரின் சாபத்தினாலே மண் மாரியுற்று அழிந்த திருமலைராயன் பட்டினத்தையும் நினைத்துக் கொண்டார். தம்முடைய தவறான போக்கே அதற்கெல்லாம் காரணமாயிற்று என நினைத்து வருந்தினார். அவர் உள்ளத்தே காளமேகத்தின்பாற் கொண்டிருந்த பகைமையும் மறையலாயிற்று. புதியதொரு அன்பும் மதிப்பும் ஊற்றெடுக்க லாயிற்று. அவரைக் காண விரும்பி அவர் தங்கியிருந்த இடத்திற்கு விரைந்தார். ஆனால், அதற்குள் காளமேகம் புறப்பட்டு வேற்றூர் சென்று விட்டதறிந்தார், வருத்தமுடன் திரும்ப வேண்டியதாயிற்று. காலமும் சூழ்நிலையும் மனத்து எழுகின்ற ஆணவ நினைவுகளை எப்படியோ மாற்றிவிடுகின்றன. அந்த அதிசய சக்திகள், அதிமதுரத்தையும் காளமேகத்தைப் பாராட்டும் உயரிய நிலைக்குக்கொண்டு செலுத்தின.

## மறைவும் துயரமும்

திருவாரூரிலிருந்து புறப்பட்டார் காளமேகம். பல ஊர்களுக்கும் சென்று வழிபட்டவராகத் திருவானைக்காவினை முடிவிற்சென்று சேர்ந்தனர். அங்கே மோகனாங்கியிடம் நடந்ததைக் கூறினார். அவளும் முத்தினை மறந்து அவருடைய செயலைப் போற்றிப் புகழ்ந்தாள். இருவருடைய வாழ்வும் இப்படியே சிலகாலம் இன்பமுடன் நடந்து கொண்டிருந்தது.

காளமேகத்திற்கு வயதுமுதிர்ச்சியின் தளர்வும், சோர்வும் தொத்திக்கொள்ளத் தொடங்கின. கவிமழை பொழிந்த காளமேகம், கவிச்சுவையால் கல்விவல்லோரையும் தலை வணங்கிப் போற்றச்செய்த புலவர்பெருமான், 'வசை பாட காளமேகம்'என்ற இசையோடு வாழ்ந்த தமிழ் வீறு உடையார், ஒரு நாள் உடற்கூட்டைவிட்டு நீங்கினர். மோகனாங்கி மட்டும் அன்று கதறிக் கண்ணீர் சொறியவில்லை, அவருடைய மோகனக் கவி இனிமையிலே திளைத்த தமிழகம், தமிழ்ப் புலவர் உலகம், முழுவதுமே கதறிக் கண்ணீர் பெருக்கியது.

## அதிமதுரப் பாடல்

அதிமதுரக் கவியின்காதுகளிலும் இந்தத் துயரச் செய்தி சென்று விழுந்தது. வேதனைக் கடலிலே சிக்கி அவர் மனம் மீளாத்துயருற்றது. அப்போது அவர் பாடிய கவிதை மிகவும் உருக்கமானது.

**வாச வயல் நந்தி வரதா திசையனைத்தும்**
**பூசு கவிகாள மேகமே-பூசுரனே**
**விண்தின்ற வெவ்வழலில் வேகுதே பாவியேன்**
**மண்தின்ற பாணமென்ற வாய்.**

என்பது அந்தச் செய்யுள். 'மண் தின்ற பாண மென்ற வாய்' என்று சொல்லித் துயருற்றுப் புலம்பினார் அவர்.

இப்படித் தமிழ் நாவலர் சரிதையிலே விளங்குகிறது இந்தத் திருவாரூர் நிகழ்ச்சி. இது இரட்டையர்கட்கும் இவர்க்கும் நடைபெற்றதாகவும் சிலர் கூறுவர்.

கவிராயர், திருமலைராயன் அவையிலும், பற்பல சமயங் களிலும் சொல்லிய தனிச் செய்யுட்கள் பலவும் இந்நூலின்கண் மிளிர்கின்றன. அவற்றைக் கற்று இன்புற முற்படுவோம்.

காளமேகப்புலவர் மூவர் அம்மானை, திருவானைக்கா உலா, சித்திர மடல், பரப்பிரம்ம விளக்கம் என்னும் நூல்களையும் செய்தனர் என்பர். அம்மானை முற்றவும் வெளிவரவில்லை. இவை எல்லாம் தொகுக்கப் பெற்று ஒரே தொகுதியாக அச்சிட்டு வெளிவரவேண்டும். இந்த ஆசைநிறைவேற இறையருள் துணை நிற்கும் என்று நம்புகின்றேன்.

அண்மையில், தென்னாற்காடு மாவட்டத்து எண்ணாயிரம் என்னும் சிற்றூரைச் சேர்ந்த செல்வராசர் என்னும் அன்பர் ஒருவர் வந்தார். தொல்பொருள் துறை அறிஞர் திரு இரா. நாகசாமி அவர்களின் கட்டுரையோடுகூடிய கல்வெட்டு இதழை என்னிடம் கொணர்ந்து தந்தார். காஞ்சி காமாட்சி கோயில் கல்வெட்டு அது.

**மண்ணில் இருவர் மணவாளர் மண்ணளந்த**
**கண்ணனவ னிவன்பேர் காளமுகில்-கண்ணன்**
**அவனுக்கூர் எண்ணில் அணியரங்கம் ஒன்றே**
**இவனுக்கூர் எண்ணா யிரம்**

என்று காணப்படுகின்றது. இது காளமேகம் பாடல். இதன்படி காளமேகம் 'எண்ணாயிரம்' என்னும் நடு நாட்டுச் சிற்றூரினர் என்கின்றது அந்தக் கட்டுரை. காளமேகம் பிறந்த ஊர் எது வானாலும் அவர் தமிழ் நாட்டின் எல்லா ஊருக்குமே உரியவர் என்பதையே நினைக்கவேண்டும்.

இந்நூல், பல பதிப்புக்கள் வெளிவந்து, இப்போது புதிய பதிப்பாக வெளிவருகின்றது.

தமிழன்பர் பேருலகம் இதனை விரும்பி வரவேற்கும் என நம்புகிறேன். தமிழ்க் கவிநயம் காண நினைப்பார்க்கு இஃதோர் நல்லமுதம் ஆகுமென்றும் எண்ணுகின்றேன்.

**புலியூர்க் கேசிகன்**



## காளமேகப் புலவர் தனிப்பாடல்கள்

# உள்ளே...

# காளமேகப் புலவர் தனிப்பாடல்கள்

## 1. கடவுள் வணக்கம்

### விநாயகப் பெருமான் துதி

திருவானைக்கா விநாயகர் மீது பாடிய செய்யுள் இது. விநாயகப் பெருமானைப் போற்ற அனைத்து நன்மைகளும் வந்தெய்தும் என்கிறார் கவிஞர்.

**ஏரானைக் காவிலுறை யென்னானைக் கன்றளித்த**
**போரானைக் கன்றுதனைப் போற்றினால்-வாராத**
**புத்திவரும் பத்திவரும் புத்திரவுற் பத்திவரும்**
**சத்திவரும் சித்திவரும் தான்.** (1)

ஏர் ஆனைக்காவில் உறை என் ஆனைக்கு - திரு ஆனைக்காவிலே கோவில் கொண்டிருக்கும் என் அன்னையாகிய பெண் யானை வடிவெடுத்து நின்ற உமையம்மைக்கு, அன்று அளித்த போர் ஆனைக்கன்று தனை - அந் நாளிலே சிவபெருமான் அளித்தருளிய பேராற்றல் வல்ல ஆனைமுகனாகிய பிள்ளையா ரப்பனை, போற்றினால் - போற்றி வழிபட்டால், வாராத புத்திவரும் - பிறவற்றான் வந்தடைதற்கில்லாத அறிவுத்திறன் எல்லாம் வந்து வாய்க்கும்; பத்தி வரும் - இறைவன் மீது பக்திமையும் வந்து சேரும்; புத்திர உற்பத்தி வரும் - நல்ல புத்திரர்களைப் பெறுகின்ற பேறும் வந்தடையும்; சத்திவரும் - சகல ஆற்றலும் உண்டாகும். சித்திவரும் - எடுத்த காரியங்கள் அனைத்திலும் வெற்றியும் அட்டமா சித்திகளும் வந்து வாய்க்கும்.

'வாராத' என்ற சொல்லை புத்தி பத்தி புத்திர உற்பத்தி சத்தி சித்தி என்றம் எல்லாவற்றுடனே கூட்டி, பிறவற்றான் வந்துறாத அவை அனைத்தும் ஆனைமுகனைப் போற்றினால் வந்து வாய்க்கும் என்று கொள்க. இதனால், வாழ்க்கை நலத்திற்கு வேண்டிய அனைத்தையுமே விநாயகப்பெருமான் தருவான்; அவனைத் தொழுதால் அனைத்தையுமே அடையலாம் என்பதும் கூறினார்.

### கலைமகள் துதி

திருமலைராயன் தன் அவையிடத்தே வந்த கவிஞருக்கு இருக்கை தந்து உபசரியாமல் அலட்சியப் படுத்தினான். கலைவாணியின் அருளால் அவனுடைய சிம்மாசனமே வளர்ந்து பெருகிக் காளமேகத்திற்கு இடங்கொடுத்தது. கலைவாணியின் அந்த அருளை நினைந்து சொல்லிய செய்யுள் இது.

**வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு**
**வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள்-வெள்ளை**
**அரியா சனத்தி லரசரோ டென்னைச்**
**சரியா சனம்வைத்த தாய். (2)**

*வெள்ளைக் கலை உடுத்து, வெள்ளைப் பணிபூண்டு, வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் - வெள்ளை நிற ஆடையை உடுத்தவளாகவும், வெண்ணிற அணிகளைப் பூண்டவளாகவும், வெள்ளைத் தாமரைப் பூவினிலே வீற்றிருப்பவளான கலைவாணியே, வெள்ளை அரியாசனத்தில் - மாசற்ற சிம்மாசனத் திலே, அரசரோடு என்னைச் சரியாசனம் வைத்த தாய் - அரசராகிய இத் திருமலைராயனோடு என்னையும் சமநிலையிலே வீற்றிருக்கும் படியாக அருளிச் செய்த தாயாவாள். 'அவள் மலரடியைப் போற்றுகின்றேன்' என்பது கருத்து.*

*தம்மை மதித்து உபசரியாத மன்னவன் நாணுமாறு அவனுக்குச் சரியாகத் தம்மை அமரவைத்த கலைவாணியைத் துதிக்கிறார். கலைவாணியின் அருள் தமக்கு இருக்கிறதென்ற உண்மையை அரசனும் அந்த அவையினரும் அறியப் புலப் படுத்தியதும் ஆம். தன் மகன் துயருறக் காணப்பொறுக்காத தாய்மை உளத்தினையே கலைவாணியும் அவ்விடத்தே மேற்கொண்டாளாதாலால் அவளையும் 'தாய்' என்றனர்*

*'அரசரோடு சரியாசனம் வைத்த' என்றதால், பிற புலவர்களினுங் காட்டில் தம்மை உயர்த்திவைத்த சிறப்பையும் வியந்து நன்றி பாராட்டுகிறார் எனலாம்.*

## 2. திருமலைராயன் பட்டினத்தே கூறிய செய்யுட்கள்

*[இந்தப் பகுதியில், திருமலைராயனைக் காணச் சென்ற புலவர் பெருமான் பலருடனும் வாதிட்டுக் கூறிய செய்யுள்களும், அவனைப் புகழ்ந்து கூறியவையும், முடிவில் மனங்கொதித்து மண்மாரி பெய்யப் பாடியவையும் எல்லாம் காணப்பெறும்.*

*காளமேகம் திருமலைராயனைக் கண்டு பாடிப் பரிசில் பெற்று வரவே விரும்பினார். எனினும், சூழ்நிலை எப்படி எப்படியோ மாறியது. அவரை எப்படியாவது தலைகவிழச் செய்ய வேண்டும் என்று ஒரு புலவர் கூட்டமே முற்பட்டது. தம் கவி வன்மையினாலே அவர்களை வென்று சிறப்பு எய்தினார் காளமேகம்.]*

**கூட்டுச் சரக்கு எது?**

*'அதி மதுர கவிராயர் பராக்' என்று கூறியபடி கட்டியத்துடன் செல்லும் புலவரை நோக்கி, அவரை ஏளனஞ் செய்து கூறியது இச்செய்யுள். "பிற சரக்குகளோடு கூட்டினாலன்றிப் பயன்படுவதல்லவே அதிமதுரம்! - எதனோடு கூடியதால் உமக்கிந்தச் சிறப்பும் செல்வாக்கும் ஏற்பட்டது?" என வினவுகிறார் கவிஞர். இதனால் திருமலைராயனின் தயவினாலேயே அவருக்கு அந்தத் தகுதி உண்டானதே அல்லாமல், உண்மையாக அவர் அத்தகுதிக்கு உரியவரல்லர் எனப் பழித்ததும் ஆகும்.*

**அதிமதுரமென்றே அகில மறியத்**
**துதிமதுர மாயெடுத்துச் சொல்லும்-புதுமையென்ன**
**காட்டுச் சரக்குலகிற் காரமில் லாச்சரக்கு**
**கூட்டுச் சரக்கதனைக் கூறு,** (3)

*அகிலம் அறிய அதிமதுரம் என்றே துதி மதுரமாய் எடுத்துச் சொல்லும் புதுமை என்ன? - உலகத்தார் எல்லாரும் அறியும் படியாக அதிமதுரம் என்ற போற்றுதலை இனிதாக எடுத்துக் கூறுகின்ற இந்தப் புதுமைதான் என்னவோ? காட்டுச்சரக்கு, உலகிற் காரணமில்லாச் சரக்கு, கூட்டுச் சரக்கு, அதனைக் கூறு - அதிமதுரம் என்பது ஒரு பகட்டான சரக்கு, இந்த உலகத்திலே காரம் கொஞ்சமும் இல்லாத சரக்கும் அது. (அதற்கு இத்துணைச் சிறப்பு இங்கே என்றால்) அதனைத் தருமாறு அதனுடன் சேர்த்த சரக்குதான் யாதோ? அதனை எமக்குக் கூறுவீராக.*

*காட்டுச்சரக்கு - காட்டிலிருந்து கிடைக்கும் சரக்கும் ஆம். காரம் - தனிக்குணம்; அதாவது பயன்படும் தன்மை 'தற்புகழ்ச்சி வேண்டாமை' புலவர்தம் இயல்பு. அதற்கு மாறுபட்டது அதிமதுரத்தின் செயல்; அதனால் புதுமை என்றனர். 'கூட்டுச் சரக்கு' என்றது, திருமலைராயனின் அரசவைப் புலவர் குழுவின் தலைவர் என்பதனைச் சுட்டியதாம்.*

**காளமேகம் யானே!**

*அதிமதுரக் கவியும் பிறரும் காளமேகத்தின் கவித்துடுக்கைக் கண்டு ஆத்திரம் கொண்டனர். 'நீவிர் யாவரோ?' என அவர்கள் கேட்கத் தம்மை இவ்வாறு அவர்கட்கு அறிமுகப்படுத்துகிறார் கவிஞர். இது, மன்னவனின் அவையிலே நிகழ்ந்தது ஆகலாம்.*

**தூதஞ்சு நாழிகையி லாறுநா ழிகைதனிற்**
**சொற்சந்த மாலை சொல்லத்**
**துகளிலா வந்தாதி யேழுநா ழிகைதனிற்**
**றொகைபட விரித்து ரைக்கப்**
**பாதஞ்செய் மடல்கோவை பத்துநா ழிகைதனிற்**
**பரணி யொரு நாண்முழுவதும்**

**பாரகா வியமெலா மோரிரு தினத்திலே**
**பகரக்கொ டிகட்டி னேன்**
**சீதஞ்செ யுந்திங்கண் மரபினா னீடுபுகழ்**
**செய்யதிரு மலரா யன்முன்**
**சீறுமா றென்றுமிகு தாறுமா றுகள்செய்**
**திருட்டுக் கவிப்புலவ ரைக்**
**காதங் கறுத்துச் சவுக்கிட் டடித்துக்**
**கதுப்பிற் புடைத்து வெற்றிக்**
**கல்லணையி னொடுகொடிய கடிவாள மிட்டேறு**
**கவிகாள மேகம் நானே.** (4)

*தூது அஞ்சு நாழிகைகளில் சொற்சந்த மாலை ஆறு நாழிகைதனில் சொல்ல - தூது என்னும் வகைப் பிரபந்தத்தை ஐந்து நாழிகைகட்கு உள்ளாகவும், சொல்லப்படும் சந்தமாலை என்பதனை ஆறு நாழிகைகட்கு உள்ளாகவும் சொல்லவும்;*

*துகள் இலா அந்தாதி ஏழு நாழிகைதனில் தொகைபட விரித்து உரைக்க - குற்றமற்ற அந்தாதி வகைகளை ஏழு நாழிகைப் பொழுதிலே, அவை தொகைப்பட்டு வருமாறு விரிவாக உரைக்கவும்;*

*பாதம்செய் மடல் கோவை பத்து நாழிகைதனில் பரணி ஒரு நாள் முழுவதும், பார காவியம் எல்லாம் ஓரிரு தினத்திலே பகர - பகுதிப்படச் செய்வனவான மடல் கோவை ஆகியனவற்றைப் பத்து நாழிகைகட்குள்ளாகவும், பரணியை ஒரு நாள் முழுவதற்குள் ளாகவும், பெரிய காவியங்களை எல்லாம் ஒன்றிரண்டு நாட்களுக்குள்ளாகவும் சொல்வதற்கும்;*

*கொடி கட்டினேன் - விருதுக்கொடி கட்டி வந்துள்ளேன் யான்.*

*சீதஞ்செய் திங்கள் - மரபினான் நீடுபுகழ்திருமலைராயன் முன் - குளிர்ச்சி செய்யும் சந்திரனின் மரபினனும் நெடிதான புகழினை உடையோனும் செங்கோன்மையாளனுமான திருமலை ராயன் என்னும் இம்மன்னவனின் முன்பாக, சீறுமாறு என்று மிகு தாறுமாறுகள் செய் திருட்டுக்கவிப் புலவரை - சீற்றமென்றும் மாற்றம் என்றும் மிகுதியாகத் தாறுமாறான செயல்களைச் செய்து கொண்டிருக்கின்ற திருட்டுத்தனம் உடைய கவிராயரான புலவர்களாவோரை காதங்கு அறுத்துச் சவுக்கிட்டு அடித்துக் கதுப்பிற்புடைத்து வெற்றிக் கல்லணையினொடு கொடிய கடிவாளம் இட்டு ஏறும் - இவ்விடத்தே கர்துகளை அறுத்தும், சவுக்கினாலே அடித்தும் கன்னங்களிற் புடைத்தும், என் வெற்றியாகிய கல்லான சேணத்துடனே கொடிய கடிவாளத்தை இட்டும், அவர்கள் மீது ஏறிச்செலுத்தும், கவி காளமேகம் நானே - கவிஞனாகிய காளமேகம் என்பவன் நானேதான்.*

கவி பாடுதலிலே தமக்குள்ள பேராற்றலைக் கூறி, மன்னனின் பெருமையைச் சொல்லி, புலவர்களின் தவறான போக்கை இடித்துரைத்து, அவர்களை வெற்றிகொண்டு அவமானப்படுத்த வந்திருக்கும் கவி காளமேகம் தானே என்றும் கூறுகிறார் கவிஞர்.

தூது முதலியவை சிறு பிரபந்த வகையைச் சார்ந்த நூல்கள். நீடு புகழ் - நெடிது பரந்த புகழ் செய்ய - செம்மை வாய்ந்த; செங்கோன்மை சிறந்தது, சீறுமாறென்று தாறுமாறுகள் செய்தல் - சீற்றங்கொள்ளல் என்றும், மாறுபட்டு உரைத்தல் என்றும் புலவர்க்கு மாறுபட்ட செயல்களைச் செய்தல், 'குதிரையேறி நடத்துவேன்' என்றது, அவமானப் படச் செய்வேன் என்றதாம்.

## மேகம் புறப்பட்டது

இதுவும் மேற்பாட்டினைப் போன்றதே. தம்மைக் கவிஞர் தண்டிகைப் புலவர்கட்கு அறிமுகப்படுத்துகின்றார்.

**கழியுந் தியகட லுப்பென்று நன்னூற் கடலின்மொண்டு**
**வழியும் பொதிய வரையினிற் கால்வைத்த வன்கவிதை**
**மொழியும் புலவர் மனத்தே யிடித்து முழங்கி மின்னிப்**
**பொழியும் படிக்குக் கவிகாள மேகம் புறப்பட்டதே. (5)**

கடல் கழியுந்திய உப்பு என்று - கடலானது கழியிடத்தே கொண்டு தள்ளிய உப்பு என்னுமாறு போல, நன்னூற் கடலின் மொண்டு - நல்ல நூற்களாகிய கடலிடத்தே முகந்து கொண்டு, வழியும் பொதியவரையினிற் கால் வைத்து - அருவிகள் வழியும் பொதிய மலையிடத்தே காலிட்டுப் பெய்து, வன் கவிதை பொழியும் புலவர் மனத்தே இடித்து முழங்கி மின்னிப் பொழியும் படிக்கு - வன்மையான போலிக்கவிதைகளைச் சொல்லித் திரிகின்ற புலவர்களின் உள்ளத்தே அடித்தும் முழக்கியும் மின்னலிட்டும் பெய்து நிறைப்பதன் பொருட்டாக, கவிகாளமேகம் புறப்பட்டதே - உண்மைக்கவியாகிய காளமேகம் என்பது இப்போது புறப்பட்டிருக்கிறது.

கால் வைத்தால் - காலிட்டுப் பெய்தல். பொதியத்திலே கால் வைத்த பின் காளமேகமாகி அது எங்கும் மழைபொழியப் புறப்பட்டதென்க. இதனால் பொதியத்தின் சிறப்பும் புலப்படும். காளமேகத்தின் சிறப்பும் புலப்படும். காளமேகம் - கார்மேகம். வன் கவிதை - பொருள் - இனிமையற்ற வறட்டுக் கவிதை. இடித்தல் - இடித்துக் கூறல். முழங்கல் - முழக்கம் செய்தல். மின்னல் - ஒளிபரப்புதல். போலிப் புலவர்களின் வறண்ட உள்ளங்களிலே கவிமழை பொழிந்து வளப்படுத்தக் கார்மேகம் புறப்பட்டது என்கிறார் கவி. இதனால், தம் ஆற்றலையும் அதிமதுரம் முதலியோரின் போலித்தன்மையையும் காட்டினர்.

## திருமலைராயனின் சிறப்பு

*தமிழ் நாவலர் சரிதை, இச் செய்யுளைக் காளமேகம் பாடியதென்று காட்டும். மூன்று நான்காவது அடிகளிற் சில மாறுதல்களுடன் இதனைச் சொக்கநாதப் புலவர் பாடியதாகவும், சாளுவக் கோப்பையன் புதல்வனான திப்பையராயன் என்பவனைக் குறித்ததாகவும் சிலர் கொள்வார்கள். காளமேகம் செய்ததாகவே ஏற்றுக்கொண்டு நாம் பொருளைக் காண்போம்.*

**இந்திரன் கலையா யென்மருங் கிருந்தான்**
**அக்கினி யுதரம்விட் டகலான்**
**எமனெனைக் கருதா னரனெனக் கருதி**
**நிருதிவந் தென்னையென் செய்வான்**
**அந்தமாம் வருண னிருகண்விட் டகலான்**
**அகத்துறு மக்களும் யானும்**
**அனிலம தாகு மமுதினைக் கொள்வோம்**
**யாரெனை யுலகினி லொப்பார்**
**சந்தத மிந்த வரிசையைப் பெற்றுத்**
**தரித்திர ராசனை வணங்கித்**
**தலைசெயு மென்னை நிலைசெய்கல் யாணிச்**
**சாளுவத் திருமலை ராயன்**
**மந்தர புயனாங் கோப்பய னுதவு**
**மகிபதி விதரண ராமன்**
**வாக்கினாற் குபேர னாக்கினால் அவனே**
**மாசிலா வீசனா வானே.** **(6)**

*இந்திரன் கலையாய் என் மருங்கு இருந்தான் - ஆயிரங் கண்ணனான இந்திரன் ஆடையாக உருவெடுத்து என்இடையிலே அமைத்திருந்தான் (அதாவது, உடுத்துள்ள உடையிலே ஓராயிரம் பொத்தல்கள்), அக்கினி உதரம்விட்டு அகலான் - நெருப்புக் கடவுளான அக்கினியோ என் வயிற்றைவிட்டு அகலாதேயே நிலைத்திருக்கின்றான் (அதாவது, வயிற்றிடத்தே பசித்தீ அகலாது நிலைபெற்றிருக்கிறது);*

*அரன் எனக் கருதி எமன் எனைக் கருதான் - சிவபெருமானே எனநினைத்து எமனும் என்னை நினைக்கமாட்டான் (பிச்சை ஏற்று உண்ணலால், பிட்சாடன மூர்த்தியாகிய சிவன் என்று எமன் நினைத்து என் உயிரைக் கவர்தற்கு நினையாதே இருக்கின்றான்);*

*நிருதி வந்து என்னை என் செய்வான் - காற்று வந்து மோதினாலும் என்னை என்ன செய்துவிடுவான் (உடல் மிகவும் மெலிந்துபோயின தன்மையை இப்படிக் குறித்தார்: காற்று மோதி ஏதும் செய்ய வியலாது என்றதனால்);*

*இந்தம் ஆம் வருணன் என் இருகண் விட்டு அகலான் - இறுதியான வருணன் என் இரு கண்களையும் விட்டு ஒரு போதுமே அகலாதிருக்கின்றான் (துயரத்தால் கண்கள் சதா நீர் சொரிகின்றன);*

*அகத்துறு மக்களும் யானும் அனிலமது ஆகும் அமுதினைக் கொள்வோம் - என் வீட்டிலே தங்கியிருக்கும் என் மக்களும் யானும் காற்று ஆகிய அமுதம் ஒன்றனையே பசிக்கு உணவாக உட் கொள் வோம் ஆயினோம்; யார் எனை உலகினில் ஒப்பார் - இத்தகைய நிலையிருக்கும் எனக்கு உலகினில் ஒப்பாவார்தாம் யாவரோ?*

*சந்ததம் இந்த வரிசையைப் பெற்றுத் தரித்திர ராசனை வணங்கித் தலைசெயும் என்னை - இத்தகைய சிறப்பினையே எந்நாளும் பெற்றுத் தரித்திரம் என்னும் அரசனை வணங்கிப் பணிந்து வாழும் என்னை;*

*நிலைசெய் கல்யாணிச் சாளுவத் திருமலைராயன் - நிலை பெற்ற கல்யாண குணங்களையுடைய சாளுவத் திருமலைராயன் என்பவன், மந்தர புயனாம் கோப்பயன் உதவும் மகிபதி - மந்தர மலைபோன்ற புஜங்களையுடையவன்; புலவர்களுக்கு ராஜ மரியாதைகளை அளித்து உதவும் மன்னவன், விதரண ராமன்; நான்கும் தெரிந்த ராமனைப் போன்று சிறந்தவன்.*

*வாக்கினால் குபேரன் ஆக்கினால் - தன் ஆணையினாலே குபேர செல்வத்திற்கு உரியவனாக்கினால், மாசிலா ஈசன் அவனே ஆவான் - குற்றமற்ற கடவுள் எனக்கு அவனே ஆவான்.*

*இந்தச் செய்யுளை நன்றாகக் கவனிக்க வேண்டும். காளமேகப் புலவருக்குக் குழந்தைகளும் இருந்தார்கள் என்று இதனால் தெரிகிறது.*

### திருமலைராயனைப் புகழ்ந்தது

**வீமனென வலிமிகுந்த திருமலைரா**
**யன்கீர்த்தி வெள்ளம் பொங்கத்**
**தாமரையி னயனோடிச் சத்தியலோ**
**கம்புகுந்தான் சங்க பாணி**
**பூமிதொட்டு வானமட்டும் வளர்ந்து நின்றான்**
**சிவன்கைலைப் பொருப்பி லேறிச்**
**சோமனையும் தலைக்கணிந்து வடவரைத்தண்**
**டாலாழஞ் சோதித் தானே.** (7)

*வீமன் என வலிமிகுந்த திருமலைராயன் - வீமசேனன் என்னும்படி ஆற்றலால் சிறப்புற்றிருக்கும் திருமலைராயன் என்பவனின், கீர்த்தி வெள்ளம் பொங்க - புகழாகிய வெள்ள மானது பொங்கி எழுந்ததாக;*

*தாமரையின் அயன் ஓடிச் சத்தியலோகம் புகுந்தான் - தாமரை வாசனாகிய பிரமன் அஞ்சி ஓடிச் சத்தியலோகத்திலே நுழைந்து கொண்டான்; சங்க பாணி பூமிதொட்டு வானம் மட்டும் வளர்ந்து நின்றான் - சங்கை ஏந்தியவனான திருமால் நிலமுதல் வானம் வரை மேனி வளரப்பெற்று விசுவரூபியாகி நின்றான்; சிவன் கயிலைப் பொருப்பிலேறிச் சோமனையும் தலைக்கணிந்து வடவரைத் தண்டால் ஆழம் சோதித்தானே - சிவபிரான் கயிலை மலைமேல் ஏறிக் கொண்டு சோமனையும் (சந்திரன், ஆடை) தலையில் அணிந்தவனாக, இமயமலையாகிய தண்டினாலே இமயமலையிடத்து மூங்கிலும் ஆம்) அக்கீர்த்த வெள்ளத்தின் ஆழத்தை சோதிக்கத் தொடங்கினான்.*

*திருமலைராயனின் புகழ்வெள்ளம் முத்தேவரையும் அஞ்சச் செய்யும் அளவிற்குச் சிறந்ததாயிருந்தது என்பது கருத்து.*

## திருலைராயனின் வாள்

*அரசர்களை அவர்களுடைய ஆயுதங்களைப் போற்றுவதன் மூலமும் புகழ்வது மரபு. அந்த மரபின்படி திருமலைராயனின் வெற்றிவாளைக் குறித்து இவ்வாறு பாடுகிறார்.*

**செற்றலரை வென்ற திருமலைரா யன்கரத்தில்**
**வெற்றிபுரி யும்வாளே வீரவாள்-மற்றையவாள்**
**போவாள் வருவாள் புகுவாள் புறப்படுவாள்**
**ஆவா ளிவாளவா ளாம்.** (8)

*செற்றலரை வென்ற - பகைகொண்டுவந்து எதிர்த்தவர்களை வெற்றிகொண்ட, திருமலைராயன் கரத்தில் விளங்க அந்த வெற்றியைச் செயற்படுத்தும் வாள் ஒன்றே வீரவாள் என்பதற்குப் பொருந்துவதாகும்; மற்றையவாள் - வாள் என்று முடியும் பிறவெல்லாம், போவாள் வருவாள். புகுவாள், புறப்படுவாள், ஆவாள் இவாள் அவாள் என்ற சொற்கள், வாள் என முடிந்தம் எப்படி வாளைக் குறிப்பதாகாதோ, அப்படியே வாள் என வழங்கினும் பயன் அற்றவைகளாம்.*

*இது, திருமலைராயனின் போராற்றலைக் காட்டுகின்றது. அவன், போர்கள் பலவற்றை நடத்தி வெற்றி பெற்றவன் என்பதும் தெரிகின்றது.*

## தம் கவித்திறம் கூறியது

*அதிமதுரக் கவிராயர் தம்முடைய கவித்திறத்தை எடுத்துக்கூறிப் பெருமை பாராட்டிக் கொண்டார். தம்முடைய கவித்திறம் அவர்க்கும் அதிகம் எனக் கவிராயர் அப்போது அதிமதுரத்திற்கு எதிரிட்டுக் கூறியது இந்தச் செய்யுள்.*

**இம்மென்னு முன்னே எழுநூறும் எண்ணூறும்**
**அம்மென்றால் ஆயிரம்பாட்டாகாதோ-சும்மா**
**இருந்தா லிருந்தே னெழுந்தேனே யாமாயின்**
**பெருங்காள மேகம் பிளாய்! (9)**

*இம் என்னும் முன்னே எழுநூறும் எண்ணூறும் - இம் என்று சொல்வதற்கு முன்னே எழுநூறு எண்ணூறு பாடல்களும். 'அம்' என்றால் ஆயிராம் பாட்டாகாதோ. 'அம்' என்று அடுத்துச் சொன்னால் அதற்குள் ஆயிரம் பாட்டுகளும் ஆகிவிடாதோ? பிளாய் - சிறுவனே! (அதிமதுரத்தை நோக்கிக் கூறியது) சும்மா இருந்தால் இருந்தேன் - சும்மா இருந்தேனாயின் இருப்பேன், எழுந்தேனே யாமாயின்பெரும் காளமேகம் - சும்மா இருந்தாலும் இருப்பேன். பாடத் தொடங்கினேனானால் பெரிய கார் மேகமாகப் பொழிவேன் (என்று அறிவாயாக.)*

*'பிளாய்' என்ற சொல்லின் பிரயோகத்தைக் கவனிக்கவும். தம் கவிவன்மைக்கு எதிரே அதிமதுரம் சிறு குழந்தை என்று கூறியதும் ஆம்.*

**வால் எங்கே?**

*திருமலைராயன் அவையிலிருந்த சிலர் தம்மைக் கவிராயர்கள் என்று கூறிச் செருக்குடன் வீற்றிருந்தனர். அப்போது, அவர்களை ஏளனமாகச் சுட்டிப் பாடியது இச் செய்யுள்.*

**வாலெங்கே நீண்ட வயிறெங்கே முன்னிரண்டு**
**காலெங்கே உட்குழிந்த கண்ணெங்கே-சாலப்**
**புவிராயர் போற்றும் புலவீரகா ணீவிர்**
**கவிராயர் என்றிருந்தக் கால். (10)**

*புவிராயர் சாலப் போற்றும் புலவீர்காள் - நாடாள்வோர் மிகுதியாகப் போற்றுகின்ற புலவர்களே! நீவிர் கவிராயர் என்றிருந்தக்கால் - நீங்கள் கவிராயர்களாக (குரங்குத் தலைவர் களாக) இருந்தவிடத்து, வால் எங்கே - நும்முடைய வால்கள் எங்கே போயின, நீண்ட வயிறு எங்கே - நீண்ட வயிறுகள் எங்குச் சென்றன, முன் இரண்டு கால் எங்கே - முன் பாகத்தே இருக்கவேண்டிய இரண்டு கால்களும் எங்கே, உட் குழிந்த கண் எங்கே - உள்ளே குழிந்ததாயிருக்கும் கண்கள் எவ்விடத்தே போயின? (கவி - குரங்கு; வட சொல்லான 'கபி' யின் தமிழ் அமைப்பு) ('ஆகவே; நீங்கள் கவிராயர்கள் அல்லர். நீங்கள்பொய் பேசுபவர்கள்' என்று கூறி, அவர்களை நகையாடிய தாயிற்று.*

## குதிரை! குதிரை!!

*அதிமதுரக் கவிராயர் குதிரையேறி வர அந்தக் குதிரையைப் பாடியது.*

**கோக்குதிரை நின்குதிரை கோவன்மது ராவொன்னார்**
**மாக்கு திரையெல்லா மண்குதிரை-தூக்குதிரை**
**தூங்கற் கரைக்குதிரை சொக்கன் குதிரைசது**
**ரங்கக் குதிரைகளே யாம்.** (11)

*கோவன் மதுரா - திருக்கோவலூரானான அதிமதுரமே! நின் குதிரை கோக்குதிரை - நின் குதிரைதான் ராஜா பவனி வரும் குதிரை! ஒன்னார் மாக்குதிரை எல்லாம் மண்குதிரை - நின்னைப் பகைத்தோரின் பெரிய குதிரைகள் எல்லாம் மண் குதிரைகள்; தூ குதிரை - தூதூ அவையும் குதிரைகளா? தூங்கற் கரைக் குதிரை - ஒரு தூங்கல் குதிரைக்கும் கூட அரைவாசியே சொல்லத்தகும் குதிரைகளாக அன்றோ இருக்கின்றன, சொக்கன் குதிரை - சொக்கநாதர் குதிரையாகக் கொணர்ந்த நரிகள்தாம் அவை; சதுரங்கக் குதிரைகளே யாம் - சதுரங்க ஆட்டத்திற் பயன்படுத்தப் படும் காய்களான குதிரைகளே அவை ஆம்.*

*பின் ஒரு சமயம், அதிமதுரக்கவி ஏறிவந்த குதிரையைப் போற்றிக் கூறுவது இது; அவரைப் பாராட்டாமல், அவர் குதிரையைப் பாராட்டியதாகக் கொள்க. இதனால் 'போற்றத் தகுந்தது குதிரையே அல்லாமல், அதன்மேல் ஊர்ந்துவரும் நீர் அன்று 'என்று அதிமதுரத்தைப் பழித்தலையும் கவிராயர் இதன் மூலமாகச் செய்கின்றனர்.*

## மண்மாரி பெய்க!

**கோளர் இருக்குமூர் கோள்கரவு கற்றவூர்**
**காளைகளாய் நின்று கதறுமூர்-நாளையே**
**விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து**
**மண்மாரி பெய்கவிந்த வான்.** (12)

*எமகண்டம் பாடி வெற்றிபெற்ற பின்னரும், காளமேகத்தைத் திருமலைராயன் அலட்சியப்படுத்த, அப்போது அவர் பாடியது இது.*

*கோளர் இருக்கும் ஊர் - கொலைகாரர்கள் இருக்கின்ற இவ்வூர்; கோள் கரவு கற்ற ஊர் - புறங்கூறவும் வஞ்சகம் செய்யவும் கற்றிருக்கின்ற இவ்வூர்; காளைகளாய் நின்று கதறும் ஊர் - காளைகளைப் போன்று மக்கள் கட்டுப்பாடில்லாமல் நின்று கதறிக் கொண்டிருக்கும் இவ்வூர், இதன்கண், நாளையே - நாளைக்கே; இந்த வான் - இந்த வானம், விண்மாரி யற்று வெளுத்து மிகக் கறுத்து வான்மழை இல்லாது போய் வெளுத்துத் தோன்றி*

*மிகவும் சினந்து மண்மாரி பெய்க - மண்ணே மழையாகப் பெய்வதாக.*

*இப்படி ஊருக்கே சாபம் தந்து வசைபாடுகிறார் காளமேகம். அது அப்படியே நிகழ்ந்ததெனவும் உரைப்பர். அரசனும் அவன் அவையும் இழைத்த தவறுக்கு ஊரே பலியான செய்தி இது. ஆட்சி செய்பவன் நல்லவனாயில்லாத போது, அவனால் அந்த ஊருக்கே அழிவுவரும் என்பதை மெய்ப்பிப்பதும் இது.*

**அழிய வாட்டு!**

*'மண்மாரி பெய்தால் மட்டும் போதாது; ஊர் முற்றவுமே அழியுமாறு வாட்டுதல் வேண்டுதல்' எனவும் நினைக்கிறார் காளமேகம். 'மன்மதனை அழித்தது போல சிவனே! இந்த ஊரையும் எரித்து அழித்துவிடு' என்கிறார்.*

**செய்யாத செய்த திருமலைரா யன்வரையில்**
**அய்யா வரனே அரைநொடியில்-வெய்யதழற்**
**கண்மாரி யான்மதனைக் கட்டழித்தாற் போற்றீயோர்**
**மண்மாரி யாலழிய வாட்டு. (13)**

*அய்யா அரனே - என் அய்யனே! சிவபெருமானே! செய்யாத செய்த திருமலைராயன் வரையில் - எனக்குச் செய்யத்தகாத எல்லாம் செய்த இந்தத் திருமலைராயனுடைய ஆட்சி எல்லைக்கு உட்பட்ட நாட்டில் உள்ள, தீயோர் - தீயவர்களை, அரை நொடியில் - அரைநொடிப்போதிலேயே, வெய்ய தழற்கண் மாரியால் மதனைக் கட்டழித்தாற்போல் - வெம்மையான நெருப்புக் கண் பார்வையான மழையினாலே மன்மதனின் ஆற்றலை யெல்லாம் போக்கிச் சாம்பராக்கினாற்போல, மண் மாரியால் அழிய வாட்டு, மண்மாரியினாலே அழியும்படியாக வாட்டு வாயாக.*

*காட்டு - உருவ அமைப்பும் ஆம்.*

*திருமலைராயன் பட்டினம் இன்றும் மண் மேடிட்டதன் அடையாளங்களுடன் காணப்படுகிறது. பல இடங்களில் ராயர் காலத்துப் பொருள்கள் புதையலாக அகப்பட்டதாம். இவ் இந்தக் கவி சாப விளைவென்பது சான்றோர் சொல்வது.*

## 3. குறிப்புக்குப் பாடியவை

*["இப்படிப்பாடுக அப்படிப்பாடுக" என்று ஒருவர் கேட்க, அவர் கொடுக்கும் சமிக்ஞைப்படியே, பொருள் நயத்துடனும் சொல்நயத்துடனும் விரைவிலே பாடிய கவிகள் இவை. சொல்லாற்றல் மிக்க புலமைச் செறிவாளர்க்கே எளிதாகக் கைவரும் தனிச்சிறப்புடையன இவை. காளமேகத்தின் இத்தகைய செய்யுட்களை இப்பகுதியில் காண்போம்.]*

## நீறாவாய் நெருப்பாவாய்

"சிவபெருமானைக்குறித்த ஒரு செய்யுள்; அதனிடத்தே நீறாவாய், நெருப்பாவாய், கூறாவாய், கொளுத்துவாய், நட்ட மாவாய், நஞ்சமாவாய் என்று அவனைப்பற்றிச் சொல்ல வேண்டும் பாடுக பார்ப்போம்" என்றார் ஒரு புலவர்.

அப்படியே அரைவினாடியில் அவ்வாறு சொற்கள் பொருள் நயத்துடன் அமைந்துவரப் பாடி, முடிவிலே, அப் பெரு மான் அத்தகையவனே எனினும், அன்பரைக் கருணை பாலிக்கும் கருணையாளனும் ஆவான் என்று சொல்லும் வகையினாலே, அவன் தன்னைக் காக்குமாறும் வேண்டுகின்றார் கவிஞர்.

**நீறாவாய் நெற்றி நெருப்பாவாய் அங்கமிரு**
**கூறாவாய் மேனி கொளுத்துவாய்-மாறாத**
**நட்டமா வாய்சோறு நஞ்சாவாய் நாயேனை**
**இட்டமாய்க் காப்பா யினி.** (14)

நெற்றி நீறுஆவாய் - நெற்றியினிடத்தே திருநீற்றினை உடையை ஆவாய், அங்கம் நெருப்பு ஆவாய் - திருமேனி நெருப்புமயமாக அமைந்திருப்பாய், மேனி இரு கூறாவாய் - நின் திருமேனி இருகூறாக அமைந்திருப்பாய், கொடுத்துவாய் - எரி நெருப்பாகவே விளங்குவாய், மாறாத நட்டம் ஆவாய் - இடையீ டில்லாத நடனத்தையும் உடையை ஆவாய், நஞ்சு சோறு ஆவாய் - நஞ்சினைத் சோறாகக் கொள்வோனும் ஆவாய், (அங்ஙனம் நீ வெம்மையுடனேயே விளங்குபவன் ஆயினும்) இனி நாயேனை இட்டமாய்க் காப்பாய் - இனி, நாயினேனையும் விருப்பமுடன் காத்தருள்வாயாக.

## குடத்திலே கங்கை அடங்கும்

குடம் ஒரு சிறு பாத்திரம். கங்கை நதியோ பிரவாகமாகப் பெருகி வருவது. 'அது, எப்படிச் சின்னஞ் சிறிய குடத்திலே அடங்க முடியும்? குடத்திலே கங்கை அடங்கும், என்ற ஈற்றடி வருமாறு ஒரு வெண்பாப் பாடும்' என்று சொல்லுகிறார் ஒருவர். காளமேகம், புலவர் கொடுத்த சமிக்ஞையை எண்ணிப் பார்த்தார். சொற் சாதுரியத்தினாலே அவர் கேட்டபடியே பாடுகின்றனர்.

**விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்**
**மண்ணுக் கடங்காமல் வந்தாலும் - பெண்ணை**
**இடத்திலே வைத்த இறைவர் சடாம**
**குடத்திலே கங்கை யடங்கும்** (15)

கங்கை - ஆகாய கங்கையானது, விண்ணுக்கு அடங்காமல் - வானத்திடத்தே அடங்காமலும், வெற்புக்கு அடங்காமல் - இமயமலையிடத்தே அடங்காமலும், மண்ணுக்கு அடங்காமல் -

நோக்கிப் பாய்ந்து வந்து கொண்டிருக்கும் பூமியிடத்தே அடங்காமலும், வந்தாலும் - பெருகி வந்த போதிலும், பெண்ணை இடத்திலே வைத்த இறைவர் சடாமகுடத்திலே - பெண்ணாகிய உமா தேவியைத் தம் இடப்பாகத்திலே வைத்துக் கொண்டவராக இருக்கும் தலைவரான சிவபெருமானின் சடாமகுடத்திலே, அடங்கும் - அடங்கி நிற்பதாகும்.

பகீரதனின் தவத்தினாலே பெருகிப் பாய்ந்துவந்த கங்கையின் வேகத்தைத் தம் செஞ்சடை முடியிலே தரித்து அடக்கி, உலகைக் காத்த பரமனின் திருவிளையாடலைக் குறிப்பதாகச் செய்யுள் அமைந்துள்ளது. கொடுத்த சமிக்ஞை வெண்பாவின் ஈற்றடியிலே வந்தது.

## ஆறுதலை உண்டு

'சிவன், முருகன், பிள்ளையார், திருமால், சிவனடியார் இவர்களுக்குத் தனித்தனியே ஆறுதலை உண்டென்று சொற்சுவை விளங்க ஒரு வெண்பாவில் அமைத்துப்பாடுக' என்றார் ஒரு புலவர்.

**சங்கரற்கு மாறுதலை சண்முகற்கு மாறுதலை**
**ஐங்கரற்கு மாறுதலை யானதோ-சங்கைப்**
**பிடித்தோர்க்கு மாறுதலை பித்தா நின்பாதம்**
**படித்தோர்க்கு மாறுதலை பார். (16)**

சங்கரற்கும் ஆறுதலை - சிவபெருமானுக்குத் தலையிலே கங்கையென்னும் ஆறு உரியதாகும், சண்முற்கும் ஆறுதலை - முருகப்பெருமானுக்கும் ஆறு தலைகள் உளவாகும், ஐங்கரற்கு மாறுதலை - ஐங்கரனாகிய பிள்ளையாருக்கு உடலோடு மாறுகொண்ட யானைத் தலையாய விளங்கும், சங்கைப் பிடித் தோர்க்கும் ஆறுதலை - சங்கத்தை ஏந்தியவரான திருமாலுக்கும் பிரளய வெள்ளம் உறைவிடமாயிருக்கும், பித்தா - பித்தனாகிய பரமனே! நின் பாதம் படித்தோர்க்கும் ஆறுதலை பார் - நின் திருவடிகளைப் போற்றியவரான என்போலும் சிவனடியார்க்கும் ஆறுதல் உண்டாகியிருக்கின்றது. இதனைக் காண்பாயாக!

சிவபெருமானின் கருணை தனக்கு இருப்பதனால் தம்மை அவர்களால் வெற்றிக்கொள்ள இயலாது எனவும் குறிப்பாக எச்சரிக்கின்றனர்.

## சிவனுக்கு அரைக்கண்

முக்கண்ணன் சிவபெருமான், 'அவனுக்கு அரைக்கண்தான் உள்ளது என்று பாடுக' என்று சொன்னார் ஒருவர்.

**முக்கண்ண னென்றரனை முன்னோர் மொழிந்திடுவர்**
**அக்கண்ணற் குள்ள தரைக்கண்ணே-மிக்க**
**உமையாள் கண் ணொன்றரைமற் றூன்வேடன் கண்ணொன்**
**றமையுமித னாலென் றறி. (17)**

"பெருமான் உமையொருபாகன். அதனால் முக்கண்களிற் பாதியான ஒன்றரைக் கண் அம்மைக்கு உரியதாகும். காளத்தி நாதர்க்கு, ஒரு கண் கண்ணப்ப நாயனாரால் அப்பி வைக்கப் பெற்றது. இரண்டையும் கருதினால் எஞ்சிச் சொந்தமாக இருப்பது எல்லாம் அரைக்கண்தானே! இவ்வாறு பொருத்தமாகப் பாடி அனைவரையும் வியப்பிலே ஆழ்த்துகிறார் கவிஞர்.

*அரனை 'முக்கண்ணன்' என்று முன்னோர் மொழிந்திடுவர்.* சிவபெருமானை மூன்று கண்களையுடைய பெருமான் என்று முன்னோர்கள் சொல்வார்கள், *அக் கண்ணற்கு உள்ளது அரைக் கண்ணே* - மாலையினை அணிவோனான அப்பெரியோனுக்கு உள்ளதெல்லாம் அரைக் கண்ணேயாகும்; (எவ்வாறு என்றாலோ?) *மிக்க உமையாள் கண் ஒன்றரை* - மேலானவனான உமையம்மைக்கு உரிமையுடைய கண் ஒன்றரையாகும். *மற்று* - பின்னும், *ஊன் வேடன் கண் ஒன்று* - ஊனுண்போனாகிய வேடனாம் கண்ணப்பன் அப்பி வைத்த அவனுடைய கண் ஒன்றாகும்; *இதனால் அமையும் என்று அறி* - இத் தன்மையினாலே பெருமானுக்குச் சொந்தமானது, அரைக்கண் என்பதே பொருந்தும் என்று அறிவாயாக.

## சிதம்பர தேவா

'சிதம்பர தேவா என்று நான்குதரம் வருதல் வேண்டும். அங்ஙனம் அமையுமாறு ஒரு வெண்பாக் கூறுக' என்றார் ஒரு புலவர். கவிஞர் அரைநொடியிலே பாடி அவரைத் திகைக்கும்படி செய்கிறார்.

**அரகர திருச்சிற் றம்பல வாணாவந்**
**தரரூப மகேச சிதம் - பரதே**
**வசிதம் பரதே வசிதம் பரதே**
**வசிதம் பரதே வனே. (18)**

*அரகர திருச்சிற்றம்பல வாணா* - அரகரா! திருச்சிற்றம்பலம் உடைய பரமனே! *அந்தர ரூப* - ஆகாயமாம் திருமேனியினை உடையோனே! *மகேச* - மகேஸ்வரனே *சிதம்பர தேவ* - சிதாகாயத்து உள்ள பெருமானே! சிதம்பர தேவ! சிதம்பரதேவ! சிதம்பர தேவனே!

*அரன்* - சங்கரிப்பவன். *சிற்றம்பலம்* - சிற்சபை சிதம்பரத்தே உள்ளது; சிதம்பரம் சிற்றம்பலம் என்பதன் மரூஉ - மகேசன்.

பெருஞ்செல்வத்தை உடையவன்; அழிவற்ற பெருநிதியாகிய சிவச்செல்வம் அது.

## கின்னரி வாசிக்கும் கிளி

'கின்னரி வாசிக்கும் கிளி' என்று ஈற்றடி அமையுமாறு ஒரு பெண்பாச் சொல்லுக என்றார் ஒரு புலவர்.

சிவபெருமான் ஆலவாயிலே நடத்திய திருவிளையாடல்களும், அவனது கருணைப்பெருக்கும் தம் கண்முன் தோன்ற கவிஞர் அந்தச் சிறப்பை அமைத்து அப்படியே ஈற்றடி வருமாறு பாடுகின்றார்.

**ஆடல்புரிந் தானென்றும் அந்நாளி லேமூவர்**
**பாடலுகந் தானென்றும் பான்மையினால்-கூடலிலே**
**நன்னரி வாசிக்கும் நடைபயிற்றி னானென்றும்**
**கின்னரிவா சிக்கும் கிளி.** (19)

ஆடல் புரிந்தான் என்றும் - பெருமான் முன் நாளிலே திருவிளையாடல்கள் பலவற்றைச் செய்தவன் என்றும், அந் நாளிலே மூவர் பாடல் உகந்தான் என்றும் - அந்தக் காலத்திலே மூவராம் அப்பர், சுந்தரர், சம்பந்தர் எனும் மூவரின் பாடல்களை உவந்து அருள் செய்த பெருமானே என்றும் நன்னரி வாசிக்கு நடை பயிற்றினான் என்றும் - நல்ல நரிகளாகிய குதிரைகளுக்கு நடை கற்பித்துத் தன் அன்பனைக் காத்தவனே என்றும், 'கருதி'; கூடலிலே - மதுரைமா நகரிலே பான்மையினால் கிளி கின்னரி வாசிக்கும் - பண்புடனே கிளியும் அப் பெருமானின் புகழைப் பாடிக் கின்னரி வாசித்துக் கொண்டிருக்கும்! 'கிளி' என்றது சிவையை.

கின்னரி - வீணை வகையுள் ஒன்று.

## நா நீ நூ நே

'நா நீ நூ நே' என்பவற்றை ஒரு வெண்பாவில் அமைத்துச் சுவைபடப் பொருட்செறிவுடன் பாடுக' என்றார் ஒருவர்.

**அரையின் முடியில் அணிமார்பின் நெஞ்சில்**
**தெரிவை யிடத்தமர்ந்தான் சேர்வை-புரையறவே**
**மானார் விழியீர் மலரணவொற் றீறாகும்**
**ஆனாலா நா நீ நூ நே.** (20)

என்று பாடினார் காளமேகம். இதன் பொருள்:

மான் ஆர் விழியீர் - மானினது மருட்சி நிறைந்த கண்களைப் போன்ற கண்களை உடையவர்களான பெண்களே! மலரண ஒற்று நா நீ நூ நே ஈறு ஆகும். ஆனால் - மலரண என்பவற்றின் ஒற்றுக் களான ம் ல் ர் ண் என்பவைகள் நா நீ நூ நே என்பவற்றின்

இறுதியாகித் தலைகீழாக நேம், நூல், நீர், நாண் என்றாற்போல ஆகியவருமானால் தெரிவை இடத்து அமர்ந்தான் - உமாதேவி யானவள் தன் இடப்பக்கமாக வீற்றிருக்க விரும்பியவனாகிய பெருமானின் அரையில் முடியில் 'அணிமார்பில் நெஞ்சில் புரை அறச் சேர்வை ஆம் - அரையிலும் முடியிலும் அழகிய திருமார் பிலும் நெஞ்சிலும் குற்றமறச் சேர்க்கப்படுவதற்கு உரியனவாகும்.

நேம் விஷமும் ஆம்; அப்பொழுது நெஞ்சு என்றதைக் 'கண்டம்' எனப் பொருள் கொள்வர். நே எனில், அன்பு; அது நேம் என மருவியும் வரும்; அப்பொழுது அவன் நெஞ்சிலே உயிர்களிடத்து அன்புடையவன் என்க.

அரையில் நாணும், முடியில் நீரும், மார்பில் நூலும் நெஞ்சில் அன்பும் உடையவன் மாதொரு பாகன் என்பது இச்செய்யுளின் பொருள்.

**சோ கா மா ஏ வா தா**

ஒருவர், 'சோ கா மா ஏ வா தா' என்ற சொற்களால் தொடங்கும் ஒரு வெண்பாவினைப் பொருட் சிறப்புடன் கூறுக' என்றவுடன், கவிஞர் பாடின பாடல் இது. சிவ பெருமானைப் போற்றி அவர் தம் திருவிளையாடல்களைக் குறிப்பிட்டுப் பாடுகிறார்.

**சோகாமா ஏவாதா சொல்லின்மனைக் கூட்டியுமை**
**பாகார்ந்த தில்லைப் பரமேசர்-வாகாய்த்**
**தரித்தார் எரித்தார் தறித்தார் உதைத்தார்**
**எரித்தார் கணைபடைத்தார் ஊர்க்கு.** (21)

உமை பாகு ஆர்ந்த தில்லைப் பரமேசர் - உமாதேவியைத் தம் இடப்பாகத்திற் கொண்டவரான தில்லையிற் கோயில் கொண்டிருக்கும் பரமேசுவரன் ஆனவர், சோகாமா ஏவாதா சொல்லின் மனைக் கூட்டி - சோ கா மா ஏ வா தா என்பவற்றின் இறுதியில் மன் என்பதனைக் கூட்டிச் சொன்னால், வாகாய்த் தரித்தார் - அழகாய்த் தரித்தார் (சோமன் - சந்திரன்); எரித்தார் எரியச் செய்தார் (காமன்); தறித்தார் - கொன்றார் (மாமன், தக்கன்); உதைத்தார் - உதைத்தனர் (ஏமன்); உரித்தார் - தோலினை உரித்தார். (வாமன் - யானை); ஊர்க்குக் கணை படைத்தார் - முப் புரங்களை அழித்தற் பொருட்டுக் கணையாக அமைத்துக் கொண்டார் (தாமன் - திருமால்) என்று அறிக.

**கொட்டைப் பாக்கு!**

'கொட்டைப் பாக்கு என்று தொடங்கி, களிப்பாக்கு என்று முடியும் படியாகப் பொருட் செறிவுடன் வெண்பா ஒன்று கூறுக' என்றார் ஒருவர்.

**கொட்டைப்பாக் கும்மொருகண் கூடையைப்பாக் கும்மடியில்**
**பிட்டைப்பாக் கும்பாகம் பெண்பார்க்கும் - முட்ட நெஞ்சே**
**ஆரணனும் நாரணனும் ஆதிமறை யுந்தேடும்**
**காரணனைக் கண்டுகளிப் பாக்கு. (22)**

*இப்படி அகங்காரம் கொள்ளாமல், சிவபெருமானைத் தரிசிப்பதிலே மனம் செலுத்துவாயாக என்று சொல்லுபவரைப் போல உரைத்தார் கவிஞர். இதன் பொருள்:*

*நெஞ்சே; மனமே! கொட்டைப் பாக்கும் - மதுரையிலே வந்தபின் ஏவற்படி மண்சுமக்கச் சென்று மண்வெட்டியைப் பார்த்திருந்தோனும், ஒரு கண் கூடையைப் பார்க்கும் - ஒரு கண்ணினாலே கூடையைப் பார்த்தோனும், மடியில் பிட்டைப் பாக்கும் - தன் மடியிலுள்ள பிட்டினை நோக்குவோனும், பாகம பெண் பார்க்கும் - தன் இடப்பாகத்துள்ள தேவியைப் பார்ப்போனும், ஆரணனும் நாரணனும் ஆதிமறையும் தேடும் - பிரமனும் திருமாலும் ஆதிப்பழமறையும் தேடிக் கொண்டிருப் போனுமான, காரணனை - சர்வ காரணனாகிய பரமசிவனை, கண்டு - தரிசித்து, முட்டக் களிப்பு ஆக்கு - முற்றவும் மகிழ்தலைச் செய்வாயாக.*

*'பார்க்கும்' என்று சொல் 'பாக்கும்' என மருவியது.*

**கரியும் உமியும்**

*'கரி என்று தொடங்கி உமி என்று முடியும்படி ஒரு வெண்பாச் சொல்லுக' என்றனர் ஒருவர். அதனை ஏற்றும் பாடிய வெண்பா இது.*

**கரியதனை யேயுரித்த கையா வளையேந்**
**தரியயற்கும் எட்டாத வையா - பரிவாக**
**அண்ட ரெல்லாம்கூடி யமுதம் கடைந்தபொழு**
**துண்டநஞ்சை இங்கே உமி. (23)**

*கரியதனையே உரித்த கையா - யானையையே உரித்த கையினை உடையவனே! வளையேந்து அரி அயற்கும் எட்டாத ஐயா - சங்குதனை ஏந்துவானானா திருமாலுக்கும் அயனுக்கும் எல்லைகாண முடியாதிருந்த ஐயனே! அண்டர் எல்லாம் பரிவாகக் கூடி அமுதம் கடைந்த பொழுது - தேவர்கள் எல்லாரும் விருப்பமுடனே ஒன்றுகூடி அமுதம் கடைந்த அந்த நாளிலே, உண்ட நஞ்சை இங்கே உமி - நீ அவர்களைக் காக்கும் பொருட்டாக உண்ட அந்தக் கொடிய நஞ்சினை இவ்விடத்தே உமிழ்ந்து விடுவாயாக.*

*'ஐயா என்றது அனைவருக்கும் தந்தையாவான் அவனே என்ற உரிமை பற்றியும், அவன் அழகனும் தெய்வத்தன்மை உயைடவனும் ஆதல்பற்றியும் ஆகும்.*

'அந்த நஞ்சை இவ்விடத்தே உமிழ்க' என்றதனால், தேவர்களை அழியாது காக்கவே நீ நஞ்சினை உண்டனை; இவர்கள் அகங்காரங் கொண்டோர் ஆயினர்; அதனால் இவர்கள் அழியுமாறு இவ்விடத்தே அதனை உமிழ்க என்று உரைத்ததும் ஆம்.

## சீத்துப் பூத்து

'சீத்துப் பூத்து' என்று வரும்படி ஒரு வெண்பாவைச் சொல்லுக' என்று கேட்டார் ஒருவர். அப்படியே உரைக்கும் கவிஞர், சிவபெருமானின் திருமுடிமேல் விளங்கும் பிறையை நோக்கி, அவன் ஆபரணமான பாம்பு எப்பொழுதும் சீத்துப் பூத்தென்று சீறிக்கொண்டிருக்கும் என்று கற்பித்துப் பாடினார். அதேபோன்று 'வானத்துப் பிறைபோல விளங்கும் எம்மை நோக்கி நச்சரவமான நீரும் சீத்துப் பூத்தென்கின்றீர்' என்று பழிப்பது போன்றமைந்த உட்பொருளையும் அறிக.

**அப்பூருஞ் செஞ்சடைமேல் அம்புலியைப் பார்த்துப்பார்த்**
**தெப்போதும் சீத்துப்பூத் தென்னவே - முப்போதும்**
**வாலங்காட் டாநிற்கும் வாயங்கா வாநிற்கும்**
**ஆலங்காட் டான்பூண் அரா.** (24)

ஆலங்காட்டான் பூண் அரா - திருவாலங்காட்டிலே கோயில் கொண்டிருக்கும் எம்பெருமான் பூண்டிருக்கும் பாம்பானது;அப்பு ஊறும் செஞ்சடைமேல் அம்புலியைப் பார்த்துப் பார்த்து - கங்கை தங்கியிருக்கும் செஞ்சடையின் மேலாக விளங்கும் இளம் பிறையைப் பார்த்து; எப்போதும் சீத்துப் பூத்தென்னவே முப்போதும் அங்கு வால் ஆட்டா நிற்கும் - எப்பொழுதும் சீத்துப் பூத்தென்று முக்காலும் அவ்விடத்தே வாலாட்டிக் கொண் டிருக்கும்; வாய் அங்காவா நிற்கும் - வாயினைப் பிளந்தவாறும் இருக்கும்.

அராவின் அறியாமைக்குக் கேட்டவரின் அறியாமை உவமையாக ஆயிற்று.

## முக்கால் முதல் கீழரை வரை

'முக்கால் முதல் கீழரை வரை வரிசை முறை அலங்காரமாக ஒரு வெண்பாப் பாடுக' என்றனர் ஒருவர். கச்சி ஏகாம்பர நாதரைப் போற்றுமுகத்தால் அங்ஙனமே பாடுகின்றார் கவிஞர்.

**முக்காலுக் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்**
**அக்கா லரைக்கால் கண்டஞ்சாமுன்-விக்கி**
**இருமாமுன் மாகாணிக் கேகாமுன் கச்சி**
**ஒருமாவின் கீழரையின் றோது.** (25)

முக்காலுக்கு ஏகா முன் - முதுமைப் பருவம் வந்தடைய அதனால் தடியும் கைக்கொள்ள நேரிடலாகிய மூன்று கால்களாகித் தோன்றும் நிலைமைக்குச் செல்வதற்கு முன்பாகவே, முன் நரையில் வீழா முன் - அதற்கு முற்படவே நரைவிழுதலான தளர்ச்சிப் பருவத்தில் வீழ்வதற்கு முற்பட்டதாகவே, அக்காலரைக் கால் கண்டு அஞ்சாமுன் - அக்காலத்து உயிர் கவர்வதற்கு என வருகின்றவரான எமதூதர்களைக் கண்டு அஞ்சிக் கால்கள் நடுநடுங்குவதற்கு முன்பாகவே, விக்கி இருமாமுன் - விக்கல் எடுத்து இருமத் தொடங்குவதற்கு முன்பாகவே, மா காணிக்கு ஏகாமுன் - பெருநிலம் என்று சொல்லப்படும் சுடுகாட்டிற்குப் புறப்பட்டுச் செல்வதற்கு முன்பாகவே, கச்சி ஒரு மாவின் கீழரை இன்று ஓது - காஞ்சிபுரத்திலே ஒப்பற்ற மாமரத்தின் கீழாக வீற்றிருக்கும் ஏகாம்பர நாதரை இன்றே போற்றி வழிபடத் தொடங்குவாயாக.

முக்கால், அரை, கால், அரைக்கால், இருமா, மாகாணி, ஒருமா, கீழரை என வந்தமை கண்டு இன்புறுக; சிலேடைப் பொருள் நயத்தையும் அறிக.

## ஒரு வெண்பாவில் ஐந்து 'டு'

"ஒரு வெண்பாவிலே ஐந்து 'டு' வருமாறு பாடுக" என்றார் ஒருவர். பொருள் அமைதி சிறப்பாக இருத்தல் வேண்டும் எனவும் அவர் கூறினார்.

**ஓகாமா வீதோடு நெரொக்க டுடுடுடுடு**
**நாகார் குடந்தை நகர்க்கிறைவர்-வாகாய்**
**எடுப்பர் நடமிடுவர் ஏறுவரன் பர்க்குக்**
**கொடுப்ப ரணிவர் குழை. (26)**

என்ற உடனே பாடினார் காளமேகம். இதன் பொருள்: நாகு ஆர் குடந்தை நகர்க்கு இறைவர் - இளமரச் சோலைகள் நிறைந்த திருக்குடந்தை நகர்க்கு இறைவரான சிவபெருமான்; ஓகாமா வீதோடு டுடுடுடுடு நேர் ஒக்க. ஓ, கா, மா, வீ, தோ என்னும் ஐந்து எழுத்துக்களையும் டுடுடுடுடு என்னும் ஐந்து எழுத்துக்களுடனும் முறையே பொருந்துதலால் (வரும் சொற்கள் ஓடு, காடு, மாடு, வீடு, தோடு); வாகாய் எடுப்பர்; நடமிடுவர்; ஏறுவர்; அன்பர்க்குக் கொடுப்பர் அணிவர் குழை - அழகாகத் திருவோட்டினை ஏந்து பவர், காட்டிடத்தே நடம் புரிபவர், மாடாகிய வெள்ளேற்றின் மீது ஏறுபவர், அன்பர்க்கு வீடாகிய முக்தியைக் கொடுப்பவர் குழையாகிய காதணியைக் காதிலே தரிப்பவர் ஆவர்.

'நாகார்' என்பதற்குச் 'சங்கினம் நிறைந்த' எனவும் சொல்லலாம். நாகேசுவரரைக் குறிப்பதாயின் நாகங்கள் ஆர்ப் பரிக்கும் எனலும் பொருந்தும்: அது, இறைவன் நாகாபரணனாக விளங்குதலால் என்றும் அறிக.

## முச்சங்கத் தலைவர்கள்

'முச்சங்கத்துப் புலவர்கள், அவர்கள், இயற்றிய நூல்கள் ஆகியவற்றை எல்லாம் ஒரு வெண்பாவில் அமைத்துப் பாடுக' என்றனர் ஒருவர். அதற்கேற்பக் கவிஞர் சொல்லியது இச் செய்யுள்.

**நூலாநா லாயிரநா நூற்றுநாற் பத்தொன்பான்**
**பாலாநா னூற்றுநாற் பத்தொன்பான்-மேலாநாற்**
**பத்தொன்பான் சங்கமறு பத்துநா லாடலுக்கும்**
**கர்த்தன் மதுரையிற் சொக்கன். (27)**

'நூலாம் நாலாயிர நானூற்று நாற்பத்தொன்பான் - நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பது நூல்களையும், பாலாம் நானூற்று நாற்பத்தொன்பான் - அவற்றை இயற்றி 449 புலவர் களையும், மேலான் நாற்பத்தொன்பான் அவர்களின் தலைவராகத் திகழ்ந்த நாற்பத்து ஒன்பதின்மரையும் உடைய, சங்கம் - மூன்று சங்கங்களுக்கும் அறுபத்து நாலு ஆடலுக்கு - 64 திருவிளை யாடல்களுக்கும், கர்த்தன் மதுரையிற் சொக்கன் - உண்மையில் என்றும் தலைவனாக விளங்கியவன் மதுரையிலே கோயில் கொண்டிருக்கும் சொக்கநாதப் பெருமானே ஆவான்.

சங்கங்கள் மூன்றாகவும், அதன்கண் இருந்து தமிழாய்ந்தார் ஆயிரக்கணக்கினராகவும், திருவிளையாடல்கள் அறுபத்து நான்காகவும் விளங்கினவேனும், அவை அனைத்துக்கும் முதல்வனாகியவன் சொக்கநாதப் பெருமானே என்பது கருத்து.

## திருமாலின் அவதாரம்

திருமால் பத்து அவதாரங்களை எடுத்து உலகத்தின் நன்மைக்காகப் பாடுபட்டனர் என்பர் அவை மச்சம், கூர்மம், வராகம், வாமனம், நரசிங்கம், பரசுராமன், ராமன், பலராமன் கண்ணன் என்ற ஒன்பதும், இனிவரப்போகும் கல்கியும் ஆம். இவை அனைத்தையும் ஒரே வெண்பாவில் அமைத்துப் பாடுவீராக என்றார் அதிமதுரகவி.

"ஆன்றோர் பாராட்டுகின்ற மெய்யான புகழினை உடைய திருவேங்கடமுடைய பெருமானே! ஒரு வெண்பாவின் பாதி யிலேயே, என் கருத்திற்கு இசை, உன் அவதாரத்தை எடுத்துக் கூறுவதற்கு வந்து அருள் செய்வாயாக.

"மச்சாவதாரனே! கூர்மாவதாரனே! கோலம் என்னும் பன்றி அவதாரனே! நரசிங்க மூர்த்தியே! வாமனனே! பரசுராமனே! தசரதராமனே! பலராமனே! கோபாலனே! இனிக் கல்கி அவதாரமாகவும் ஆகின்ற பெருமானே!"

இந்தப் பொருள் அமைய, வெண்பாவிற் பாதியிலேயே பத்து அவதாரங்களும் வருமாறு பாடினார் காளமேகம்.

**மெச்சுபுகழ் வேங்கடவா வெண்பாவிற பாதியிலென்**
**இச்சையிலுன் சென்மம் எடுக்கவா-மச்சாகூர்**
**மாகோலா சிங்காவா மாராமா ராமாரா**
**மாகோபா லாமாவா வாய்.** (28)

*புகழ் - பெருமானின் கீர்த்திகள். மெச்சுதல் - ஆன்றோர்களின் போற்றுதல்களைக் குறித்தது. வேங்கடவன் - வேங்கடமாம் திருப்பதியிலே கோயில் கொண்டிருப்பவன். கூர்மம் - ஆமை. கோலம் - பன்றி. சிங்கம் - நரசிங்கம்; வாமநம - குறள் வடிவம். மா - குதிரை; ஆவாய் என்றது இனி வரப்போவதைக் குறித்தது.*

## ஈயேற மலை குலுங்கும்

*ஒரு புலவர் கொஞ்சம் குறும்புக்காரர், அவருடைய சிந்தனை அந்தப் பாதையிலேயே சென்றது "ஈயேற மலை குலுங்கும்" என்ற கருத்துடன், ஆனால் பொருள் நயமுள்ளதாக ஒரு வெண்பாவைச் சொல்ல முடியுமோ? என்று கேட்டார்.*

*காளமேகம் அதனைக் கேட்டுத் தமக்குள் சிரித்துக் கொண்டார். கண்ணபிரானின் பால லீலைகளை நினைத்தார். வெண்ணெய் திருடியுண்ட மாயன், இடைச்சியின் கைமத்தினால் அடியுண்ட அந்தச் சம்பவம் அவர் கண்முன் நிழலாடியது.*

**வாரணங்கள் எட்டும் மகமேரு வுங்கடலும்**
**தாரணியும் எல்லாம் சலித்தனவால்-நாரணனைப்**
**பண்பாய் இடைச்சி பருமத்தி னாலடித்த**
**புண்வாயில் ஈமொய்த்த போது:** (29)

*நாரணனை - ஆயர் பாடியிலே கண்ணனாக அவதரித் திருந்த நாராயணனை, பண்வாய் இடைச்சி பருமத்தினால் அடித்த புண்வாயில் ஈமொய்த்தபோது - பண்போலும் இனிதான பேச்சினை ளான இடைச்சியானவள் பெரிய மத்தினால் அடித்ததனாலே ஏற்பட்ட புண்ணிடத்தே ஈ மொய்க்கத் தொடங்கிய பொழுதிலே, வாரணங்கள் எட்டும் - அஷ்டதிக்கு யானைகளும், மகமேருவும் - மகாமேரு மலையும், கடலும் - ஏழ்கடலும், தாரணியும் - ஏழு உலகங்களும் (ஆகிய அனைத்துமே), சலித்தன - அசைவு கொண்டன.*

*"மகாமேரு அசைவு கொண்டது" என்பதால் ஈயேற மலைகுலுங்கப்பாடிய நயம் காண்க. எல்லாம் பெருமானின் திரு உதரத்தே வைத்து காக்கப்படுவன என்பார்கள் பெரியோர்கள். அதனால் அவன் உடல் குலுங்க அனைத்தும் தாமும் அசைந்தன என்றனர். ஆல் - அசை.*

## பொன்னாவரை இலை காய் பூ

'பொன்னாவரை இலை காய் பூ' என்னும் சொற்கள் வருமாறு வெண்பா ஒன்று சொல்லுக' என்று கேட்டார் ஒருவர்.

'பொன் ஆ வரை இலை காய் பூ' என்று அவற்றைக் கொண்டு திருமாலினோடு அவற்றைப் பொருத்திப் பாடினார் காளமேகம்.

**உடுத்ததுவும் மேய்த்ததுவும் உம்பர்கோன் தன்னால்**
**எடுத்ததுவும் பள்ளிக் கியையப் - படுத்ததுவும்**
**அந்நாள் எறிந்ததுவும் அன்பின் இரந்ததுவும்**
**பொன்னா வரையிலை காய் பூ. (30)**

திருமாலானவர், உடுத்ததுவும் - தாம் ஆடையாக உடுத்திக் கொண்டதும், உம்பர்கோன் தன்னால் எடுத்ததுவும் - தேவர் கோமனாகிய இந்திரனின் மழை பெய்வித்த செயலினாலே எடுத்துத் தாங்கிக் கொண்டதும், பள்ளிக்கு இயையப் படுத்ததுவும் - மகா பிரளயகாலத்திலேதான் கண் வளருவதற்கு ஏற்றதாகக் கொண்டு படுத்திருந்தும், அந்நாள் எறிந்ததுவும் - அந்த நாளிலே கன்றைக் குணிலாகக் கொண்டு எறிந்ததுவும், அன்பின் இரந்துதவும் தான் விரும்பிச் சென்று மாவலியினிடத்தே யாசித்ததுவும் பொன் ஆவரை இலை காய் பூ - பொன்னும். பசுக்களும் கோவர்த்தன மலையும், ஆலிலையும், விளங்காயும், நிலமும் ஆம்.

பூ - நிலவுலகம், குணில் - குறுந்தடி, இலை - ஆலிலை.

## கடல் நடுவிலே செந்தூள்

"கடல் நடுவிலே செந்தூள்" எழுந்ததாகக் கற்பித்துப் பாடுவதற்கு இயலுமோ?" என்றார் புலவர்.

காளமேகத்தின் நினைவில் சிவபெருமான் மன்மதனை எரித்த திருவிளையாடல் எழுந்தது. மன்மதன் திருமாலின் மகன். அதனால் அவனுடைய தாய் திருமகள் ஆகின்றாள். அவளுக்குப் புத்திர சோகம் இருக்கும் அல்லவா! அவள் மார்பில் அறைந்து கொண்டு கதறினாளாம். அப்போது அவள் மார்பிலே பூசியிருந்த சிந்துரக்கலவையின் செந்தூள் மேலே எழுந்து பரந்ததாம். அவளோ பாற்கடல் நடுவே அனந்த சயனத்திலே தன் நாயகனுடன் இருப்பவள். அதனால், கடல் நடுவே செந்தூள் எழுந்ததாகின்றது. இப்படிக் கற்பித்து நயமுடன் பாடுகிறார் காளமேகம்.

**சுத்தபாற் கடலின் நடுவினில் தூளி**
**தோன்றிய அதிசயம் அதுகேள்**
**மத்தகக் கரியை யுரித்ததன் மீது**
**மதன்பொரு தழிந்திடும் மாற்றம்**

**வித்தகக் கமலை செவியுறக் கேட்டாள்**
**விழுந்துநொந் தயாந்தழு தோங்கிக்**
**கைத்தல மலரால் மார்புறப் புடைத்தாள்**
**எழுந்தது கலவையின் செந்தூள். (31)**

*சுத்த பாற்கடலின் நடுவினில்* - பரிசுத்தமான பாற்கடலின் நடுவிடத்தே, *தூளி தோன்றிய அதிசயம் அது கேள்* - துகள் தோன்றியதான அந்த அதிசய நிகழ்ச்சியைக் கேட்பாயாக:

*மத்தகக் கரியை யுரித்தவன் மீது மதன் பொருது அழிந்திடும் மாற்றம்* - மத்தகத்தையுடைய யானையை உரித்துப் போர்த்த சிவபெருமான் மீதாக மதனன் போரிட்டு சென்று அழிந்ததான செய்தியை, *வித்தகக் கமலை செவியுறக் கேட்டாள்* - அறிவினை யுடைய தாமரை மலராளான திருமகள் தன் காது பொருந்தக் கேட்டாள்; கேட்டதும், *விழுந்து நொந்து அயர்ந்து ஓங்கிக் கைத்தல மலரால் மார்புறப் புடைத்தாள்* - மயங்கி விழுந்தாள்; மனம் நொந்து தளர்வுற்றாள்; அழுதாள்; ஓங்கித் தன் கைத்தல மாகிய மலரினாலே தன் மார்புறப் புடைத்துக் கொள்ளலையும் செய்தாள்; அப்போது *எழுந்தது கலவையின் செந்தூள்* - அவள் மார்பிற் பூசியிருந்த சிந்துரக் கலவைச் சாந்தின் செந்தூளானது அப்போது சிதறி மேலே எழுவதாயிற்று.

'வித்தகக் கமலை' என்றது அவள் பேரறிவு உடையவளா யிருந்தும், புத்திர சோகத்தின் காரணமாகப் பாசப் பற்றினாலே அறியாமை வயப்பட்டு, அப்படி மார்பிலே அறைந்துகொண்டு புலம்பினாள் என்பதற்காம். மும்மதங்கொண்ட யானையைக் கொன்று உரித்த சிவனை ஒரு மதன் சென்று பொருதினான் என்று கூறும் நயத்தை உணர்க; அதனால் அழிவை எதிர்நோக்கியே அவன் சென்றான் என்பதும் புலப்பட வைத்தனர்.

## மத்தால் அடித்தது

'யசோதைப் பிராட்டி கண்ணனை மத்தினாலே அடித்தாள் அல்லவா! அதற்கு இரங்குவது போன்று பொருள் அமைய ஒரு வெண்பாப் பாடுக' என்று சொன்னார் ஒருவர்.

கண்ணனின் பெருமைகளை எல்லாம் எடுத்துக் கூறி அப்படிப்பட்ட கண்ணன் அழுமாறு யசோதைப் பிராட்டி அடித்தனளே, அது எவ்வளவு அறியாமை உடைய செயல் என்னும் பொருளமைய, உடனே வெண்பாவைச் சொன்னார் காளமேகம். கேட்டவர் வாயடைத்துப் போய் விட்டனர்.

**வண்ணங் கரியனென்றும் வாய்வேத நாறியென்றும்**
**கண்ணன் இவனென்றும் கருதாமல்-மண்ணை**
**அடிப்பது மத்தாலே அளந்தானை யாய்ச்சி**
**அடிப்பது மத்தாலே யழ. (32)**

மண்ணை அடி பதுமத்தாலே அளந்தானை - வாமனனாகி வந்து உலகனைத்தையும் தன் திருவடித் தாமரையினாலே அளந்தவனாகிய பெருமானை, வண்ணன் கரியனென்றும் - நிறத்தினாற் கரியவனாகிய திருமாலே என்றும், வாய் வேத நாறி என்றும் - திரு வாயிடத்தே வேதமணம் கமழும் சிறப்புடையவனே என்றும், கண்ணன் இவன் என்றும் - பெருமையுடைய திருமால் இவனே என்றும், கருதாமல் - கருதிப் பார்த்து அவனைப் போற்றி தான் உய்வதற்கான வழிவகையினை நாடாமல், ஆய்ச்சி - இடைச்சியான யசோதைப் பிராட்டியானவள், அடிப்பது மத்தாலே அழ - அவன் அழுமாறு மத்தினாலேயோ அடிப்பது? இஃது இரங்குதற்கு உரிய செயல் அல்லவோ என்பது கருத்து.

மூன்றாவது அடியின், 'அடிப்பதுமத்தாலே' என்பதனை அடிப் பதுமத்தாலே' எனப் பகுத்துத் திருவடித் தாமரையினாலே எனப் பொருள் உரைத்துக் கொள்ளுதல் வேண்டும். வண்ணம் - நிறம். நாறி - மணப்பவன். கண்ணன் - அனைவருக்கும் கண்ணாக அமைந்த பிரான்..

## என்னை இடுக்கடி!

'என்னை இடுக்கடி, பாயைச் சுருட்டடி, ஏகடி அம்பலத்தே' என்றமைத்து ஒரு செய்யுள் சொல்லுக என்றனர் ஒருவர். அவருக்குச் சொன்னது இது.

**தடக்கடலிற் பள்ளிகொள்வோம் இதனைநற் சங்கரனார்**
**அடற்புலிக் குட்டிக்கு அளித்தனராம் - அதுகேட்டு நெஞ்சில்**
**நடுக்கம் வந்துற்றது கைகாலெழா நளினத்தி என்னை**
**இடுக்கடி பாயைச் சுருட்டடி ஏகடி அம்பலத்தே. (33)**

நளினத்தி - தாமரைமலரினள் ஆகிய என் நாயகியே! தடக் கடலில் பள்ளி கொள்வோம் - பரந்த பாற்கடலாகிய இதனிடத்தே பள்ளிக்கொண்டிருப்போம் நாம்; இதனைச் சங்கரனார் அடற் புலிக்குட்டிக்கு அளித்தனராம் - இந்தப் பாற்கடலைச் சங்கரனார் வலியுள்ள புலிக்குட்டியான உபமந்யு முனிவருக்கு அளித்து விட்டனராம். அதுகேட்டு நெஞ்சில் நடுக்கம் வந்துற்றது, கை கால் எழா - அதனைக் கேட்டதும் என் நெஞ்சிலே நடுக்கம் வந்தடைந்தது, கைகால்களும் எழாவாயின. (ஆதலால்) 'என்னை இடுக்கடி பாயைச் சுருட்டி - என்னை நின் கக்கத்தில் இடுக்கிக் கொள்ளடி. நம் பைந்நாகப் பாம்பையும் சுருட்டிக் கொள்ளடி; ஏகடி அம்பலத்தே - அம்பலத்திற் செல்லடி (சென்று நின் அண்ணனிடத்தே நம்நிலையை எடுத்துக்கூறி அதனை நீக்கும் வகையினை வேண்டுக எனவும், நின் தாய் வீட்டிற்கே இனிப் போகலாம் எனவும் சொன்னதாகக் கொள்க.)

## மார்பிலே கொம்பு

*'பன்றிக்கு மார்பிலே கொம்பு' என்று ஒரு செய்யுள் கூறுக' என்றார் ஒருவர்.*

*ஸ்ரீ முஷ்ணம் என்ற திருநகரில் கோயில் கொண்டிருக்கும் பெருமாளுக்குப் பூவராக சுவாமி என்று பெயர். அவர் மார்பிடத்தே பூங்கொம்பு போல்வளாகிய திருமகளைக் கொண்டிருப்பவர். இந்தக் கற்பிதத்தை வெண்பாவாகச் சொல்லி அவரைத் தலைகுனியச் செய்தார் கவிஞர்.*

**தெருமுட்டப் பாளை சிதற வளர்பூகத்**
**தருமுட்டச் செவ்வாளை தாவும்-திருமுட்டத்**
**தூரிலே கண்டேன் ஒரு புதுமை பன்றிக்கு**
**மாரிலே கொம்பான வாறு. (34)**

*தெருமுட்டப்பாளை சிதற - தெருக்கள் நிறையும்படி பாளைகள் சிதறிவிழுமாறு, வளர்பூகத்தரு முட்டச் செவ்வாளை தாவும் - வளர்ந்துள்ள கமுகமரங்கள் மீதெல்லாம் செவ்வாளை மீன்கள் பாய்ந்து விழுகின்ற நீர்வளத்தினைக் கொண்ட, திருமுட்டத்து ஊரிலே ஒரு புதுமை கண்டேன் - ஸ்ரீ முஷ்ணம் என்னும் ஊரிலே ஓர் அதிசயத்தினை நான் பார்த்தேன்; (அது) பன்றிக்கு மார்பிலே கொம்பு ஆன ஆறு - அது, பன்றிக்கு மார்பிலே கொம்பு உண்டாகி இருக்கின்ற நன்மையே யாம்.*

*பன்றி - பூவராக மூர்த்தி. அவர் மார்பில் கொம்பு உண்டாகி யிருந்த தன்மை - அவர் மார்பிடத்தே திருமகள் வீற்றிருக்கும் தன்மை; திருமகளைப் 'பூங்கொம்பு' என்றனர்.*

## பொன்னாவரை இலை காய் பூ!

*'இந்தப்படி முன் ஒருவர் கேட்க, அதற்கு உடுத்தவும் எனத் தொடங்குமோர் வெண்பாவைக் கவிராயரும் சொன்னார். மீண்டும் அதே தொடரைக் கொடுத்து வேறு ஒரு வெண்பாவில் அமைத்துப் பாடுக' என்றார் சாமிநாதர் என்னும் ஒருவர். அப்படியே கவிஞர் பாடியது இது.*

**தோய்ந்தான் மேய்த் தான்குடையாய்த்**
**தூக்கினான் மேன்மேலாச்**
**சாய்ந்தா னெறிந்தான்பின்**
**சாப்பிட்டான்-ஆய்ந்துசொலும்**
**மன்னா வரத்தில் வரு**
**மால்சாமி நாதாகேள்**
**பொன்னா வரையிலைகாய் பூ. (35)**

*ஆய்ந்து சொலும் மன்னா - எதனையும் ஆராய்ந்த பின்னரே அதனைப் பற்றிப் பேசும் இயல்புடைய மன்னவனே! அதனைப்*

பற்றிப் பேசும் இயல்புடைய மன்னவனே! வரத்தில் வரு சாமிநாதா கேள் - வருகிற போக்கிலே வந்து இந்தச் சபையில் அமர்ந்துவிட்ட சாமிநாதனே! கேட்பீராக:

மால் - திருமாலானவன், பொன் தோய்ந்தான் திருமகளோடு கலந்து இன்புற்றான்; ஆ மேய்ந்தான் - பசு மந்தைகளை மேய்த்தான்; தான் வரை குடையாத் தூக்கினான் - தான் கோவர்த்தனம் என்னும் மலையினையே குடையாகத் தூக்கிப் பிடித்தான்; இலை மேன் மேல் ஆச் சாய்ந்தான் - ஆலிலையின் மேலாகத் தன் உடல் கொண்டு படுத்தான்; காய் எறிந்தான் - விளங்காயை எறிந்தான்; பின் பூ சாப்பிட்டான் - பின்னர் நிலவுலகையும் விழுங்கினான் என்று அறிவீராக.

## மும்மூர்த்திகள்

'மும்மூர்த்திகளாகிய சிவன், விட்டுணு, பிரமன் ஆகியவர்களின் பெயர்கள் அமைந்திருக்க வேண்டும். அவர்கள் தின்னும் கறி, உண்ணும் உணவு, ஏந்தும் ஆயுதம், பூணும் அணிகள், ஏறும் ஊர்திகள் வசிக்கும் இடங்கள் இவை எல்லாம் வரவேண்டும். ஒரு வெண்பாவை இத்தகைய முறையிலே உம்மாற் பாட முடியுமோ?' என்றனர் புலவர் ஒருவர்.

**சிறுவ னளைபயறு செந்நெற் கடுகுபூ**
**மறிதிகிரி தண்டு மணி நூல்-பொறியவரம்**
**வெற்றேறு புள்ளன்னம் வேதனரன் மாலுக்குக்**
**கற்றாழம் பூவே கறி.** (36)

என்று காளமேகம் அதற்கு இசையப் பாடினார். புலவர் அயர்ந்து போனார்.

வேதன் அரன் மாலுக்கு - பிரமன் சிவன் திருமால் ஆகிய மும்மூர்த்திகளுக்கு; கறி பயறு சிறுவன் அளை - பயறும் பிள்ளையும் வெண்ணெயுமே கறிகளாம்; செந்நெல் கடுகுபூ - செந்நெல் விஷம் பூமி மூன்றுமே உணவுகளாம்; தண்டுமறி திகிரி - தண்டம் மான்மறி சக்கரம் இவையே ஆயுதங்களாம்; நூல் பொறி யரவம் மணி - முப்புரிநூல் புள்ளிகளையுடைய பாம்பு கௌத்துவமணி இவையே அணிகளாம்; வெற்றேறுபுள் அன்னம் - அன்னம், வெள்ளை ஆன் ஏறு, கருடப்புள் ஆகியவையே வாகனங்களாம்; கல் தாழம் பூ - தாமரை மலரும், கைலைமலையும் பாற்கடலும் ஆகிய மூன்றுமே வாழும் இடங்களாம்.

இவ்வாறு சொற்களைக் கூட்டிப் பொருள் உரைக்கவும்.

## எழுத்தாணி சூரிக்கத்தி

'எழுத்தாணி என்று எடுத்துச் சூரிக்கத்தி என்று முடித்து ஒரு செய்யுளைச் சொல்லுக' என்றார் ஒருவர். மிகவும் நயமுடனே பாடி அவரை மெய்மறக்கச் செய்தார் கவிஞர்.

**எழுத்தா ணிதுபெண் ணிதனைமுனி காதில்**
**வழுத்தா ரணக்குகளை வாதுக் - கழைத்ததுவும்**
**மாரன் கை வின்மான்முன் காத்ததுவும் நன்றாகும்**
**தீரமுள்ள சூரிக்கத் தி. (37)**

*எழுத்து ஆண் இது பெண் இது - எழுத்துக்குள்ளே ஆண் எழுத்து இதுவென்றும் பெண் எழுத்து இதுவென்றும், அனை முனி காதில் வழுத்து ஆரணக் குகனை - தமிழுக்கு அன்னை போன்றோனான அகத்திய முனிவனின் காதிலே உபதேசத்தருளிய வேதநாயகனான முருகப் பெருமானை, வாதுக்கு அழைத்ததுவும் - போரிடற்கு அழைத்ததுவும், மாரன் கைவில் - மன்மதனின் கரத்திலே வில்லாக விளங்குவதும், மால் முன் காத்ததுவும் - திருமால் முன்னாளிலே தோன்றிக் காத்தருளியதும், நன்றாகும் தீரமுள்ள சூர் இக்கு அத்தி - ஆற்றலுள்ள சூரபதுமன், கரும்பு, கஜேந்திர ஆழ்வான் ஆகிய யானை என் நன்முறையிலே பொருந்துவனவாம்.*

*சூரிக்கத்தி - சூர். இக்கு, அத்தி எனப் பிரிக்கப்பட்டுச் சூரன், கரும்பு, யானை எனப் பொருள் பயத்தலாயிற்று.*

**பச்சைவடம் பாகு சேலை சோமன்**

*'பச்சைவடம், பாகு, சேலை, சோமன் என்னும் சொற்கள் அமைய ஒரு வெண்பாவைச் சொல்லுக' என்றனர் மற்றொரு புலவர்.*

**மாயன் துயின்றதுவும் மாமலராள் சொல்லதுவும்**
**ஏய குருந்திற் கொண் டேறியதும்-தூயை**
**இடப்பாகன் சென்னியின் மேல் ஏறியதும் பச்சை**
**வடப்பாகு சேலைசோ மன். (38)**

*என்று காளமேகம் பாடினார். அதன் பொருள்:*

*மாயன் துயின்றதுவும் - மாயையால் பற்றப்படாதவனாகிய திருமால் மகா பிரளய காலத்திலே கண் வளர்ந்ததுவும், மாமலராள் சொல்லதுவும் - சிறந்த தாமரை மலரிலே இருப்பவளான திருமகளின் சொல்லாகிய அதுவும் கொண்டு, ஏய குருந்தில் ஏறியதும் - கண்ணன் கோபியரிடத்தில் கவர்ந்து கொண்டு குருந்த மரத்தின்மேல் ஏறிக்கொண்ட அதுவும், தூயை இடப்பாகன் சென்னியின்மேல் ஏறியதும் - பரிசுத்த சக்தியாகிய உமையை இடப்பாகத்தே கொண்டிருப்பவனான சிவபெருமானின் திருமுடியின் மேலாக ஏறிக் கொண்டிருப்பதுவும், பச்சை வடம் பாகு சேலை சோமன் - முறையே பச்சை நிறமுள்ள ஆலிலையும், வெல்லப்பாகும், சேலையும், சந்திரனும் ஆகும்.*

தூயை சக்தி; உமையம்மை. வடம் - ஆலிலை. பாகு - வெல்லப்பாகு.

**ரா மா ரா மா கோவிந்தா**

'ஒரு விகடன் அழகான ஒரு பெண்ணைப் பார்த்தான்; வியப்புடன் நிற்கின்றான். "ராமா ராமா! கோவிந்தா! வேங்கடவா! நாராயணா!" என்று இடையிடையே கூறிய வண்ணம் அவள் அழகை வியந்தும் கூறுகின்றான். அவன் கூற்றாக, மேற்கண்ட குறிப்புப் பொருந்த ஒரு வெண்பாச் சொல்லுக என்றார் ஒரு புலவர்.

**இந்தோ திலகநுதல் ராமரா மாவனசக்**
**கொந்தோ களபமுலை கோவிந்தா - சந்தமுறும்**
**வேலோ இணைவிழிகள் வேங்கடவா நல்லவயி**
**றாலோகா ணாரா யணா.** (39)

ராமராமா! - (இந்தப் பெண்ணுக்கு) திலக நுதல் இந்தோ - திலகம் விளங்கும் நெற்றிதான் பிறைச்சந்திரனோ? கோவிந்தா! (இந்தப் பெண்ணுக்கு) களப முலை வனசக் கொந்தோ - கலவைச் சாந்தம் அணிந்த தனங்கள் தாம் தாமரை முகைககளோ? வேங்கடவா! (இந்தப் பெண்ணுக்கு) இணை விழிகள் சந்தம் உறும் வேலோ - இரு விழிகளும் அழகு மிகுந்த வேல்கள்தாமோ? நாராயணா! (இந்தப் பெண்ணுக்கு) நல்ல வயிறு ஆலோ - நல்ல வயிறு ஆலிவலதானோ?

காண், அசை, இந்து - நிலவு; நெற்றிக்கு உவமை கூறப் பெற்றதனாலே 'பிறை நிலவு' என்று பொருள் உரைக்கப் பெற்றது.

## செருப்பு-விளக்குமாறு

ஒரு புலவருக்குக் கவிஞரை இழிவுபடுத்தவேண்டும் என்ற எண்ணம். "செருப்பு என்று தொடங்கி, விளக்குமாறு என்று முடித்து ஒரு வெண்பாவைப் பாடமுடியுமா?" என்றார்.

அவருடைய கருத்தின் தன்மையைப் புரிந்துகொண்டார் கவிஞர். அந்தச் சொற்களையே அமைத்துப்பாடினும் அதனாற் பொருட்சுவை மிக்கதாகத் தம் செய்யுளை அமைத்து அவரைத் திகைப்படையச் செய்கிறார்.

முருகப் பெருமானின் மீது காதல்கொண்ட ஒரு நங்கையானவள், பொய்கையிடத்துத் தாமரையிலே வந்து படிந்திருக்கும் வண்டிடத்தே, முருகனிடம் செல்லுவதற்கான வழியினை வினவி அறிவதுபோல அமைந்துள்ளது வெண்பா.

**செருப்புக்கு வீரர்களைச் சென்றுழக்கும் வேலன்**
**பொருப்புக்கு நாயகனைப் புல்ல-மறுப்புக்குத்**

**தண்டேன் பொழிந்ததிருத் தாமரைமேல் வீற்றிருக்கும்**
**வண்டே விளக்கு மாறே. (40)**

*செருப்புக்குச் சென்று வீரர்களை உழைக்கும் வேலன் - போர்க்களத்திடையே புகுந்துசென்று எதிர்த்த பகைவீரர்களைச் சிதறடிக்கின்றவனாகிய வேலனை, பொருப்புக்கு நாயகனை - குறிஞ்சி நிலத்துக்கு உரிய தலைவனை, புல்லயான் தழுவும் பொருட்டாக, தண் தேன் பொழிந்த திருத்தாமரைமேல் வீற்றிருக்கும் வண்டே - குளிர்ந்த தேனைப் பொழிந்த அழகிய தாமரை மலரின்மேலே தங்கியிருக்கின்ற வண்டே! விளக்கும் ஆறே - உரியதோர் வழியினை எனக்கு விளக்கிக் கூறுவாயாக!*

*ஆறு - என்பதற்கு அவனை அடையும் வழி எனவும் அவனிடத்தே செல்லும்வழி எனவும் பொருள் உரைக்கலாம்.*

## செங்கழுநீர்க் கிழங்கு

*செங்கழுநீர் என்பது நீர்ப்பூ வகைகளுள் ஒன்று. கச்சிக் காவலன் என்றொருவன் அந்தச் சபையிலே வந்திருந்தான். "செங்கழுநீர்க் கிழங்கு என்று அமைத்துப் பாடுக" என்றான் அவன். அப்போது காளமேகம் பாடிய செய்யுள் இது.*

**வாதமணர் ஏறியதும் மாயன் துயின்றதுவும்**
**ஆதிதடுத் தாட்கொண்ட அவ்வுருவும்-சீதரனார்**
**தாள்கொண் டளந்ததுவும் தண்கச்சிக் காவலா**
**கேள்செங் கழுநீர்க் கிழங்கு. (41)**

*தண் கச்சிக் காவலா கேள் - குளிர்ச்சி பொருந்திய கச்சி நகரத்துக் காவலனே! நீ குறித்தபடியே சொல்வேன் கேட்பாயாக:*

*வாது அமணர் ஏறியதும் - திருஞான சம்பந்தப் பெருமானோடு வாதிட்டுத் தோற்ற அமணர்கள் ஏறியிருந்ததுவும், மாயன் துயின்றதுவும் - மாயனான திருமால் பள்ளிகொண்டிருப்பதும், ஆதி தடுத்து ஆட்கொண்ட அவ்வுருவும் - முதல்வனான சிவபெருமான் சுந்தரரைத் தடுத்து ஆட்கொண்ட அந்தத் திருவுருவும், சீதரனார் தாள்கொண்டு அளந்ததுவும் - திருமாலானவர் தன் திருவடியினைக் கொண்டு அந்நாளிலே அளந்து கொண்டதுவும், செங்கழுநீர் கிழங்கு - செங்கழுவும், நீரும், கிழவுருவும், பூமியும் ஆகும்.*

*'செங்கழு' என்றது பழுக்கக் காய்ச்சிய கழுமரம் என்பதனால்; அல்லது, செங்குருதி வழியச் சிவப்படைந்து தோன்றிய கழுமரமும் ஆம், 'நீர்' என்றது பரந்தாமன் துயில் கொண்ட பாற்கடலினை. சீதரன் எனத் திருமாலைக் குறித்தது, அவன் திருமகளைத் தன் மார்பிலே தரித்திருப்பவன் ஆதலினால்.*

## கடுங்காற்றும் கடுநட்பும்

*பிறவாநெறி காட்டியார் என்றொரு தமிழ் அறிஞர். அவரும் காளமேகத்தின் கவித்திறத்தைக் காண எண்ணினார். "கடுங்காற்று மழைகாட்டும்; கடு நட்புப் பகை காட்டும்" என்ற உலக வசனத்தை இறுதியிலே அமைத்து ஒரு வெண்பா சொல்வீராக என்றார்.*

**நீரோ பிறவா நெறிகாட்டி யாரெமக்கு**
**நீரோ சமிசை நிலையிட்டீர்-நீரோயிவ்**
**விங்களமேன் செய்தீர் விடுங்கடுங்காற் றும்மழைகாட்**
**டுங்கடுநட் புப்பகைகாட் டும்.** (42)

*பிறவா நெறி காட்டியார் நீரோ - பிறவாத தன்மைக்கு உரிய வழியினைக் காட்டிய ஞானவான் என்பவர் நீர் தாமோ? எமக்கு நீரோ சமிசை நிலையிட்டீர் - எனக்கு இப்படிப்பட்ட சமிசையை ஏற்படுத்தியவரும் நீர்தாமோ? இவ் விங்களம் ஏன் செய்தீர்? விடும் - இத்தகைய வேறுபாட்டை எதற்காகச் செய்தீர்? இனியேனும் விட்டுவிடுவீராக; கடுங்காற்று மழை காட்டும் - வேகமாக வீசும் காற்று மழையினைக் கொணரும், கடுநட்புப்பகை காட்டும் - விரைந்த நட்பு (ஆராயாது விரைந்து கொள்ளும் நட்பு) பகையினைக் கொண்டு வந்துவிடும்.*

*பிறவா நெறி காட்டியார் என்ற பெயரினைக் கொண்டு அவர் அதற்கேற்ப அகந்தை அற்றவராக விளங்கவேண்டிய தாயிருக்க, சமிசைகொடுத்து அகந்தை கொண்டாராதலினால், இப்படிப் பாடி அவரைத் தலைகவிழச் செய்தனர் கவிஞர்.*

## குரங்கும் இடமும்

*'குரங்கு என்று தொடங்கி இடம் என்று முடியுமாறு ஒரு செய்யுள் செய்க' என்றார் ஒருவர். அவருக்கு அதே குறும்புடன் பாடல் சொல்லுகிறார் காளமேகம்.*

**குரங்கனலில் வீழ்ந்து வெறிகொண்டு தேள்கொட்ட**
**கரஞ்செறியப் பாம்பலவன் கவ்வ-விரைந்துபோய்**
**பற்றவே கள்ளுண்டு பச்சைமிள கைக்கடித்தால்**
**எத்தனைபார் சேட்டைக் கிடம்.** (43)

*ஒரு குரங்கானது நெருப்பிலே வீழ்ந்துவிட்டது. அதனால் வெறிகொண்டதாயிற்று. அப்போது ஒரு தேள் அதனைக் கொட்டிற்று. பாம்பு ஒன்று அதன் கையிலே சுற்றிக்கொண்டது. நண்டு வேறு அதனைக் கவ்வியது. அதன் நிலையைக்கண்டு பேயொன்றும் விரைந்துசென்று அதனைப் பற்றிக் கொண்டது. அதன்பின், கள்ளினையும் அது குடித்தது. இத்தனையும் போதா வென்று, அந்தக் குரங்கு பச்சைமிளகையும் கடிக்குமானால், அதன் சேட்டைகளுக்கு இடமாவன எத்தனை? அதனை நீயே நினைந்து காண்பாயாக!*

'நீயே பார்' என்றது, அந்தப் புலவரைக் குறும்பாகச் சொன்னதாம். 'நீயே! செய்து பார்' எனச் சொன்னதும் ஆம். இதன் உட்கருத்து 'நும் குரங்குச் சேட்டைகட்கு யாம் அஞ்சோம்' என்பதாம்.

## புங்கங் கொம் பங்கிங் கொன்பது

'புங்கங் கொம்பு அங்கு இங்கு ஒன்பது என வருமாறு வெண்பாவில் அமைத்துப் பாடுவீரர்க' என்றார் ஒருவர். அப்படியே சாதுரியமாகப் பாடியது இது.

**எங்கண் மடத்துக் கெரிதுரும்பு வெட்டுதற்குப்**
**புங்கங்கொம் பங்கிங் கொன் பதுபுளி-யங்கொம்பங்**
**கிங்கொன்ப துவெட்டி நறுக்கிய வெள்வெலங்**
**கொம்பங் கிங்கொன் பது. (44)**

எங்கள் மடத்துக்கு எரி துரும்பு - எங்கள் மடத்திற்காகத் தறித்துக்கொண்ட எரிக்கும் கட்டைகள் (விறகு), அங்கு இங்கு - அங்கும் இங்குமாகக் கொணரப்பட்டவை, புங்கங்கொம்பு ஒன்பது - புங்கமரத்துக்கிளைகள் ஒன்பதும் அங்கு இங்கு புளியங்கொம்பு ஒன்பது - அங்குமிங்குமாகத் தறிக்கப்பட்ட புளியங்கிளைகள் ஒன்பதும், அங்கு இங்கு வெட்டி நறுக்கிய வெள்வேலம் கொம்பு ஒன்பது - அங்குமிங்குமாக வெட்டி நறுக்கி கொணர்ந்த வெள்வேல மரத்தின் கொம்புகள் ஒன்பதும் ஆகும்.

## அப்பா யார்க்கும் இனிது!

'அப்பா என்று தொடங்கி, யார்க்கும் இனிது என்று முடித்து ஒரு வெண்பாச் சொல்லுக' என்றார் ஒருவர். கவிஞரும் அவ்வாறே சொன்னது இது.

**அப்பா குமரகோட் டக்கீரை செவ்விலிமேட்**
**டுப்பாகற் காய்பருத் திக்குளநீர் - செப்புவா**
**சாற்காற்றுங் கம்பத் தடியிற் றவங்கருமா**
**றிப்பாய்ச்சல் யார்க்கும் இனிது. (45)**

அப்பா - அப்பனே! குமர கோட்டக் கீரை - குமர கோட்டத்தின் அருகாமையிற் பயிரிடப் பெறுகின்ற கீரையும், செவ்விலி மேட்டுப் பாகற்காய் - செவ்விலி மேடு எனுமிடத்தில் பயிரிடப் பெறும் பாகற்காயும், பருத்திக் குளநீர் - திருப்பருத்திக் குன்றத்தேயுள்ள தண்ணீரும், செப்புவாசற்காற்றும் - காஞ்சீபுரங் கோவிலின் தெற்குக் கோபுர வாசலிலே வருகின்ற காற்றும், கம்பத் தடியில் தவம் - திருவேகம்பர் வீற்றிருக்கும் மாமரத்தடியிலே தவம் செய்தலும், கருமாறிப் பாய்ச்சல் - கருமாறி என்பதன் நீரைப் பாய்ச்சலும், யார்க்கும் இனிது - எல்லோருக்கும் இனிதாயிருப்பவை ஆம்.

## கரியும் உமியும்

'கரி என்று எடுத்து உமி' என்று முடிக்கவும், என்று முன்னரே ஒருவர் வினவக் கவிஞரும், 'கரியதனை' எனத் தொடங்கும் வெண்பாவைச் சொன்னார். இப்போது அந்த அவையிலிருந்த பெண்பாற் புலவர் ஒருவர் அதனையே மீண்டும் சமிக்ஞையாகக் கொடுக்கவே, கவிஞர், அவரை ஏளனஞ் செய்பவராக இப்படிப் பாடுகின்றார்.

**கரிக்காய் பொரித்தாள் கன்னிக்கா யைத்தீய்த்தாள்**
**பரிக்காயைப் பச்சடியாப் பண்ணாள்-உருக்கமுள்ள**
**அப்பைக்காய் நெய்துவட்ட லாக்கினாள் அத்தைமகள்**
**உப்புக்காண் *சீச்சீ* யுமி.** (46)

*அத்தை மகள் - என் அத்தை பெற்ற மகளானவள்; கரிக்காய் பொரித்தாள் - அத்திக் காயைப் பொரித்து வைத்தாள்; கன்னிக் காயைத் தீய்த்தாள் - வாழைக்காயை வதக்கி வைத்தாள்; பரிக் காயைப் பச்சடியாப் பண்ணாள் - மாங்காயைப் பச்சடியாகச் செய்து வைத்தாள்; உருக்கமுள்ள அப்பைக்காயை நெய் துவட்டல் ஆக்கினாள் - அனைவருக்கும் விருப்பமுள்ள கத்தரிக்காயை நெய் துவட்டலாகச் செய்து வைத்தாள்; (ஆனால் எல்லாவற்றிலும்) உப்புக்காண் சீசீ யுமி - உப்பு அதிகம்; அதனால் அவை எல்லாம் சீசீ என்று துப்பி விடுவதற்குத் தக்கனவே (அன்றித்தின்பதற்கு ஆகா.)*

*அத்தை மகள் ஆசையுடன் செய்தவை என்று உண்டால் எல்லாவற்றிலும் உப்பு அதிகம்! 'சீச்சீ' என்று சொல்லித் துப்பத்தான் வேண்டும். இப்படிப் பொருள் அமைகின்றது. இதனைக் கேட்டதும். அந்த அம்மையார் வெட்கித் தலை குனிந்தார்.*

## மன்-மலுக்கு

*'மன்னென்று எடுத்து மலுக்கென்று முடியும்படியான வெண்பாவொன்று அமைக்க' என்றார் ஒருவர்; அவர் சமிக்ஞையை ஏற்றுக் கவிஞர் பாடியது இது.*

**மன்னுதிரு வண்ணா மலைச்சம்பந் தாண்டாற்குப்**
**பன்னுந் தலைச்சவரம் பண்ணுவதேன்-மின்னின்**
**இளைத்தவிடை மாத ரிவன் குடுமி பற்றி**
**வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு.** (47)

*இந்தக் கேள்வியைக் கேட்டவர் திருவண்ணாமலையைச் சேர்ந்தவர்; சம்பந்தாண்டான் என்ற பெயரினர். தலையை மழுங்கச் சவரம் செய்து கொண்டிருந்தவர். அதனை ஏளனம் செய்து பாடுகிறார் கவிஞர்.*

மன்னு திருவண்ணாமலைச் சம்பந்தாண்டாற்குப் பன்னும் தலைச்சவரம் பண்ணுவதேன் - நிலைபெற்ற திருவண்ணா மலையினரான இந்தச் சம்பந்தாண்டான் என்பவருக்குச் சிறப்பாகத் தலைச்சவரம் பண்ணுவது எதற்காகத் தெரியுமா? மின்னின் இளைத்த இடை மாதர் - மின்னலினும் ஒடுங்கிய இடையுடைய வரான பெண்கள், இவன் குடுமிபற்றி வளைத்து இழுத்துக் குட்டாமலுக்கு - இவனுடைய குடுமியைப் பற்றி இவன் தலையை வளைத்து இழுத்துக் குட்டாமல் இருப்பதற்காகவே என்று அறிவீராக.

கேள்வி கேட்ட சம்பந்தாண்டான் அதன்பின் தலை நிமிரவே இல்லை. பெண்களிடம் அடிவாங்கும் பித்தன் என்று கவிஞர் பாடியது அவர் மனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது.

## 4. சிலேடையாகப் பாடியவை

(மேற்போக்கான சொல் அமைப்பிலே ஒன்றாகவும், ஆனால் அமைதியினாலே இரண்டு மூன்றாகப் பொருள் விளங்கு வதாகவுமுள்ள சுவையான செய்யுட்கள் இந்தப் பகுதியில் தரப்படுகின்றன. செய்யுளில் வரும் சொற்களை நன்றாக ஆராய்ந்து பொருள் நயத்தை உணர்ந்து இன்புறுதல் வேண்டும். இவற்றையும் தண்டிகைப் புலவர் கொடுத்த சமிக்ஞைப்படியே காளமேகம் பாடினார் என்பது வரலாறு.)

### ஆமணக்கும் யானைக்கும்

**முத்திருக்கும் கொம்பசைக்கும் மூரித்தண்டேந்திவரும்**
**கொத்திருக்கும் நேரே குலைசாய்க்கும்--எத்திசைக்கும்**
**தேமணக்குஞ் சோலைத் திருமலை ராயன்வரையில்**
**ஆமணக்கு மால்யானை யாம்.** (48)

எத்திசைக்கும் தேமணக்கும் சோலைத் திருமலைராயன் வரையில் - எல்லாத் திசைகளிலும் இனிய மணம் கமழ்ந்து கொண்டிருக்கும் திருமலைராயனுடைய மலைச்சாரலில், ஆமணக்கு மால் யானை யாம் - ஆமணக்கும் பெரிய மதயானை ஆகும். (அது எவ்வாறெனில்,)

**ஆமணக்கு:** முத்திருக்கும் கொம்பு அசைக்கும் - வித்துகள் விளங்கும், கிளைகளை அசைத்துக் கொண்டிருக்கும்; மூரித்தண்டு ஏந்தி வரும் - பெரிய தண்டுகள் மேலேந்தியபடி வளர்ந்திருக்கும்; நேரே குலைசாய்க்கும் - வரிசையாகக் காய்க் குலைகளைத் தொங்கவிட்டவாறு விளங்கும்.

**மால் யானை:** முத்திருக்கும் கொம்பசைக்கும் - முத்துக்கள் அமைந்திருக்கக்கூடிய தந்தங்களானதன் கொம்புகளை அசைத்துக் கொண்டு நிற்கும்; மூரித்தண்டு ஏந்தி வரும் - அந்தக் கொம்புகளில்

பருத்த கட்டைகளை ஏந்தியவாறு அது வந்து கொண்டிருக்கும்; கொத்து இருக்கும் - மத்தகத்திலே பாகர்கள் அங்குசத்தாற் கொத்திய வடுக்கள் இருக்கும்; நேரே குலைசாய்க்கும் - நேராக மலையிடத்துள்ள வாழைக்குலையினைச் சாய்த்து உண்ணு தலையும் அது செய்யும்.

### வைக்கோலுக்கும் யானைக்கும்

**வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்**
**போரிற் சிறந்து பொலிவாகும்-சீருற்ற**
**செக்கோல மேனித் திருமலை ராயன்வரையில்**
**வைக்கோலு மால்யானை யாம்.** (49)

சீர் உற்ற செக்கோல மேனித் திருமலைராயன் வரையில் சிறப்புப் பொருந்திய செந்நிறமான திருமேனியினையுடைய திருமலைராயனின் மலைச்சாரலிடத்தே; வைக்கோலும் மால் யானை யாம் - வைக்கோலும் மதயானைக்குச் சமமாம்; எவ்வாறு எனில்.

***வைக்கோல்:*** வாரிக் களத்து அடிக்கும் - அறுவடை செய்வோரால் வாரிக்கொணர்ந்து களத்துமேட்டிலே அடிக்கப் படும்; வந்து பின்பு கோட்டை புகும் - அதன் பின்பு கோட்டைக் குள்ளே வந்து சேரும்; போரிற் சிறந்து பொலிவாகும் - பெரிய வைக்கோற் போர்களாகச் சிறப்புற்று அழகாகவும் விளங்கும்.

***மதயானை:*** வாரிக்களத்து அடிக்கும் - பகைவர்களைத் துதிக்கையினாலே வாரிப் போர்க்களத்தே தரையில் அடித்துக் கொல்லும்; பின்பு வந்து கோட்டைபுகும் - அதன்பின்பு பகையரசின் கோட்டைகளைத் தகர்த்து உள்ளே செல்லும்; போரிற் சிறந்து பொலிவாகும் - இவ்வாறாகப் போர்த்துறையிலே சிறந்து மேன்மையுடையதாக விளங்கும்.

### பாம்புக்கும் வாழைப்பழத்திற்கும்

**நஞ்சிருக்கும் தோலுரிக்கும் நாதர்முடி மேலிருக்கும்**
**வெஞ்சினத்தில் பற்பட்டால் மீளாது-விஞ்சுமலர்த்**
**தேம்பாயும் சோலைத் திருமலைராயன்வரையில்**
**பாம்பாகும் வாழைப் பழம்.** (50)

விஞ்சு மலர்த்தேம் பாயும் சோலைத் திருமலைராயன் வரையில் - மிகுதியான மலர்கள் தேனைப் பொழிந்து கொண் டிருக்கும் சோலைகளையுடைய திருமலைராயனின் மலைச் சாரலிலே, பாம்பாகும் வாழைப் பழம் - வாழைப் பழம் பாம்புக்கு ஒப்புடையதாகும். எங்ஙனமெனில்,

***பாம்பு:*** நஞ்சு இருக்கும் - நஞ்சினைக் கொண்டதாயிருக்கும்; நாதர் முடி மேலிருக்கும் - தலைவராகிய சிவபெருமானின் திருமுடி

மீதிலும் ஆபரணமாக இருக்கும்; வெஞ்சினத்திற் பற்பட்டால் மீளாது - அதன் கொடிய சினத்திலே அதனுடைய நச்சுப்பல் எவர் மீதாவது பட்டதானால் அவர் உயிர் போய்விடுவதன்றி ஒரு போதும் மீளாது.

**வாழைப்பழம்:** நஞ்சிருக்கும் - நன்கு கனிந்ததால் நைந்து இருக்கும்; நாதர் முடி மேல் இருக்கும் - இறைவன் திருமுடி மேலாக அபிடேகம் பொருளான பஞ்சாமிர்தமாகவும் விளங்கும்; வெஞ்சினத்தில் பற்பட்டால் மீளாது - துணையுணவாகக் கொள்ளுங் காலத்தே பற்களிடையே சென்றானால், வயிற்றுனுட் செல்வதல்லாமல் மீள்வதில்லை; வெஞ்சினம் - தொடுகறி; துணை உணவு.

**பாம்புக்கும் எள்ளுக்கும்**

**ஆடிக் குடத்தடையும் ஆடும்போ தேயிரையும்**
**மூடித் திறக்கின் முகங்காட்டும் - ஓடிமண்டை**
**பற்றிற் பரபரெனும் பாரிற்பிண் ணாக்குமுண்டாம்**
**உற்றிடுபாம் பெள்ளனவே யோது.** (51)

**பாம்பு:** ஆடிக்குடத்து அடையும் - படமெடுத்து ஆடியபின் குடத்திலே சென்று அடைந்திருக்கும்; ஆடும் போதே இரையும் - ஆடுகின்ற போதிலேயே சீத்துப் பூத்தென்று இரைச்சலிடும்; மூடித் திறக்கின் முகம் காட்டும் - குடத்தை மூடித் திறந்தால் தன் தலையை வெளியே உயர்த்திக் காட்டும்; ஓடி மண்டை பற்றில் பரபரெனும் - விரைந்து அதன் தலையைப் பற்றிக் கொண்டாற் பரபரென்று சுற்றிக் கொள்ளும்; பாரிற் பிண்ணாக்கும் உண்டாம் - உலகிற் பிளவு பட்ட நாக்கும் அதற்கு உண்டாயிருக்கும்.

**எள்:** ஆடிக் குடத்து அடையும் - செக்கிலே ஆடி எண்ணெ யாகிக் குடத்திலே அடைந்திருக்கும்; ஆடும்போதே இரையும் - செக்கிலே ஆடும்பொழுதிலேயே இரைச்சல் செய்யும்; மூடித் திறக்கின் முகங்காட்டும் - குடத்து எண்ணெயை மூடிவைத்திருந்து பின் திறந்து பார்த்தால் பார்ப்பவரின் முகத்தைத் தெளிவாகக் காட்டும்; ஓடி மண்டை பற்றில் பரபரெனும் - விரைய மண்டை யிலே தேய்த்துக்கொண்டால் பரபரவெனக் குளிர்ச்சி உண்டாக் கும்; பாரிற் பிண்ணாக்கும் உண்டாம் - உலகிலே பிண்ணாக்கும் அதனிடத்தே உண்டாகும். (இதனால்) உற்றிடு பாம்பு எள்ளனவே ஓது - அடைந்திடும் பாம்பும் எள்ளும் சமமாகும் என்று சொல்லுக.

**பாம்புக்கும் எலுமிச்சம்பழத்துக்கும்**

**பெரியவிட மேசேரும் பித்தர் முடி யேறும்**
**அரியுண்ணு முப்புமே லாடும்-எரிகுணமாம்**
**தேம்பொழியும் சோலைத் திருமலை ராயன்வரையில்**
**பாம்பு எலுமிச்சம் பழம்.** (52)

தேம் பொழியும் சோலைத் திருமலைராயன் வரையில் - தேன் பொழிந்து கொண்டிருக்கின்ற சோலைகளையுடைய திருமலை ராயனின் மலைச்சாரலிலே, பாம்பும் எலுமிச்சம் பழம் - பாம்பும் எலுமிச்சம் பழத்தினைப் போல்வதாகும். அஃது எங்ஙனமெனில்,

**பாம்பு:** பெரிய விடமே சேரும் - மிகுதியான விஷத்தை உடையதாயிருக்கும்; பித்தர் முடிமேல் இருக்கும் - பித்தனான சிவபெருமானின் திருமுடி மேலும் விளங்கும்; அரி உண்ணும் - காற்றைப் புசிக்கும்; உப்பும் - அதனால் தன் உடலை உப்பிக் கொள்ளும்; மேல் ஆடும் - மேலாகத் தலைதூக்கி ஆடும்; எரிகுணம் ஆம் - சினமுடைய குணத்தினதும் ஆகும்.

**எலுமிச்சம் பழம்:** பெரியவிடமே சேரும் - பெரியவர் களிடத்தே கொடுக்கப்பட்டுச் சேர்ந்தும் இருக்கும்; பித்தர் முடிமேல் இருக்கும் - பித்தானோரின் தலைமீது தேய்க்கப் பட்டு அதனைப் போக்கும் மருந்தாகவும் விளங்கும்;அரியுண்ணும் உப்புமேலாடும் - (ஊறுகாயாகச் செய்யும் பொழுது) அரியப்பட்டு உப்பு தூவி வைக்கப்பெறும்; எரிகுணம் ஆம் - அதன் சாறுபட்டால் எரிச்சலைத் தருகிற குணத்தினை உடையதும் ஆகும்.

## முகுந்தனுக்கும் முறத்துக்கும்

**வல்லரியா யுற்றிடலால் மாதர்கையிற் பற்றிடலால்**
**சொல்லரிய மாப்புடைக்கத் தோன்றுதால்-வல்லோர்**
**அகந்தனிலே வாழ்தலால் அகன்றுல களந்த**
**முகுந்தனுமே யாகும் முறம்.** (53)

அன்று உலகு அளந்த முகுந்தனும் முறம் ஆகும் - அந்நாளிலே வாமனாகிய உலகளந்த திருமாலும் முறத்திற்கு ஒப்பாவான். எங்ஙனமெனில்,

**முகுந்தன்:** வல் அரியாய் உற்றிடலான் - வல்லமைகொண்ட நரசிங்கமாகத் தோன்றியதனாலும்; மாதர்கையிற் பற்றிடலால் - ஆய்ப்பாடியிலே பெண்களின் கையினாலே பிணிக்கப்பட்ட தாலும்; சொல் அரிய மாபுடைக்கத் தோன்றுதலால் - சொல்லு வதற்கு அரிதான குவலயாபீடம் என்றும் யானையைக் கொல்லு வதற்கு அவதரித்தமையினாலும்; வல்லோர் அகந்தனிலே வாழ்தலால் - வல்லமையுடையோரின் உள்ளங்களிலே வீற்றிருந் தாலும் (காத்தற் கடவுள் ஆயினமையின்)

**முறம்:** வல்லரியாய் உற்றிடலான் - கொழித்தற்கு ஏற்றதொரு கருவியாய் அமைதலானும், மாதர் கையிற் பற்றிடலால் - பெண்கள் கையிற் பற்றிப் பயன்படுத்தலாலும், சொல்லரிய மால்புடைக்கத் தோன்றுதலால் - சொல்லுதற்கு அரிதான மாவினைப் புடைப் பதற்குப் பயன்படுத்தலாலும், வல்லோர் அகந்தனிலே வாழ்வதால்

- பலருடைய வீடுகளிலும் இருத்தலாலும் என்க. (பல்லோர் வல்லோர் என முதல் சிறந்து வந்தது).

**சந்திரனுக்கும் மலைக்கும்**

**நிலவாய் விளங்குதலா னீள்வான் படிந்து**
**சிலபோ துலாவுதலாற் சென்று-தலைமேல்**
**உதித்து வரலா லுயர்மா மலையை**
**மதிக்கு நிகராக வழுத்து.** (54)

*மதி:* நிலவாய் விளங்குதலான் - நிலவொளி தருவதாக விளங்குவதானாலும் நீள்வான்படிந்து சிலபோது உலாவுதலால் - நெடிய வானிடத்தே பொருந்திச் சில காலத்துச் சஞ்சரிப்பதனாலும், சென்று தலைமேல் உதித்து வரலால் - மறைந்து சென்று மீளவும் உதித்துத் தலைக்கு மேலாக வானிடத்தே வருகின்றதனாலும்;

*மலை:* நிலவாய் விளங்குதலான் - பூமியினிடத்ததாக விளங்குதலினாலும், நீள்வான் படிந்து சிலபோது உலாவுதலால் - நெடிய வானத்தே அளாவிச் சில மலைப் பூக்கள் விளங்கப் பெற்றிருப்பதாலும், சென்று தலைமேல் உதித்து வரலால் - பூமியில் தொடராகப் பரவித் தலைக்கு மேலாக உயரத்தே எப்பொழுதும் தோன்றி விளங்குவதனாலும்;

உயர் மா மலையை மதிக்கு நிகராக வழுத்து - உயரமான பெரிய மலையினைச் சந்திரனுக்கு ஒப்புடையதாகச் சொல்லுக.

**நாய்க்கும் தேங்காய்க்கும்**

**ஓடு மிருக்குமத னுள்வாய் வெளுத்திருக்கும்**
**நாடுங் குலைதனக்கு நாணாகு-சேடியே**
**தீங்காய தில்லாத் திருமலைரா யன்வரையில்**
**தேங்காயு நாயுநேர் செப்பு.** (55)

சேடியே - தோழியே! தீங்குஆயது இல்லாத் திருமலைராயன் வரையில் - தீமை எனப்படுவது இல்லாதே இருக்கின்ற திருமலைராயனின் எல்லைக்குட்பட்ட நாட்டிலே, தேங்காயும் நாயும் இணை செப்பு - தேங்காயும் நாயும் ஒப்பிட்டு உரைத்துக் கொள்க, எங்ஙனமெனில்;

*தேங்காய்:* ஓடும் இருக்கும் - தனக்கு ஓர் ஓட்டையும் உடையதாயிருக்கும்; அதன் உள்வாய் வெளுத்திருக்கும். - அந்த ஓட்டின் உட்புறம் வெண்மையான தேங்காயைக் கொண்டிருக்கும்; நாடும் குலை தனக்கு நாணாது - அனைவராலும் விரும்பப்படும் குலையாகத் தொங்குவதற்கும் அது கோணுவதில்லை;

*நா:* - ஓடும் இருக்கும் - (சிலபோது) ஓடித்திரியும் (சில போது) இருந்தவிடத்திலேயே இருக்கவும் செய்யும்; அதன் உள்வாய் வெளுத்திருக்கும் - அதனுடைய வாயின் உட்புறம் வெண்மையா யிருக்கும்; நாடும் குலை தனக்கு நாணாது - அதற்கு விருப்பமான குரைத்தலிலே ஈடுபடுவதில் அது வெட்கப்படுவதே இல்லை (ஓயாது குரைத்துக் கொண்டேயிருக்கும்).

### மீனுக்கும் பேனுக்கும்

**மன்னீரி லேபிறக்கு மற்றலையி லேமேயும்**
**பின்னீச்சிற் குத்தும் பெருமையால் - சொன்னேன்கேள்**
**தேனுந்து சோலைத் திருமலையரா யன்வரையில்**
**மீனும்பே னுஞ்சரியா மே.** (56)

தேன் உந்து சோலைத் திருமலைராயன் வரையில் - தேன் பாய்கின்ற சோலைகளைக் கொண்ட திருமலைராயனின் மலையிடத்தே.

***மீனானது:*** மன் நீரிலே பிறக்கும் - நிலைபெற்ற நீரிலே தோன்றும், மற்று அலையிலே மேயும் - அந்த நீர் அலைகளிடத்தே மேய்ந்து கொண்டிருக்கும், பின் நீச்சின் குத்தும் - நீந்தும் பொழுது பின்தொடர்ந்து குத்துகின்ற இயல்பும் உடையதாயிருக்கும்;

***பேனானது:*** மன் ஈரிலே பிறக்கும் - மலையில் நிலைத்த பேன் முட்டையிடத்திலிருந்து தோன்றும், மன் தலையிலே மேயும் - அடர்த்தியான தலைமயிரிலே திரிந்து செல்லும், பின் ஈச்சின் குத்தும் - பின் பெண்களால்எடுத்து 'ஈச' என்னும் ஒலியுடனே குத்தவும் படும்.

பெருமையால் - இப்படியான பெருமைகளால், மீனும் பேனும் தம்முள் ஒப்படையன என்று,சொன்னேன் கேள் - யான் சொன்னேன், இதனைக் கேட்பாயாக.

### பனைமரத்திற்கும் வேசைக்கும்

**கட்டித் தழுவுதலாற் கால்சேர வேறுதலால்**
**எட்டிப் பன்னாடை இழுத்தலால்-முட்டப்போய்**
**ஆசைவாய்க் கள்ளை யருந்துதலா லப்பனையும்**
**வேசையென லாமே விரைந்து.** (57)

***பனைமரத்தில்*** : - கட்டித் தழுவுதலால் - ஏறும்பொழுது கட்டித் தழுவிக்கொண்டே ஏறுதலாலும், கால்சேர ஏறுதலால் - இரு கால்களையும் சேரவைத்து ஏறுதலாலும், எட்டிப்பன்னாடை இழுத்தலால் - உச்சியருகிலே சென்றதும் பன்னாடையை எட்டி இழுத்துக் கட்டுவதனாலும், முட்டப் போய் ஆசைவாய்க் கள்ளை அருந்துதலால் - நெருங்கிச்சென்று ஆசையூட்டக்கூடிய கள்ளினை அருந்துதலாலும்;

**வேசை:** கட்டித் தழுவுதலால் - தன்னிடத்து வருவாராற் கட்டி அணைக்கப்படுவதானாலும், கால் சேர ஏறுதலால் - கால் பொருந்த அவர்களால் அனுபவிக்கப் படுதலாலும், எட்டிப் பன்னாடை இழுத்தலால் - அவர்களாலே நெருங்கிச் சிறந்த அவள் ஆடை இழுக்கப்படுதலாலும், முட்டப்போய் ஆசை வாய்க் கள்ளை அருந்துதலால் - நெருங்கிச் சென்று அவளுடைய வாயிடத்து ஊறலாகிய மது ஆசையுடன் அருந்தப்படுகின்றதனாலும்;

அப் பனையும்வேசை எனலாமே விரைந்து - நாமும் விரைந்து அந்தப் பனையையும் வேசைபோன்றது என்று சொல்லலாம். 'அப்பனையும் வேசை எனலாம்' என்றசொற்கள் தரும் குறும்பான பொருள் நயத்தையும் உய்த்து அறிக.

## தென்னைமரத்திற்கும் வேசைக்கும்

**பாரத் தலைவிரிக்கும் பன்னாடை மேற்சுற்றும்**
**கோர விளநீர் சுமந்திருக்கும் -நேரேமேல்**
**ஏறி யிறங்கவே இன்பமாந் தென்னைமரம்**
**கூறுங் கணிகையென்றே கொள்.** (58)

தென்னை மரம் - தென்னை மரமானது, கூறும் கணிகை என்றே கொள் - சொல்லப்படும் கணிகைக்குச் சமமானதாகும் என்று சொல்லப்படும் கணிகைக்குச் சமமான தாகும் என்று சொல்வாயாக, எங்ஙனமெனில்,

***தென்னை மரமானது:*** பாரத் தலைவிரிக்கும் - நாற்புறமும் பரவியிருக்கும்படியாகத் தன் உச்சியின் ஓலைகளை விரித்துக் கொண்டு நிற்கும்; பன்னாடை மேற்சுற்றும் - அதன் மேலாக செருவல்கள் சூழ்ந்து கொண்டிருக்க விளங்கும்; சோர இளநீர் சுமந்திருக்கும் - ஓலைகளுக்கு இடையே மறைவாக இளநீர்க் காய்களைச் சுமந்துகொண்டிருக்கும்; நேரே மேல் ஏறி இறங்கவே இன்பமாம் - முறையாக மேலே ஏறி அவ் இளநீரை அருந்தி இறங்கி வந்தால் அது மிகவும் இன்பம் உடையதாயிருக்கும்;

***கணிகையானவள்:*** பாரத் தலைவிரிக்கும் - நாற்புறமும் சோர்ந்து பரவுமாறு கூந்தலைத் தொங்கவிட்டிருப்பாள்; பன்னாடை மேற்சுற்றும் - சிறப்பான ஆடைகளைத் தன் மேற்சுற்றிப் புனைந்திருப்பாள்; சோர இளநீர் சுமந்திருக்கும் - இடை தளரும்படியாக இளநீரைப் போலப் பூரிப்புடன் விளங்கும் கொங்கைகளைச் சுமந்தவளாக இருப்பாள்; நேரே மேல் ஏறி இறங்கவே இன்பமாம் - நேரிதாக அவளை அணைத்துக் கூடுவதனால் இன்பமும் உண்டாகும்.

## வெற்றிலைக்கும் வேசைக்கும்

**கொள்ளுகையா னீரிற் குறிக்கையான் மேலேறிக்
கிள்ளுகையாற் கட்டிக் கிடக்கையால் - தெள்ளுபுகழ்ச்
செற்றலரை வென்ற திருமலைரா யன்வரையில்
வெற்றிலையும் வேசையா மே. (59)**

*செற்றவரை வென்ற - தன்னோடு பகைத்து வந்தவரை வெற்றிகொண்ட, தெள்ளுபுகழ்த் திருமலைராயன் வரையில் - தெளிவான புகழினையுடைய திருமலைராயனின் மலைச் சாரலிலே,*

***வெற்றிலையானது:*** *நீர் கொள்ளுகையால் - நீர் மிகுதி யாகப் பாய்ச்சப்பெற்று வளர்வதனாலும்; நீரிற் குளிக்கையால் - நீரிலே கழுவப்படுதலாலும், மேல் ஏறிக்கிள்ளுகையால் - மேலாக எடுத்துக் கிள்ளிவிட்டே உண்ணப்படுதலினாலும், கட்டிக் கிடக்கையால் - விற்பனைப் பொருட்டாகக் கட்டி இணைத்து வைக்கப் பெறுவதனாலும்;*

***வேசையானவள்:*** *கொள்ளுகையால் - தன்பால் பணம் தந்து வருபவர் எவரேனும் அவரை ஏற்றுக் கொள்ளுகையினாலும், நீரிற் குளிக்கையால் - நீரிலே முழுகிக் குளிக்கின்ற தன்மையாலும், மேல் ஏறிக்கிள்ளுதலால் - அணைத்து நகக் குறிகள் பதிக்கப் பெறுதலாலும், கட்டிக் கிடக்கையால் - கட்டித் தழுவி இன்புறக் கிடத்தலினாலும்,*

*வெற்றிலையும் வேசையாமே - வெற்றிலையும் வேசை போலாவது எனலாம்.*

## கண்ணாடிக்கும் அரசனுக்கும்

**யாவருக்கும் ரஞ்சனை செய்தியாவருக்கு மவ்வவராய்
பாவனையாய்த் தீதகலப் பார்த்தலால் - மேவும்
எதிரியைத்தன் னுள்ளாக்கி யேற்ற ரசத்தால்
சதிருறலா லாடியர சாம். (60)**

***கண்ணாடியானது:*** *யாவருக்கும் ரஞ்சனை செய்து அனைவருக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கியும், யாவருக்கும் அவ்வவராய்ப் பாவனையாய் - யாவருக்கும் அவ்வவராகக் காட்டும் தன்மையுடையதாகியும், தீ தகலப் பார்த்தலால் - தீமை விலக மங்கலப் பொருளாகக் கருதிப் பார்க்கப்படுதலாலும், மேவும் எதிரியைத் தன்னுள் ஆக்கி - தன்னை அணுகும் எதிர்ப்படுவாரைத் தன்னுள்ளே ஆக்கிக் கொண்டு காட்டி, ஏற்ற ரசத்ததால் சதிருறலால் - தன் பின்புறத்து ஏற்றிருக்கும் ரசத்தினாலே சிறப்பு அடைதலினாலும்,*

*அரசனானவன்:* யாவருக்கும் ரஞ்சனை செய்து - எல்லா மக்களுக்கும் இன்பத்தை விளைவித்தும், யாவருக்கும் அவ்வவர் பாவனையாய் - அனைவருக்கும் அவ்வவரது இயல்பிற்குத் தகுந்தபடியாக விளங்கியும், தீதகலப்பார்த்தலால் - நாட்டிலே தீமைகள் அகன்று போகுமாறு கவனித்தும், மேவும் எதிரியைத் தன்னுளாக்கி - தன்னை அணுகும் எதிரியை வென்று தனக்கு உட்பட்டவனாக்கியும், ஏற்ற ரசத்தால் சதிர் உறலால் - மேற் கொண்ட நவரசப் பொருள்களாலும் சிறப்படையலாலும்;

ஆடி அரசாம் - கண்ணாடியும் அரசனும் ஒப்பாகக் கூறுதற்கு உரியவராம்.

### கூத்தியர்க்கும் குரங்குக்கும்

**ஓட்டங் கடியதா லுள்ளவரை மேவுதலால்**
**சேட்டை யெவரிடத்துஞ் செய்தலால் - நாட்டமுடன்**
**காத்திரத்திற் குட்டியுறக் கட்டுதலாற் றெட்டுதலால்**
**கூத்தியர்க்கு நேராம் குரங்கு. (61)**

*கூத்தியர்க்கு:* கூத்தியராகி பெண்களுக்கு, ஓட்டம் கடியதால் - உதட்டிற் கடிபடுவதனாலும், உள்ளவரை மேவுதலால் - பொருள் உள்ளவரைத் தழுவுதலினாலும், சேட்டை எவரிடத்தும் செய்த லால் - எல்லோரிடத்தும் குறும்புசெய்து விளையாடலாலும், நாட்டமுடன்காத்திரத்தில் குட்டி உறக்கட்டுதலால் - விருப்ப முடனே தழுவுவோர் உடலிலே தன்னுடல் பொருந்துமாறு கட்டிக் கொள்ளலாலும், தெட்டுதலால் - அப்போதே அவரைக் கவிழ்க்க வஞ்சனைகளைச்செய்வதனாலும் (பொருளைத் தட்டிப் பறிப்பதும் ஆம்);

*குரங்கு:* குரங்கானது, ஓட்டம் கடியதால் - விரைய ஓடிக் கொண்டே இருக்கும் இயல்புடையது ஆதலாலும், உள்ளவரை மேவுதலால் - தானிருக்கும் மலைமீது ஏறிச் சென்றிருப்பதனாலும், நாட்டமுடன் குட்டி காத்திரத்தில் உறக் கட்டுதலால் - விருப்ப முடன் குட்டியை உடலிற் பொருந்தக் கட்டிச் செல்லுதலாலும், தெட்டுதலால் - பொருள்களைத் தட்டிப் பறித்துச் செல்லுத லாலும், நேராம் - ஒப்பானதாகும்.

### குதிரைக்கும் காவிரிக்கும்

**ஓடுஞ் சுழிசுத்த முண்டாகும் துன்னலரைச்**
**வாடும் பரிவாய்த் தலைசாய்க்கும் - நாடறியத்**
**தேடு புகழான் திருமலைரா யன்வரையில்**
**ஆடுபரி காவிரியா மே. (62)**

நாடு அறியத் தேடு புகழான் - நாடெங்கும் அறியும்படியாகத் தேடின புகழை உடையவனாகிய, திருமலைராயன் வரையில் - திருமலைராயனின் வரையிடத்திலே,

*ஆடு பரி:* ஆட்டக் குதிரையானது, ஓடும் - ஓடிச் செல்லும், சுழி சுத்தம் உண்டாகும் - சுத்தமான சுழிகளை உடையதாயிருக்கும், துன்னலரைச் சாடும் - பகைவரை மோதி அழிக்கும், பரிவாய்த் தலைசாய்க்கும் - தன் தலைவனிடத்து அன்புடன் தலைசாய்த்து நிற்கும்;

*காவிரி:* காவிரியாறானது, ஓடும் - ஓட்டத்தை உடையதாயிருக்கும், சுழிச்சுத்தம் உண்டாகும் - அப்படிச் செல்லும் போது நீர்ச்சுழிகளை உடையதாயிருக்கும், தன்னிடத்தே குளிப்பவர்க்குச் சுத்தத்தையும் தரும், துன்னலரைச் சாடும் - நெருங்கிய மலர்களை அலைத்து எறியும், பரிவாய்த்த அலைசாய்க்கும் - குதிரை வாயின் நுரை போன்ற அலைகளை மடக்கி வீசும்;

அதனால் இரண்டும் தம்முள் நிகரானவையாகும். பரிவாய்த் தலை சாய்க்கும் எனக்கொண்டு கரையைப் பரித்து அந்த இடத்தின் மேல் மண்ணையும் தன்னுட் சாய்க்கும் எனவும் உரைக்கலாம்.

### கீரைப்பாத்திக்கும் குதிரைக்கும்

**கட்டி யடிக்கையாற் கான்மாறிப் பாய்கையால்**
**வெட்டி மறிக்கின்ற மேன்மையால் - முட்டப்போய்**
**மாறத் திரும்புகையால் வண்கீரைப் பாத்தியுடன்**
**ஏறப் பரியாகு மே. (63)**

வண் கீரைப் பாத்தியுடன் - வளமான கீரைப்பாத்தியுடனே, ஏற அப்பரி ஆகும் - ஏறுதற்குரிய அந்தக் குதிரையானது சமமாகும். எங்ஙனமெனில்,

*கீரைப்பாத்திக்கு:* கட்டி அடிக்கையால் - உழவு கட்டிகளை அடித்துத் தூளாக்குதனாலும், கால்மாறிப் பாய்கையால் - வாய்காலில் மாறிமாறி நீர் பாய்கையினாலும், வெட்டி மறிக்கின்ற மேன்மையால் - மண்ணை வெட்டி மறித்துப் பாத்திகளாக்கி வைத்திருக்கின்ற சிறப்பினாலும், முட்டப்போய் மாறித் திரும்புகையால் - நீர் கடைமடையின் இறுதிவரை சென்று மீளவும் மாறிவிடத் திரும்புகையினாலும்,

*குதிரைக்கு:* கட்டி அடிக்கையால் - வண்டிகளில் கட்டி அடித்து ஓட்டப்பெறுதலினாலும், கால் மாறிப் பாய்கையால் கால் மாறிமாறிப் பாய்ந்து செல்லுதலினாலும் வெட்டி மறிக்கின்ற மேன்மையால் - எதிரிகளைத் தாக்கிக் கொல்லுகின்ற சிறப்பினாலும், முட்டப்போய் மாறத் திரும்புதலால் - போகவேண்டிய இடம் முழுவதுஞ் சென்று, பின் மீளவும் திரும்பி வருதலினாலும் ஆம்.

## கதவுக்கும் ஆட்டுக்கும்

**செய்யுட் கிடைமறிக்கும் சேர்பலகை யிட்டுமுட்டும்**
**ஐயமற மேற்றா ளடர்க்குமே-துய்யநிலை**
**தேடும் புகழ்சேர் திருமலைரா யன்வரையில்**
**ஆடும் கதவுநிக ராம். (64)**

*புகழ்சேர் - புகழ் சேர்ந்துள்ள, திருமலைராயன் வரையில் திருமலைராயனின் மலைச்சாரலிடத்தே, ஆடும் கதவு நிகராம் - ஆடும் கதவும் ஒன்றற்கொன்று சமமானதாம்; எங்ஙனமெனில்,*

**ஆடு:** *செய்யுள் கிடை மறிக்கும் - வயலில் கிடையா மறிக்கப் படுதலினாலும், சேர் பலகையிட்டு முட்டும் - பொருந்திய பலகைகளைக் கொம்பினாற் குத்தி முட்டுதலினாலும், ஐயம் அற மேல்தாள் அடர்க்கும் - சந்தேகம் இன்றி மிகுதியான ஊக்கத் துடன்போரிடுவதனாலும்; துய்யநிலை தேடும்; தூய்மையான தங்குமிடத்தைத் தேடி அடைவதனாலும்,*

**கதவு:** *செய் உட்கிடை மறிக்கும் - வீட்டின் உள்ளிடத்தைத் தடுத்து மூடியிருத்தலாலும், சேர் பலகை இட்டு முட்டும் பொருத்தமான பலகைகளைக் கொண்டு மூட்டிச் செய்யப் படுதலினாலும், ஐயம் அற மேல் தாள் அடர்க்கும் - திண்ணமாக மூடப்படுவதற்கு மூடப்படுதலன்றித் தன்னிடத்தே தாளிடப்பட்டு இருத்தலினாலும், துய்யநிலைதேடும் - அழகான நிலையினைக் கூடியிருப்பதனாலும் ஆம்.*

## குதிரைக்கும் ஆட்டுக்கும்

**கொம்பிலையே தீனிதின்னும் கொண்டதன்மேல் வெட்டுதலால்**
**அம்புவியி னன்னடைய தாதலால் - உம்பர்களும்**
**தேடுநற் சோலைத் திருமலைரா யன்வரையில்**
**ஆடுங் குதிரையுநே ராம். (65)**

*உம்பர்களும் தேடும் நற்சோலைத் திருமலைராயன் வரையில் - தேவர்களும் தேடிவந்து மகிழும் சோலைகளையுடைய திருமலைராயனின் மலைச்சாரலிலே, ஆடும் குதிரையும் நேர் ஆம் - ஆடும் குதிரையும் தம்முள் ஒன்றற் கொன்று சமானமாகும். எங்ஙனமெனில்,*

**ஆடானது:** *கொம்பிலேயே தீனி தின்னும் - நனிக்கொம்பி லுள்ள இலைகளையே தனக்குத் தீனியாகத் தின்பது கொண்டு அதன்மேல் வெட்டுதலால் - அப்படித் தின்று கொண்டபின்பு அதன்மேல் அத் தீனியினை அசைபோடும் இயல்பும் உடையது; அம்புவியில் அன்னடையது - அழகான இவ்வுலகிலே ஒன்றைப் பின்பற்றி மற்றொன்றும் நடந்து போகின்றதான அத்தகையவொரு நடையினையும் உடையது;*

***குதிரையானது:*** *கொம்பிலையே - கொம்பு இல்லாதது; தீனி தின்னும் - தனக்கு வைக்கும் தீனியைத் தின்பது; கொண்டதன் மேல் வெட்டுதலால் - வீரர்கள் அதன்மேல் ஏறிக்கொண்டு சென்று மாற்றாரை வெட்டி அழிக்க உதவியாயிருப்பது; அம்புவியில்நல் நடையது - அழகிய உலகிலே நல்ல கதியை உடையது;*

*ஆதலால், இவை இரண்டும் சமம் என்க. சுதி - வேகம்.*

### துப்பாக்கிக்கும் ஓலைச் சுருளுக்கும்

**ஆணி வரையுறலா லானகுறிப் பேதரலால்**
**தோணக் கருமருந்தைத் தோய்ந்திடலால் - நீணிலத்தில்**
**செப்பார்க் குதவாத் திருமலைரா யன்வரையில்**
**துப்பாக்கி யோலைச் சுருள்.** (66)

***நீள் நிலத்தில்:*** *- நெடிதான இந்த உலகத்திலே, செப்பார்க்கு உதவா - தன்னைப் போற்றிச் சொல்லாத புலவர்க்குப் பயன்படுதல் இல்லாத, திருமலைராயன்வரையில் - திருமலைராயன் என்பவனின் மலைச்சாரலில், துப்பாக்கி ஓலைச் சுருள் - துப்பாக்கியும் ஓலைச்சுருளும் ஒன்றற்கொன்று சமானமாகும். எங்ஙனமெனில்,*

***துப்பாக்கியானது:*** *ஆணி வரையுறலால் - இருப்புச் சலாகையைத் தன்பாற் கொண்டிருத்தலாலும், ஆன குறிப்பே தரலால் - மேற்கொண்ட குறியினையே தாக்கி வெற்றி தருதலாலும், தோண கருமருந்தைத் தோய்ந்திடலால் - மிகுதியான கருமருந் தினைப் பொருந்தியதாக இருப்பதனாலும்;*

***ஓலைச் சுருளானது:*** *ஆணிவரை உறலால் - எழுத்தாணி கொண்டு எழுதப்படுதலை உடையதாதலாலும், ஆன குறிப்பே தரலால் - தன்னிடத்தே எழுதப்பட்டதாகிய குறிப்பைப் பெறுவோனுக்குத் தருகின்றதனாலும், தோண கருமருந்து தோய்ந்திடலால் - தன்னிடத்தே எழுதப்பட்டவை நன்கு புலனாகுமாறு கைக்காப்புச் செய்யப் பெறுதலை உடையதாதலாலும் ஆம்.*

### வானவில் விஷ்ணு வெற்றிலை

**நீரி லுளதா னிறம்பச்சை யாற்றிருவால்**
**பாரிற் பகைதீர்க்கும் பான்மையால் - சாருமனுப்**
**பல்வினையை மாற்றுதலால் பாரீர் பெருவான**
**வில்விண்டு நேர்வெற் றிலை.** (67)

*பெரு வானவில் விண்டு வெற்றிலை நேர் பாரீர் - பெரிதான வானவில்லும் விட்டுணுவும் வெற்றிலையும் தம்முள் சமமாயிருப்பதனைக் காணுங்கள், எங்ஙனமெனில்,*

***வானவில்லானது:*** *நீரில் உளதால் - நீரினிடத்தேயிருந்து உளதானபடியினாலும், நிறம் பச்சயால் - நிறத்திலே பசுமை*

*உடைத்தாயிருப்பதனாலும், திருவால் - அழகாயிருப்பதனாலும், பாரில் பகைதீர்க்கும் பான்மையினால் உலகில் வறட்சியினாலே எழும் பகைமையினை வளம் பெருக்க மழை வருகிறதென அறிவித்துத் தீர்த்துவைக்கின்ற தன்மையினாலும், சாரும் மனுப் பல் வினையை மாற்றுதலால் - உலகிற் பொருந்திய மக்களின் பல்வகைத் துயரங்களையும் போக்குவதனாலும்,*

***விஷ்ணுவானவர்*** *- நீரில் உளதால் - பிரளய காலத்தே - நீரின் மேற் பள்ளிகொண்டிருந்தலினாலும், நிறம் பச்சையால் - பச்சைத் திருமேனியினை உடைமையினாலும், திருவால் - திருமகளை மார்பிடத்தே கொண்டிருத்தலாலும், பாரில் பகை தீர்க்கும் பான்மையினால் - உலகிடத்தே அறநெறிப் பகைஞரை அழித்துக் காக்கும் தன்மையினாலும், சாரு மனுபல்வினையை மாற்றுதலால் - தன்னைச் சரணடையும் மனிதர்களின் பல்வேறு வினைகளையும் மாற்றி அவர்க்கு நற்கதி அருளுதலினாலும்,*

***வெற்றிலையானது:*** *நீரில் உளதால் - நீர்க்கால்களிலேயே உண்டாவதனாலும், நிறம் பச்சையால் - பச்சை நிறத்தினை உடையதாயிருந்தலாலும், திருவால் - மங்கலப் பொருளாக இருந்ததலாலும், பாரிற் பகை தீர்க்கும் பான்மையால் உலகிற் பகை தீர்க்கும் இடத்து நட்புக்கு அடையாளப் பொருளாக அமைகின்ற தன்மையினாலும், சாரும் மனு பல்வினையை மாற்றுதலால் தன்னைப் பொருந்திய மக்களுடைய பல வியாதிகளைப் போக்குவதனாலும் என்க.*

**பூசுணிக்காயும் பரமசிவனும்**

> **அடிநந்தி சேர்தலா லாகம் வெளுத்துத்**
> **கொடியுமொரு பக்கத்திற் கொண்டு - வடிவுடைய**
> **மாசுணத்தைப் பூண்டு வளைத்தழும்பு பெற்றதனால்**
> **பூசுணிக்கா யீசனெனப் போற்று. (68)**

*பூசுணிக்காய் ஈசனெனப் போற்று: பூசணிக்காயையும் ஈசன் என்று கருதிப் போற்றுக. எதனாலெனின்,*

***பூசுணிக்காயானது:*** *அடி நந்தி சேர்தலால் - அடிப் பாகத்தே பெரிய காம்பு சேர்ந்திருக்க விளங்குவதனாலும், ஆகம் வெளுத்துக் கொடியும் ஒருபக்கத்தே கொண்டு வடிவுடைய மாசுணத்தைப் பூண்டு வளைத்தழும்பு பெற்றதனால் - உடல் வெளுத்து, ஒரு பக்கத்தே கொடியினையும் கொண்டதாகி, அழகான வெண்சுண்ணத்தை மேற்புறத்தே கொண்டு, வளைவான தழும்புகளையும் பெற்றிருப்பதனாலும்,*

***பரமசிவன்:*** *அடி நந்தி சேர்தலால் - திருவடியிலே நந்திப் பெருமான் சேர்ந்திருத்தலாலும், ஆகம் வெளுத்து - திருநீறணிந்து உடல் வெள்ளை நிறமாகத் தோன்றுதலாலும், கொடியும் ஒரு*

*பக்கத்திற்கொண்டு - தன் ஒரு பாகத்திலே பூங்கொடியான உமையினைக் கொண்டிருப்பதனாலும், மாசுணத்தைப் பூண்டு - சிறந்த பாம்பாபரணத்தைக் கொண்டிருப்பதனாலும், வளைத் தழும்பு பெற்றதனால் - தன் திருமேனியிடத்தே தழுவுங்காலத்தே அம்மையின் வளையல்கள் அழுத்திய தழும்புகளை உடையவரா யிருப்பதனாலும் என்க.*

**விநாயகர் முருகர் பரமசிவன்**

**சென்னிமுக மாறுளதாற் சேர்கரமுன் னாலுகையால்**
**இந்நிலத்திற் கோடொன் றிருக்கையால் - மன்னுகுளக்**
**கண்ணுறுத லானுங் கணபதியுஞ் செவ்வேளும்**
**எண்ணரனு நேரா வரே. (69)**

***விநாயகர்க்கு:*** சென்னி முகம் மாறுளதால் - தலையும் முகமும் உடலமைப்பற்கு மாறுபட்டிருத்தலாலும், சேர்கரம் முன் நாலுகையால் - பொருந்திய துதிக்கையானது முன்புறமாகத் தொங்கிக் கொண்டிருக்கின்றதனாலும், இந்நிலத்திற் கோடு ஒன்று உருக்கையால் - இவ்வுலகத்தில் ஒற்றைக் கொம்பு அமைந்தவரா யிருத்தவராயிருந்தலினாலும், மன்னு குளக்கண் உறுதலால் - நிலைபெற்ற நிவேதனமாக வெல்லம் அமைத்து இருப்பதனாலும்,

***முருகர்க்கு:*** சென்னி முகம் ஆறு உளதால் - முடியும் முகமும் ஆறு உளதாதலினாலும், சேர்கரம் முந்நாலு கையால் - பொருந்திய கரங்களும் பன்னிரண்டாக இருத்தலினாலும், இந் நிலத்தில் கோடு ஒன்று இருக்கையால் - இவ்வுலகில் குன்றமே பொருந்தியிருக்கும் இருப்பிடமாக இருந்தலாலும், மன்னு குளக்கண் உறுதலால் - நிலைபெற்ற சரவணப் பொய்கையிலே அவதரித்ததனாலும்,

***பரமசிவனுக்கு:*** சென்னிமுகம் ஆறு உளதால் - சிரசினிடத்தே கங்கையாறு உளதாயிருத்தலினாலும், முன்சேர் கரம் நாலுகையால் - முன்புறத்தே தேர்ந்த ஒளியுள்ள கைகள் நான்கினை உடைத்தாயிருத்தலினாலும், இந்நிலத்தில் கோடு ஒன்று இருக்கையால் - இவ்வுலகில் ஒரு மலை முடியான கைலாச பர்வதம் எனும் ஒன்று இருப்பிடமாயிருத்தலினாலும், மன்னுகுளக் கண் உறுதலால் - நிலை பெற்ற நெற்றிக்கண்ணினை உடைத்தா யிருத்தலினாலும், இம் மூவரும் சமம் என்க.

இந்தச் செய்யுட்களை மனப்பாடம் செய்தல் பயன் தரும், சொல்வளமும், சொற்களைப் பல பொருள்பட அமைத்துப்பாடும் புலமையும் பெருகும். தமிழன்பர்களுக்கு நல்ல இலக்கிய வாதங்களில் இவ்வாறு பொருள் கொள்ளும் நுட்பமான அறிவு நலமும் உண்டாகும்.

இலக்கியப் பயிற்சியானது நுட்பமான அறிவு நலத்தைப் பெறுவதற்கும். ஒழுகலாறுகளை நெறிப்படுத்துவதற்கும் பயன்பட வேண்டும். சிந்தனையைத் தூண்டிச் செயற் படுத்தும் இச்செய்யுட்கள், அந்த இருவகைப் பயன்களையும் தருவதாகும்.

காளமேகம் இந்த வகையில் பெரும் புலமை பெற்றவர். மேற்போக்காகக் கேலிசெய்வது போலத் தோன்றுமாறும், அதே சமயம் நுட்பமான பொருள்வளம் அமையுமாறும் செய்யுள் செய்வதில் நிகரற்றவர்.

ஒருவகையான சொல்லமைப்புக்கள், அவற்றைப் பிரிக்கும் திறனால் இரண்டு மூன்று வகையான பொருள் அமைதிகளைத் தருகின்றன. சொல்லாட்சியும் இலக்கண அறிவும் இதற்கு நிரம்ப வேண்டும். கருத்துகளிலும் தெளிவு இருக்க வேண்டும்.

அந்த வகையில், இலக்கிய மாணவர்களுக்கு இப்பகுதிப் பாடல்கள் நிறைந்த பயிற்சியைத் தரும். படித்துப் படித்துச் சிந்தித்துச் சிந்தித்து இன்புறவேண்டிய சுவையான செய்யுட்கள் இவை.

## 5. வித்தாரச் செய்யுட்கள்

*(செய்யுள் அமைதியுடன் வித்தாரமாகப் பாடியவை இவை. நுட்பமாகப் பொருளைக் கண்டு உணர்தல் வேண்டும். வித்தாரம் - பரந்துபட்ட அறிவு.)*

**ககர வருக்கப் பாட்டு**

**காக்கைக்கா காகூகை கூகைக்கா காகாக்கை**
**கோக்குக்கூக் காக்கைக்குக் கொக்கொக்க-கைக்கைக்குக்**
**காக்கைக்குக் கைக்கைக்கா கா.** (70)

"ககர வருக்கமே முற்றவும் அமைந்து வருமாறு ஒரு செய்யுளைச் செய்க" எனக் கேட்டவர் வியக்குமாறு சொல்லியது இது.

காக்கைக்கு ஆகா கூகை - காக்கைக்கு கூகை இரவில் வெல்லுதற்கு ஆகாது, கூகைக்கு ஆகா காக்கை - கூகைக்குக் காக்கை பகலில் வெல்லுதற்கு ஆகாது, (அதனால்) கோக்கு கூ காக்கைக்கு - அரசனுக்காக அவன் நாட்டைப் பகைவரிடமிருந்து காப்பாற்றுகைக்கும்; கொக்கு ஒக்க - கொக்கைப் போலத் தகுதியான சமயம் வரும் வரை காத்திருக்க வேண்டும், கைக்கைக்கு - பகையை எதிர்த்து, காக்கைக்கு - காப்பாற்றுவதற்கு, கைக்கு ஐக்கு ஆகா (காலமற்ற காலமாயின்) சாமர்த்தியமுள்ள தலைவனுக்கும் இயலாதாகிப் போய்விடும்.

### தகர வருக்கப் பாட்டு

**தத்தித்தா தூதுதி தாதூதித் தத்துதி**
**துத்தித் துதைதி துதைதத்தா தாதுதி**
**தித்தித்த தித்தித்த தாதெது தித்தித்த**
**தெத்தாதோ தித்தித்த தாது? (71)**

'முற்றவும் தகரவருக்க எழுத்துக்களே அமைந்து வருமாறு இயற்றுக' என்று கேட்ட ஒருவருக்குச் சொல்லியது இச்செய்யுள்,

வண்டே! தத்தி தாது ஊதுதி - தாவிச் சென்று பூந்தாதினை ஊதி உண்ணுகின்றாய்; தாது ஊதித் துத்தி - பூந்தாதினை ஊதி உண்ட பின்னர் மீளவும் தாவி எங்கோ செல்லுகின்றாய்; துத்தி துதைதி - துத்தி என ரீங்கார ஒலி எழுப்பியபடியே மற்றொரு பூவினை நெருங்குகின்றாய்; துதைந்து அத்தாது ஊதுதி - அப் பூவினை அணுகி அதனிடத்துப் பூந்தாதினையும் ஊதி உண்ணுகின்றாய். தித்தித்த தாது எது - நினக்கு இனிப்பாயிருந்த பூ எதுவோ? தித்தித்தது எத் தாதோ - இனித்திருந்தது எதன் மகரந்தமோ? தித்தித்த தாது - இதழாக அழகியதும் எப் பூவோ?

துதைந்து என்ற சொல் துதைத்து என விகாரமாயிற்று. தாது - பூந்தாது, பூவிதழ், பூ என மூன்றையும் குறிப்பதாம்.

### தாதி தூதோ தீது

இதுவும் தகர வருக்கச் செய்யுள்தான். 'தூது' என்ற சொல் பன்முறை வருமாறு பாடியுள்ளார். இங்ஙனம் பாடுமாறு ஒருவர் கேட்கக் கவிஞர் பாடியதாகக் கொள்க.

**தாதிதூ தோதீது தத்தைத்தூ தோதாது**
**தூதிதூ தொத்தித்த தூததே - தாதொத்த**
**துத்திதத் தாதே துதித்துத்தே தொத்தீது**
**தித்தித்த தோதித் திதி. (72)**

(இப் பாடல் கவிஞர் கண்ணதாசனின் "வானம்பாடி" திரைப் படத்தில் இடம் பெற்ற போட்டிப் பாடலாகும்)

தாதி தூதோ தீது - அடிமைப் பெண்கள் சென்று உரைக்கும் - தூதோ பயன்படாதது. தத்தை தூது ஓதாது கிளியோ போய்த் தூது உரைக்க மாட்டாது; தூதி தூது ஒத்தித்த தூததே - தோழியின் தூதானது நாளைக்கடத்திக்கொண்டே போகும் தூதாயிருக்கும்; தேதுதித்த தொத்து தீது - தெய்வத்தை வழிபட்டுத் தொடர்தலும் பயனற்றதாகும்; (அதனால்) தாதொத்த துத்தி தத்தாதே - பூந்தாதினைப் போன்ற தேமல்கள்என்மேற் படர்ந்து மிகாது; தித்தித்தது ஓதித் திதி - எனக்கு இனிமையான தான என் காதலனின் பெயரையே நான் ஓதிக்கொண்டிருப்பேனாக.

தலைவியின் இல்லத்தே தாய் தெய்வத்தை வழிபட்டுத் தன் மகளின் மனமாற்றத்தைத் தீர்க்குமாறு வேண்டுதற்கு ஏற்பாடு செய்ய, மகள், அதனை விலக்குமாறு இங்ஙனம் கூறினாளாகக் கொள்க.

### வல்லினப் பாட்டு

“முற்றவும் வல்லின எழுத்துகள் அமையும்படியாக ஒரு செய்யுள் செய்க” என்று ஒருவர் கேட்கப் பாடியது இது.

**துடித்துத் தடித்துத் துடுப்பெடுத்த கோடற்**
**றொடுத்த தொடைகடுக்கை பொற்போற்-பொடித்துத்**
**தொடைபடைத்த தோடுடித்த தோகைகூத் தாடக்**
**கடிபடைத்துக் காட்டித்துக் காடு.** (73)

கோடல் துடித்துத் தடித்துத் துடுப்பு எடுத்த - காந்தள் முகிழ்த்தனவாய் ஒளிகொண்டவாய் அரும்புகளை எடுத்தன; கடுக்கை பொற்போல் தொடை தொடுத்த - கொன்றைகள் பொன் போன்று ஒளிறும் மாலைகளைத் தொங்கவிட்டன; தொடை படைத்த தோபொடித்துத் துடித்த - வளைகளை அணிந்தவையான தோள்கள் சிலிர்த்துத் துடிதுடிப்பவை ஆயின; தோகை கூத்தாட மயிலினம் கூத்து ஆடத் தொடங்கின; காடு கடிபடைத்துக் காட்டிற்று - இப்படியாக காடே தனக்கொரு மணத்தினைப் படைத்துக் கொண்டதாகத் தன்னைக் காட்ட லாயிற்று.

கார் காலம் தொடங்கிற்று என்பதனால் ஏற்படும் நிகழ்ச்சிகள் இவை எல்லாம். ‘தோகை கூத்தாட’ என்பதனுள் ‘கூத்தாடின’ என்பது கூத்தாட எனத் தொக்கி நின்றது.

### மெல்லினப் பாட்டு

முற்றவும் மெல்லின எழுத்துக்களால் அமைந்தது இச்செய்யுள். அங்ஙனம் பாடுமாறு ஒருவர் கேட்கக் கவிஞர் பாடியது இது.

**மானமே நண்ணா மனமென் மனமென்னும்**
**மானமான் மன்னா நனிநாணும் - மீனமா**
**மானா மினன்மின்னிமுன் முன்னே நண்ணினு**
**மானா மணிமேனி மான்.** (74)

மானமே நண்ணா மனம் என் - மானம் உடைய தமை யினையே விரும்பாத மனத்தின் இயல்புதான் என்னே? ஆனா மணி மேனி மான் - ஒப்பற்ற செம்மணி போன்ற திருமேனியினை உடையாளான மான்போன்ற ஒரு நங்கை, ஆனா மினல் மின்னி முன் முன்னே நண்ணினும் - தன் அணிகளால் நீங்காத முன்னொளி

யினைப் பரப்பிக் கொண்டு முன்னாக முன்னாக வந்தாலும், என் மனமென்னும் மானமான் - என் மனம் என்று சொல்லப் படுகின்ற பெரிய யானையானது, மன்னா நாணும் ஈனமாம் - மிகவும் வெட்கப்படும்; அவட்குத் தாழ்ந்தும் இழிவுற்று நீங்கும்.

ஆணின் உள்ளத்து எத்துணைத் தற்பெருமை இருப்பினும், அது ஒரு பெண் முன்னே வரக் கண்டதுமே குன்றிப் போய் வெட்கித் தாழ்வுற்று விடும் தன்மை உடையதாகி விடுகிறது என்பது கருத்து. சொற்களைப் பகுத்து பொருள் காணும் வகையினை அறிந்து அநுபவிக்கவும்.

## இடையினப் பாட்டு

'யரல வழள' என்பவை இடையின எழுத்துக்கள். இவையே முற்றவும் வருமாறு செய்யப் பெற்றது இச்செய்யுள். அங்ஙனம் ஒருவர் பாடக்கேட்கக் கவிஞர் பாடியது.

ஒரு பெண் தன் காதலனைப் பிரிந்து, அந்தப் பிரிவுக்கு ஆற்றாது புலம்புவதாகப் பொருள் அமைதி கொண்டு விளங்குவது இது.

**விரவலராய் வாழ்வாரை வெல்வா யொழிவா**
**யிரவுலவா வேலை யொலியே-வரவொழிவா**
**யாயர்வா யேயரிவை யாருயிரை யீராவோ**
**யாயர்வாய் வேயோ வழல்.** (75)

வேலையின் ஒலியே - கடலின் பேரொலியே; விரவலராய் வாழ்வோரை வெல்வாய் ஒழிவாய் - தம் நாயகரோடு கலந்து இராதவராக வாழ்கின்ற பெண்களைப் பொருது வெற்றி கொள்வாய் நீ! அந்தச் செயலை இனிக் கைவிடுவாயாக. இரவு உலவாய் - இரவு நேரத்தே நீ அலைகளாய் எழுந்து உலவுதலையும் செய்யாதே! வரவு ஒழிவாய் - நின் வரவினையும் கைவிடுவாயாக. ஆயர்வாயே அரிவை ஆருயிரை ஈராவோ - ஆயர்களின் வாய் ஒன்றே எம்போற் பெண்களின் அரிய உயிரினைப் பிளந்து அழிக்கப் போதாதோ? ஆயர் வாய் வேய் அழல் - அந்த ஆயர்களின் வாயிற் புல்லாங்குழல் அழல்போல் எம்மை எரிக்கின்றதே!

'ஆயர்வாயோ!' என்பதற்குத் தாயரின் வாய்ச்சொற்களோ எனவும் பொருள் கொள்ளலாம்; தாயரின் கண்டிப்பு என்பது கருத்தாகும்.

## ஒன்று முதல் பதினெட்டு

'ஒன்று முதல் பதினெட்டு வரை அடைசொல் இல்லாமல் அமைத்து ஒரு வெண்பா இயற்றுக' என்றார் ஒருவர்.

**ஒன்றிரண்டு மூன்றுநான்கு ஐந்தாறு ஏழெட்டு**
**ஒன்பதுபத் துப்பதி னொன்று-பன்னி**
**ரண்டுபதின் மூன்றுபதி னான்குபதி னைந்துபதி**
**னாறுபதி னேழ்பதி னெட்டு.** (76)

இதன் கண் முறையே ஒன்று முதல் பதினெட்டு வரையும் வந்தமை காண்க.

## பன்னிரு ராசிகள்

'இராசிகள் பன்னிரண்டின் பெயர்களும் வரவேண்டும். அவற்றின் முறையிற் பிறழ்ச்சி ஏற்படுதலும் கூடாது. அவற்றின் தொகையான பன்னிரண்டும் குறிக்கப் பெற்றிருக்கவேண்டும். எவ்வித அடைமொழியும் இல்லாமல் இப்படி ஒரு வெண்பாச் சொல்லும்' என்றார் ஒரு புலவர்.

**பகருங்கால் மேடம் இடபம்மிது னங்கர்க்க**
**டகஞ்சிங் கங்கன்னி துலாம்விர்ச்-சிகந்த**
**நுசுமகரங் கும்பம் மீனம்பன் னிரண்டும்**
**வசையறுமி ராசி வளம்.** (77)

என்று பாடினார் காளமேகம். பகருங்காலத்தே, மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தநுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பன்னிரண்டும் குற்றமற்ற இராசிகளின் வளமையாகும் என்று வெண்பாவும் அமைந்தது.

பகர்தல் - சொல்லுதல், வசை - குற்றம், வளம் - வளமை.

## தை மாசி பங்குனி

ஒருவர், காளமேகம், சொன்ன சமிசைகளுக்கு ஏற்ற படி எல்லாம் நொடியளவுக்குள் சுவைபடப் பாடி வருதல் கண்டு, அவரைத் தாம் மடக்கிவிட நினைத்தவராகத், 'தை மாசி பங்குனி' என்னும் மாதப் பெயர்கள் வருமாறு ஒரு வெண்பாச் சொல்லும் என்றார்.

கவிஞரோ அப்படியே சொன்னதுடன், அவை மாதப் பெயர்களாயினும் பொருள் வேறாகச் சுட்டுகின்ற சுவையுடையன வாக அமையுமாறும் தம் வெண்பாவை அமைத்து பாடினார். புலவர் அயர்ந்து அமைந்தார். அந்தப்பாடல் -

**பாணர்க்குச் சொல்லுவதும் பைம்புனலை மூடுவதும்**
**தாணு விரித்ததுவும் சக்கரத்தோன்-ஊணதுவும்**
**எம்மானை ஏத்துவதும் ஈசனிடத்துத் துஞ்சிரத்தும்**
**தைமாசி பங்குனிமா தம்.** (78)

பாணர்க்குச் சொல்லுவதும் - தையற்காரர்களுக்குச் செய்யெனச் சொல்லும் சொல்லும், பைம்புனலை மூடுவதும் -

*பசிய நீரினை மூடிக்கொண்டிருக்கும் பொருளும் தாணு உரித்ததும் - சிவபெருமான் உரித்ததுவும், சக்கரத்தோன் ஊணதுவும் சக்கரப்படையினை உடையோனான திருமாலின் உணவாக விளங்கியதும், எம்மானை ஏத்துவதும் - எம் பெருமானாகிய சிவனைத் துதிப்பதுவும், ஈசன் இடத்தும் - அந்த ஈசனின் இடப்பாகத்தே ஆகியதும், தைமாசு இபம் கு உனிமாது அம் - தை என்னும் சொல்லும், மாசு ஆகிய பாசியும், இபம் என்னும் யானையும், நிலமும், மனத்தே நினைதலும், அழகிய மாதாம் உமையம்மையும் என முறையே ஆவதாகும்.*

*தை மாசி பங்குனி மாதம் என்றதனை, தை, மாசு, இபம்.கு, உனி, அம் மாது எனப்பதப்பிரிவு செய்து அதற்கேற்பப் பொருள் கொள்ளல்வேண்டும். உன்னி, உனி என்று ஆயது இடைக்குறை.*

### ஆறு சாதிகள்

*ஆறு சாதிகள் ஒரே செய்யுளுள் வருமாறு, ஒருவர் பாடுவதற்குக் கூறக் கவிஞர்பிரான் அப்போது பாடியது. சாதிப் பெயர்கள் வந்தன; ஆனால் பொருள் அமைதி வேறு சுவையுடையதாக அமைந்தது.*

**கம்மாள னங்கிக் கணக்கனென வேதுதித்தார்**
**செம்மான் சதுரரைத் திருவரசை-அம்மாகேள்**
**வாணியனும் பொன்னேரி வாழும்வெள் ளாழனுமே**
**சேணியனு மன்றே தெரிந்து** (79)

*அம்மா கேள் - அம்மையே கேட்பாயாக! வாணியனும் பொன் ஏரி வாழும் வெள் ஆழனும் - வாணியைக் கொண்டோனான பிரமனும், திருமகளாகிய அழகி தன் மார்பிலே வீற்றிருக்கப் பெற்றோனாகிய பாற்கடலிலே பள்ளிகொள்கின்ற திருமாலும், சேணியனும் - இந்திரனும். அன்றே தெரிந்து - அந்நாளிலேயே உண்மையை அறிந்துகொண்டு, செம்மான் சதுரரை - சிவந்த மாலையினைக் கொண்ட சதுரரான பெருமானை, திரு அரசை - அழகிய நடராசப் பெருமானை, கம்மாளன் அங்கிக் கண் நக்கன் எனவே துதித்தார் - கபாலத்தை ஏந்தியவன் என்றும், நெருப்புக் கண்ணாலே சிரித்துப் புரமெரித்தவன் என்றும் வாழ்த்தினார்கள்; அதனால் உயர்ந்தார்கள் என்பது கருத்து.*

### நடுவெழுத்து அலங்காரம்

**திருமால்வா கனநாவா யிராசி யொன்று**
**சினைதெவிட்டார் மாதுலன்கோ கிலமிவ் வேழின்**
**உருவாமே ழெழுத்தினடு வெனக்குச் செய்தான்**
**உகந்துபதி னான்கினையும் தானே கொண்டான்**

**ஒருபாகத் திருத்தினான் கையில் ஏற்றான்**
**ஒருமதலை தனக்களித்தான் உண்டான் பூண்டான்**
**பரிவாயொண் கரத்தமைத்தான் உகந்தான் இந்தப்**
**பைம்பொழிற்றில் லையுளாடும் பரமன் தானே. (80)**

'நடுவெழுத்து அலங்காரமாக ஒரு செய்யுள் செய்க,' என்று ஒருவர் சொல்ல, அப்படியே பாடியது இது.

திருமால் வாகனம் - கருடன்; அதற்கு நாகாரி எனவும் பெயர். (1) நாவாய் - கலம் (மரக்கலம்), இராசி ஒன்று - கன்னி, சினை - கவடு, தெவிட்டார் - ஆரார், மாதுலன் - மாமன், கோகிலம் - பல்லி. இவ்வேழின் உருவாம் ஏழெழுத்தின் நடு எனக்குச் செய்தான். அதாவது காலன் வராமல் செய்தான்.

உகந்து பதினான்கினையும் தானே கொண்டான் - மேற் குறித்த மூவெழுத்துச்சொற்கள் ஏழனுள் நடு வெழுத்துக்கள் ஏழும் நீங்கிய பதினான்கினையும் சிவனே கொண்டான். அவை நாரி, கம், கனி, கடு, ஆர், மான், பலி என்பவை. அவை கொண்ட முறை:

நாரியை (உமையை) ஒரு பாகத்து இருத்தினான்; கம் (கபாலம்) கையில் ஏற்றான்; (கனி) ஒரு மதலைக்கு அளித்தான் (பிள்ளையாருக்கு); கடு (நஞ்சு) உண்டான்; ஆர் (ஆத்தி மாலை) பூண்டான்; மான் பரிவாய் ஒண்கரத்து அமைத்தான்: பலி உகந்தான்; யார் இங்ஙனம் கொண்டவன்?

இந்தப் பைம்பொழில் தில்லையுள் ஆடும் பரமனே தான் அவன்!

இவ்வாறு அமைத்து நயமுடன்பாடினார் கவிஞர்.

## நிரனிறைப் பொருள்கோள் (சிவன்)

ஒரு வரிசை முறையாகச் சிலவற்றை ஒரு பாடலின் முற்பகுதியில் அமைத்து அவற்றைப் பின்னர் அதே வரிசை முறைப்படி பொருள்பட முடித்தல் வேண்டும். இந்த முறையில் முதலடியில் வருவன, பிறகு மூன்று அடிகளிலும் வருவன கொண்டு முறையே முடிவு பெறும்.

**கூற்றுவனை வின்மதனை யரக்கர் கோவைக்**
**கூனிலவைக் குஞ்சரத்தை யிஞ்சி மூன்றை**
**ஏற்றுலகின் புறவுருவு மாளத் தோள்க**
**ளிறவெறிப்ப விமையப்பெண் வெருவ வேவக்**
**காற்றொழிலா னயனத்தால் விரலால் கற்றைக்**
**கதிர்முடியாற் கரதலத்தாற் கணையாற் பின்னும்**
**ஊற்றறிய வுதைத் தெரித்து நெரித்துச் சூடி**
**உரித்தெரித் தானவனென்னை யுடைய கோவே. (81)**

*கூற்றுவனை ஏற்று உலகு இன்புறக் காற்றொழிலான் ஊற்றழிய உதைத்து - எமனை எதிரேற்று உலகெலாம் இன்புறும் படியாகத் தன் திருவடியின் செயலான உதைத்தலினாலே (மார்க்கண்டன் பொருட்டு) இடையூறு நீங்குமாறு செய்தவன்; விண் மதனை உருவம் மாள நயனத்தால் எரித்து - கரும்பு வில்லினனான மன்மதனை அவன் உருவம் அழியுமாறு நெற்றிக் கண்ணினாலே சுட்டெரித்தவன்; அரக்கர் கோவைத் தோள்கள் இற விரலால் நெரித்து - அரக்கர் கோமானைத் தோள்கள் ஒடியுமாறு தன் விரல்களினாலே அழுத்தியவன்; கூன் நிலவை கற்றைக் கதிர் முடியில் சூடி - பிறைச் சந்திரனைத் தன் கற்றையான ஒளிர் சடையின் முடியிலே அது ஒளியுடன் திகழுமாறு சூடியவன்; குஞ்சரத்தை இமையப் பெண் வெருவக் கரத்தால் உரித்து - இமவான் மகள் அஞ்சுமாறு யானையைத் திருக் கையினாலே தோலுரித்தவன்; இஞ்சி மூன்றை எரித்தான் - திரிபுரக் கோட்டைகள் மூன்றையும் சாம்பராக்கியவன்; அவன் என்னை உடைய கோவே - அவனே என்னை அடிமையாக உடைய சிவபெருமான் ஆவன்.*

## நிரனிறைப் பொருள்கோள் (திருமால்)

**பொன்னனைவா ளரக்கனைநூற் றுவரைக் காவைப்**
**பொருசிலையைக் கனைகடலைப் பொன்ன னீன்ற**
**நன்மகற்காய்ச் சுரர்க்காயை வருக்காய்க் காதல்**
**நட்பினுக்காய்ச் சானகிக்காய் நடவைக்காக**
**மன்னுகிரால் வடிக்கணையால் வளையாற் புள்ளால்**
**வயங்குதோள் வலியால்வா னரங்களாகும்**
**முன்னுடற்கீ றிச்சிரங்கொண் டமரில் வீழ்த்தி**
**முதலொடுங்கொண் டிறுத்தடைத்த மோகூ ரானே.** (82)

*மோகூர் - பாண்டி நாட்டுள் ஓர் ஊர்.*

*பொன்னனைப் பொன்னன் ஈன்ற நன்மகற்காய் முன்னுடல் கீறி - இரணினை அவனீன்ற நல்ல மகனின் பொருட்டாக முன்னாளிலே உடலைக் கீறிக் கொன்றவன்; வாளரக்கனைச் சுரர்க்காய் வடிக்கணையால் சிரங்கொண்டு வாளாற்றல் மிக்க அரக்கனாம் இராவணனைத் தேவர்களின் பொருட்டாகக் கூரிய அம்பினாலே தலையைக் கொய்தவன்; நூற்றுவரை ஐவருக்கா வளையால் அமரில் வீழ்த்தி - ஐவரின் பொருட்டாக நூற்றுவரான கௌரவரைத் தன் சங்க நாதத்தாலே போரிலே கொன்றழித்தவன்; காவைக் காதல் நட்பினுக்காய் புள்ளால் முதலொடுங் கொண்டு - தன் நாயகியாம் நப்பின்னைப் பிராட்டியின் அன்பு உறவினுக்காகக் கருடன் மூலமாகப் பாரிசாத மலர்ச்சோலையினையே வேரோடுங் கொணரச் செய்தவன்; பொருசிலையைச் சானகிக்காய் வயங்கு தோள் வலியால் இறுத்து போர்வில்லைச் சானகியை மணத்தற்*

பொருட்டாக விளங்கும் தன் தோள் ஆற்றலினாலே வளைத்து ஒடித்தவன்; கனைகடல் நடவைக்காக வானரங்களால் அடைத்த - முழங்கும்கடலைக் கடந்து செல்வதற்காகக் குரங்குகளினாலே அடைக்கச் செய்தவன்; மோகூரானே - அவனே மோகூரிலே வீற்றிருக்கும் திருமால் ஆவான்.

**மாடு - பறை**

'கடைமொழி மாற்று' என்பது செய்யுள் அணிகளுள் ஒன்று. செய்யுளின் ஈற்றுச் சொல்லை முதலிற் கொண்டு பொருள் கொள்ளல் வேண்டும். அப்படிக் கொள்ளாமல் நேரடியாகக் கொண்டால் பொருள் வேடிக்கையாகவும் பொருத்தமின்றியும் போய்விடும். அடுத்து வரும் நான்கும் அத்தகைய செய்யுட்கள்.

**மாடுதின்பான் பார்ப்பான் மறையோது வான்குயவன்**
**கூடிமிக மண்பிசைவான் கொல்லனே-தேடி**
**இரும்படிப்பான் செக்கான் எண்ணெய் விற்பான் வண்ணான்**
**பரும்புடவை தப்பும் பறை. (83)**

பறை மாடு தின்பான்; பார்ப்பான் மறை ஓதுவான்; குயவன் கூடிமிக மண்பிசைவான்; கொல்லனே தேடி இரும்பு அடிப்பான்; செக்கான் எண்ணெய்விற்பான்; வண்ணான் பரும்புடவை தப்பும்; இவ்வாறு கூட்டிப் பொருள் காண்க.

கூடி மிக மண் பிசைதல் - மண் ஒன்று சேர்ந்து தன் தரத்தில் மிகுமாறு பிசைதல். தேடி இரும்பு அடித்தல் - தக்கபதம் வருவதை ஆராய்ந்து மென்மேலும் இரும்பைக் காய்ச்சி அடித்தல். செக்கான் - எண்ணெய் வாணியன்; செக்கிலே தொழில் செய்வோன். பரும் புடவை - பெரிதான புடைவை.

**ஆயனுக்கு மண்**

கடைமொழிமாற்றுச் செய்யுள் இதுவும். 'ஆயன்' என்றதனை முதலடியின் இறுதியிலே வைத்துப் பொருள் செய்தல் வேண்டும்.

**ஆயனுக்குக் கண்மூன்றாம் ஆதிசிவ னுக்கிருகண்**
**மாயனுக்குச் செங்கையிலே மான்மழுவாம்-நேயமுடன்**
**சங்கரர்க்குச் சங்காழி தான்மாலுக் காலமாம்**
**மங்கையிடத் தாற்காகு மண். (84)**

'கண் மூன்றாம் ஆதி சிவனுக்கு; இரு கண் ஆயனுக்கு; செங்கையிலே மான் மழுவாம் நேயமுடன் சங்கரற்கு; சங்கு ஆழி தான் மாலுக்கு; ஆலமாம் மங்கை இடத்தாற்கு; ஆயனுக்கு ஆகும் மண்'' என்று கூட்டிப்பொருள் கொள்ளல் வேண்டும்.

*ஆதி சிவன் - அனைத்துக்கும் ஆதியான சிவபிரான், ஆயன் - கோபாலனான திருமால், நேயமுடன் - விருப்பமுடன் கொண்டது, ஆழி - சக்கரம், ஆலம் - நஞ்சு, மங்கை இடத்தாற்கு - மங்கையைத் தன் இடப்பாகத்தே உடையவனுக்கு; சிவனுக்கு.*

*இதன்கண் திருமால் சிவன் ஆகியோரின் கண்கள், ஆயுதம், அவர் உண்பவை ஆகியன முறையே வந்தன.*

### கொன்றை-சிவன்

*இந்தச் செய்யுளில் ஒரு சிறு மாற்றம், கடைசி அடியான 'சிக்கலிலே வாழும் சிவன்' என்ற தொடரை முதலில் வைத்துப் பொருள் உரைத்தல் வேண்டும்.*

*சிக்கல் - இது திருச்சிக்கல் என்று வழங்கப் பெறும் பாடல் பெற்ற தலம். நாகைப்பட்டினத்திலே இருந்து மூன்றுமைல் தொலைவில் உள்ளது. 'சிக்கல்' என்னும் ரயிலடி ஊருக்கு அரை மைலில் இருக்கிறது. சுவாமி பெயர்: நவ நீதேசுவரர். தேவி பெயர்: வேனெடுங்கண்ணி அம்மையார்.*

*சிங்காரவேலன் சூரனைச் சங்காரம் செய்த இடம் இது என்பார்கள். சிக்கல் வடிவேலனுக்குக் கந்தசஷ்டிப் பெரு விழா இன்றும் சிறப்பாக நடைபெறவதாகும்.*

*இப்பாடல் நவநீதேசுவரரைக் குறித்தது; மாயனையும் குறிப்பது.*

**கொன்றை மலர்தரித்தான் கோபாலன் கோலெடுத்து**
**நின்றுகுழ லூதினான் நீள்சடையோன்-பொன்றிகழும்**
**அக்கணிந்தான் மாயன் அரவணையிற் கண்வளர்ந்தான்**
**சிக்கலிலே வாழும் சிவன்.** (85)

*சிக்கலிலே வாழும் சிவன்கொன்றை மலர் தரித்தான் - திருச்சிக்கலிலே கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான் கொன்றைமலர் மாலையினைத் தரித்தவன்; கோபாலன் கோல் எடுத்து நின்று குழல் ஊதினான் - கோபாலனான மாயவனோ மாடுமேய்க்கக் கோலையும் கையில் எடுத்துக் கொண்டு நின்று புல்லாங்குழலை வாசித்தான்; பொன் திகழும் நீள் சடையோன் அக்கு அணிந்தான் - அழகுடன் விளங்கும் நீண்ட சடாபாரத்தை உடைய சிவபிரான் எலும்பினை ஆபரணமாக அணிந்தான்; மாயன் அரவணையிற் கண் வளர்ந்தான் - திருமால் பாம்பாகிய படுக்கையிலே படுத்து உறங்கினான்.*

### கடம்பற்குக் கை

**கடம்பர்க்கெண் டோளயற்குக் கண்பதினைந் தாமால்**
**கடம்பற்கே நால்வாய்கை யைந்தே-கடம்பற்கோ**
**டானைமுகற் காயிரங்கண் ணாகண்ட லற்கிலம்பா**
**டானைமுகற் காறிரண்டு கை.** (86)

இதுவும் மேற்கண்டபடி கடை மொழி மாற்றுவகையைச் சார்ந்ததுதான். ஆனால் கடைசி அடியிலே வரும் இறுதி இரு சீர்களை மட்டும் முதலில் வைத்துப்பொருள் செய்ய வேண்டும்.

ஆறிரண்டு கை கடம்பற்கு - கடப்பமாலை உடையனான முருகப்பெருமானுக்குப் பன்னிரண்டு கைகள். எண்தோள் அயற்கு - பிரமாவுக்கு எட்டுத் தோள்கள். கண் பதினைந்தாம் ஆல் கடம்பர்க்கு - கடம்ப வனத்து வீற்றிருக்கும் சிவபெருமானுக்குப் (ஐந்து முகங்கள் ஆனதால்) பதினைந்து கண்களாம். நால் வாய்கை ஐந்தே கடம்பற்கோ ஆனை முகற்கு - தொங்கும் வாயும் ஐந்து கைகளும் மதமும் பல்லாகிய கோடும் ஆனைமுகக் கடவுளுக்கு உள்ளனவாம். ஆயிரம் கண் அகண்டலர்க்கு - இந்திரனுக்கு ஆயிரம் கண்கள்; இலம்பாடு ஆன் ஐம் மகற்கு - ஐந்து முகமுடைய சிவனுக்கு வறுமையும் ஆனேறும் உரிமை உடையனவாம்.

'கடம்பற்கு' என்னுஞ் சொல், மும்முறை வந்தும் பொருளால் வேறாயின்மை காண்க.

### சிதம்பர சின்னங்கள்

சிதம்பரம், நடராசர் கோயிலிலே இருக்கின்ற சின்னங்கள் பலவற்றையும் தொகுத்து வெண்பாவாகப் பாடியது இது.

**ஞான சபைக னகசபைசிற் றம்பலம்பே**
**ரானந்தக் கூடந் திருமூலட்-டானம்பே**
**ரம்பலம்பஞ் சாவரண நாற்கோபுரம் பொற்செய்**
**கம்பமண்ட பஞ்சிவகங் கை.** (87)

சிற்சபை ஞானசபை என்பது; கனகசபையாவது பொன்னம் பலம்; பெருமான் நடராச மூர்த்தியாக வீற்றிருக்கும் இடம் அது; சிற்றம்பலம் என்பது சிற்சபையான ஞான சபைக்கு முன்னர் இருப்பது, பேரின்ப சபை பேரானந்தக் கூடம் எனப் பெறுவது; இது பெருமான் ஊர்த்துவதாண்டவ மூர்த்தியாக விளங்கும் இடம். திரு மூலட்டானம் என்பது பெருமான் சிவலிங்க சொரூபமாக விளங்கும் இடம். பேரம்பலம் என்பது தேவசபை; தேவர்கள் வந்து பெருமானைத் தரிசித்துப் போற்றும் இடம். ஐந்து பிரகாரங்கள் பஞ்சாவரணம் என்று குறிக்கப் பெற்றன. நான்கு திசைக் கண்ணும் விளங்கும், கோபுரங்கள் நாற்கோபுரங்கள் என்று குறிக்கப் பெற்றன. கம்ப மண்டபம், ஆயிரக்கால் மண்டபம். சிவகங்கை - திருக்குளத் தீர்த்தம்.

### திருவாரூர்ச் சின்னங்கள்

திருவாரூர்ப் பெரிய கோயிலின் முக்கியமான சின்னங்களை குறிக்கும் செய்யுள் இது,

**சங்குதீர்த் தந்திருச் சாளரவா யில்வீர**
**சிங்காச னந்திருவந் திக்காப்புப் - பங்குனிமா**
**தத்திருநா ளர்த்தந் திருவினா தன்கோயில்**
**உத்திரபா கந்திருவா ரூர். (88)**

*சங்கு தீர்த்தம், திருச்சாளர வாயில், வீர சிங்காசனம் திருவந்திக்காப்பு, பங்குனி மாதத் திருநாள், திருவின் தீர்த்தம், உத்தரபாகம், நாதன் கோயில், இவை திருவாரூர்ச் சிறப்புகள்.*

*திருச்சாளர வாயில் - தியாகர் திருமுன்பே இருக்கும் பலகணிவாயில். வீர சிங்காசனம் - தியாகர் வீற்றிருப்பது. திருவந்திக் காப்பு - மாலை வேளையிற் சார்த்தும் திருக் காப்பு. பங்குனிமாதத் திருநாள் - திருவுத்திரத் திருநாள். திருவின் தீர்த்தம் - கமலாலயம் என்னும் திருக்குளத்துத் தீர்த்தம்.*

### கும்பகோணத்துச் சின்னங்கள்

*திருக்குடைந்தையிலே கும்பேசர் கோயில் கொண்டிருக்கும் ஆலயம் புகழ் பெற்றது. அதனையும் பிறவற்றையும் குறிப்பது இது.*

**திருக்குடந் தையா திகும்பேசர் செந்தா**
**மரைக்குளம் கங்கை மகங்கா-விரிக்கரையின்**
**ஓரங்கீழ்க் கோட்டங்கா ரோணமங்கை நாயகியார்**
**சாரங்க பாணி தலம். (89)**

*திருக்குடந்தை ஆதி கும்பேசர் - திருக்குடந்தைப் பதியினிடத்தேயுள்ள ஆதியான கும்பேசப்பெருமானின் திருக்கோயில்; செந்தாமரைக் குளம் - செந்தாமரை மலர்கள் பூத்திருக்கும் திருக்குளம்; கங்கை மகம் - கங்கைகள் வந்து கூடுகின்ற சிறப்பு உடையதான மகாமகக்குளம்; காவிரிக் கரையின் ஓரம் கீழ்க்கோட்டம் - காவிரிக் கரையின் அருகேயிருக்கும் கடந்தைக் கீழ்க்கோட்டம், என்னும் திருக்கோயில்; காரோணம் - திருக் குடந்தைக் கீழ்க்காரோணம் என்னும் தலம்; மங்கை நாயகியார் - மங்கை நாயகியார்கோவில்; சாரங்கபாணி என்னும் பெருமாள் திருக்கோயில் என்பன, குடந்தை நகரத்தின் சிறந்த சின்னங்கள் ஆகும்.*

*இச் செய்யுட்கள் பயில்பவர்களுக்கு யாப்பிலக்கணப் புலமையை நல்குவன; எந்தக் கருத்தையும் நொடியில் அமைத்துச் செய்யும் செய்யும் வல்லமையைத் தருவன.*

## 6. கடவுளரைப் பாடியவை

*தலயாத்திரை நிமித்தமாகப் பல திருத்தலங்களுக்கும் சென்றவர் கவிஞர்; அவ்வவ்வூர்களில் இவர் பாடிய செய்யுட்கள் இவை. சில போற்றுதலாகவும், சில நிந்திப்பது போலத் தோற்றி*

போற்றுதலை உட்கொண்டவையாகவும் அமைந்து, இலக்கியச் செழுஞ்சுவையுடன விளங்குவதனைக் காணலாம்.

## அன்னம் இறங்கான்

**கம்பமத கடகளிற்றான் தில்லைவாழும்**
**கணபதிதன் பெருவயிற்றைக் கண்டுவாடி**
**உம்பரெலாம் விழித்திருந்தார் அயில்வேற்செங்கை**
**உடையவறு முகவனுங்கண் ணீராறானான்**
**பம்புசுடர்க் கண்ணனுமோ நஞ்சுண்டான்மால்**
**பயமடைந்தான் உமையுமுடல் பாதி யானாள்**
**அம்புவியைப் படைத்திடுவ தவமேயென்**
**றயனு மன்ன மிறங்காம லலைகின் றானே.** (90)

சிதம்பரத்திலேயுள்ள கற்பக விநாயகரைப் பற்றிப் பாடிய செய்யுள் இது. நிந்திப்பது போலத் தோற்றினும், போற்றுதலாகவே அமைந்துள்ள சிறப்பினைக் கண்டு இன்புறலாம்.

அசைவினைக்கொண்ட மதம் பொழியும் யானை முகத்தினை உடையவனாகிய, தில்லை நகரிலே கோயில் கொண்டிருக்கின்ற கணபதியினுடைய பெருவயிற்றினைக் கண்டு வாட்டமுற்றுத் தேவர்கள் எல்லோருமே கண் இமையாது கவலையுடனே இருந்தார்கள். கூர்மையான வேற்படையினைக் கைக்கொண்டோனாகிய ஆறுமுகப்பெருமானும், கண்ணீரை ஆறாகப் பெருக்கி நின்றனன் (கண் ஈராறு. ஆனால் என்பதனை இப்படிக் கூறினர்.) நெருப்பான ஆலகால நஞ்சினையே உண்டு விட்டனன். திருமாலும் பயம் அடைந்தான் (பாற்கடல் அடைந்தான்.) உமையும் உடல் பாதியாகிப் போயினாள் (சிவனுடலிற் பாதியானதைக் கூறினர்.) அழகிய இவ்வுலகினைப் படைப்பதும் வீணே என்று கருதியவனாக, அயனும் அன்னமிறங் காமல் அலைகின்றவன் ஆயினானே! இனி, இவ்வுலகந்தான் யாதாகுமோ? (அன்ன வாகனத்தே உலவுகிறானே)! என்பது பொருள்.

பெரு வயிறு - மகோதரம் என்னும் நோய்; அதனால் அனைவரும் வருந்தித் துயருற்றனர் என்று வருந்துவது போலக் கொள்ளுக; உலகின் துயருக்கு இரங்குவது போலவும் கொள்ளுக.

## புலி போகுமோ?

தில்லை நடராசப் பெருமானைப் போற்ற நினைக்கிறார் காளமேகம். பெருமானின் திருநடனத்தைக் கண்டு அகலாதிருக்கும் புலிக்கால் முனிவர்; பெருமானின் நடனம் இரண்டும் அவரை ஒரே சமயத்தில் ஆட்கொள்ளுகின்றன. கவிஞர் பாடுகின்றார்.

**நாட்டுக்கு ளாட்டுக்கு நாலுகா லையாநின்**
**ஆட்டுக்கு இரண்டுகா லானாலும்-நாட்டமுள்ள**
**சீர்மேவு தில்லைச் சிவனேயிவ் வாட்டைவிட்டுப்**
**போமோசொல் லாயப் புலி. (91)**

*சீர் மேவும் தில்லைச் சிவனே! - புகழ் விளங்கும் தில்லை நகரத்தே கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானே, ஐயா - ஐயனே! நாட்டுக்குள்ஆட்டுக்கு நாலு கால் - நாட்டிலே ஆடுகட்கு நான்கு கால்களே, நின்ஆட்டுக்கு இரண்டுகால் - நின்னுடைய ஆட்டுக்கோ (நடனத்திற்கோ) இரண்டுகால்கள் தாம்; ஆனாலும், நாட்டமுள்ள இவ்வாட்டை விட்டு - விருப்பமுள்ள இந்த ஆட்டை விட்டுவிட்டு? போமோ சொல்லாய் அப்புலி - அந்தப் புலியாகிய வியாக்கிர மாதரும் நீங்கிப் போவாரோ? நீயே சொல்லுவாயாக.*

*வியாக்கிர பாதர் - புலிக்கால் முனிவர்; இவரைப் புலி எனவும். பெருமானின் நடனத்தை ஆடு எனவும் குறிக்கின்றார் கவிஞர். அவர் எப்போதும் நடராசனின் திரு நடனத்தைக் கண்டு தொழுதிருப்பவர் என்பதும் குறித்தனர், புலி ஆட்டை விட்டுவிட்டுப் போகாது என்பது உலகியல் உண்மை. அதனை நயமுற அமைத்துப் பாடிய திறத்தைப் போற்ற வேண்டும்.*

## நீ ஏழையானால்?

*சிவபெருமான் அடியவர்க்கு மிகமிக எளியவன். அந்த ஏழைமையாளனாகிய அவன் உள்ளத்தை வைத்து நிந்தாஸ் துதியாகப் பெருமானைப் பாட நினைக்கிறார் கவிஞர். தில்லைப் பெருமானைப் போற்றிய அத்தகைய சுவையுள்ள பாடல் இது.*

**தாண்டி ஒருத்தி தலையின்மேல் ஏறாளோ**
**பூண்டசெருப் பாலொருவன் போடானோ- மீண்டொருவன்**
**வையானோ வின்முறிய மாட்டானோ தென்புலியூர்**
**ஐயாநீ யேழையா னால். (92)**

*தென்புலியூர் ஐயா - அழகிய புலியூர் ஆகிய சிதம்பரத்திலே வீற்றிருக்கும் பெருமானே! நீ ஏழையானால் - நீ எளியவனானால், தாண்டி ஒருத்தி தலையின் மேல் ஏறாளோ - ஒருத்தி (கங்கை) குதித்து வந்து நின் தலைமீதும் ஏற்றிக்கொள்ள மாட்டாளோ? பூண்ட செருப்பால் ஒருவன் போடானோ - தன் காலிலே போட்டிருக்கும் செருப்பினாலேயே (கண்ணப்பனாகிய) ஒருவன் நின்னை அடிக்கவும் மாட்டானோ? மீண்டொருவன் வையானோ வில்முறிய மாட்டானோ - மற்றுமொருவன் (பார்த்தன்) உம்மை வைய்ய மாட்டானோ? வில் முறியும்படி அடிக்கவும் செய்யானோ? (மாட்டுதல் - அடித்து துன்புறுத்தல்)*

பெருமானை எளியவன் என்று கருதியே இப்படி அவர்கள் துன்புறுத்தினார்கள் என்கிறார். இதனால் அடியார்க்கு எளியவனான நீ கங்கை, கண்ணப்பன், பார்த்தன் ஆகியோரின் அச்செயல்களைப் பொறுத்து அவர்களையும் ஆட்கொண்ட பெருமானாவாய் என வியந்து போற்றினரும் ஆம்.

## எந்த உபாயம்?

சிதம்பரம் சபாநாயகரின் ஆட்டத்தை வியந்து காளமேகம் பாடுகிறார். 'கோவிந்தக் கோனார் இருக்கின்றார்; அண்டர் பலர் காத்திருக்கின்றார்கள்: இருந்தும் கையிலே ஓடெடுத்த நீ தில்லையுள்ளே புகுந்து ஆடும் எடுத்தனையே? அது எந்த உபாயத்தினால் எடுத்தனை அப்பனே?" என்கிறார். 'ஆடு திருடியவன்' என்று நிந்திப்பது போலத் தோற்றும் நிந்தாஸ்துதி இது. 'பிச்சைக்காரன் எதற்காக ஆடு திருடும் கள்ளனாக ஆயினாய்? என்று வியக்கின்றார் போலவும் செய்யுள் அமைந்துள்ளது.

**கொங்குலவும் தென்றில்லைக் கோவிந்தக் கோனிருக்கக்**
**கங்குல்பக லண்டர்பலர் காத்திருக்கச் - செங்கையிலே**
**ஓடெடுத்த அம்பலவ ஓங்குதில்லை உட்புகுந்தே**
**ஆடெடுத்த தெந்த உபாயம். (93)**

கொங்கு உலவும் தென்தில்லைக் கோவிந்தக்கோன் இருக்க - நறுமணம் கமழும் அழகிய தில்லைக்கோவிந்தராகிய கோனார் அங்கே இருக்கவும்; கங்குல் பகல் அண்டர் பலர் காத்திருக்க - இரவும் பகலுமாக இடையர்கள் (தேவர்கள்) பலரும் கூடிக் காவல் காத்திருக்கவும்; செங்கையிலே ஓடு எடுத்த அம்பலவா - சிவந்த நின் கையிலே திரு வோட்டை எடுத்துவிட்ட அம்பலவனே! ஓங்கு தில்லையிற் புகுந்து ஆடு எடுத்தது எந்த உபாயம்? - புகழ் ஓங்கிய சிதம்பரக்கோயிலுள்ளே புகுந்து ஆட்டினை எடுத்தது தான் எந்தத் தந்திரத்தினாலோ? நீ ஆட்டத்தினைத் தொடங்கியது எதனாலோ?" எதற்காகவோ?

ஆடு - ஆடும்; ஆட்டமும் ஆம். கொங்கு - மகரந்தம்; அதினின்று எழும் மணத்தைக் குறித்தது. உபாயம் - தந்திரம்; ஆடு எடுத்தல் - ஆட்டைத் தூக்கிப் போதல்; நடனத்தைத் தொடங்கல்; கோவிந்தக் கோனாரும் பிறரும் காவல் காத்து இருக்கவும், பிழைக்க வழியற்றுப் பிச்சைக்கு ஓடேந்திய நீ, எவ்வாறு அவர்களறியாதே புகுந்து ஆட்டை எடுத்தனையோ! இப்படிக் கேட்கிறார் கவிஞர்.

## மான் கன்றின் செயல்

தில்லை மூவாயிரவர்கள், 'தில்லைவாழ் அந்தணர்கள்' என்னுஞ் சிறப்பினை உடையவர்கள். ஒரு சமயம் காளமேகம்

*தில்லைக்கூத்தனைக் தரிசிக்கச் சென்றிருந்தார். கூத்தப் பெருமானின் முன் நின்றவராக அவனைப் போற்றியபடியும் நின்றார். 'அப்போது, பெருமான் கையிலிருக்கும் மான்மறி முகத்தையும் முன்னங்கால்களையும் மேலே தூக்கியவாறு நிற்பதன் காரணம் யாதோ?' என்று சிலர் கேட்கக் கவிஞர் இப்படிக் கூறுகிறார்.*

**பொன்னஞ் சடையறுகம் புல்லுக்கும் பூம்புனற்கும்**
**தன்னெஞ் சுவகையுறத் தாவுமே- அன்னங்கள்**
**செய்க்கமலத் துற்றுலவும் தில்லை நடராசன்**
**கைக்கமலத் துற்றமான் கன்று.** (94)

*"அன்னப் பறவைகள் வயல்களிடத்தேயுள்ள தாமரை மலர்களிடத்தே உலவிக் கொண்டிருக்கின்ற வளத்தினையுடைய சிதம்பரத்து நடராஜப் பெருமானின் கையாகிய கமலத்தே பொருந்தியிருக்கின்ற மான் கன்றானது, பொன்னிறத்துச் சடா முடியிலே அன்பர்கள் சார்த்தியிருக்கும் அறுகம் புல்லிடத்தும் கங்கையின் சிறந்த நீரிடத்தும் தன் நெஞ்சமானது விருப்பங் கொள்ள, அவற்றை அடைதலை விரும்பி அப்படித் தாவிக் கொண்டிருக்கிறது."*

*மானின் நிலைக்கு விளக்கம் கேட்க முனைந்தவர்கட்கு வேடிக்கையாக விளக்கங்கூறி அவர்களைக் களிக்கச் செய்கிறார் கவிஞர்.*

## ஆட்டுக்கு இசைந்தவர்

*சிதம்பரத்திலே, கோவிந்தராயரின் சந்நிதியும் இருக்கிறது. சிலர், சபாநாதர் நடனமிடும் இடம் நோக்கிக் கோவிந்தராயர் கால் நீட்டிப் பள்ளிகொண்டிருப்பதனைக் காட்டிக் குறும்பாகப் பேசினர். அதனைக் கேட்டுக் காளமேகம் பாடியது இது. அப்படிப் பேசியவர்கள் வெட்கித் தலைகுனியுமாறு திருமாலைக் கேலிப் பேசுகிறார் கவிஞர்.*

**ஆட்டுக் கிசைந்தவ ரம்பலவாண ரவர்க்கெதிரே**
**நீட்டிற்று மால்வட பாலினிற் காலென நீநினையேல்**
**சூட்டுற்ற முப்புறஞ் செற்றவர் தம்மைச் சுமந்தலுத்த**
**மாட்டுக்கென் னோவிடங் கானீட்டல் சொல்ல**
**வழக்கில்லையே.** (95)

*"ஆடலுக்குப் பொருத்தமானவர் அம்பலவாணர்தாம். அவருக்கு எதிரே வடதிசையிலே திருமால் தம் காலைநீட்டி யுள்ளனரே?" என்று நீ தவறாக எதுவுமே நினையாதே. தீப்பற்றி யழிந்த திரிபுரக் கோட்டைகளை அப்படி அழியச் செற்றவரான சிவபிரானைச் சுமந்து சுமந்து அலுத்துப் போன மாடாகிய அத்*

திருமாலுக்குக் கால் நீட்டுவதற்கு உரிய இடம் எது, நீட்டக் கூடாத இடம் எது என்று தெரியுமோ? தெரியாததனால் அதனைக் குற்றம் சொல்லுதலும் நமக்கு ஒரு மரபில்லை என்றறிவாயாக.

திரிபுர தகன காலத்ததே, திருமால் விடையாகிப் பெருமானைச் சுமந்து சென்றனன். அதனைச் சுட்டிப் பேசுகிறார் கவிஞர். மாட்டுக்கு எது மரபு, எது மரபில்லை என்று உணர முடியுமோ? மேலும், அது சுமை சுமந்து அலுத்துக் கிடக்கும் மாடு; அதன் செயலைக் குறித்து நாம் பாராட்டலாமோ? விட்டுத்தள்ளும் என்கிறார்.

**எளியவன் அவன்!**

அம்பலவாணர் அடியார்களுக்கு எளியவராயிருப்பவர். வேடனாகி வந்தகாலத்திலே அருச்சுனன் வில்லால் அடித்து நின்றான். கண்ணப்பர் ஒரு கண்ணைத் தோண்டி அப்பி விட்டுப் பெருமானின் மற்றொரு கண்ணினும் நீர் வழியக் கண்டு, இடம் அறிதற்குத் தம் செருப்புக் காலினாலே மிதித்துக்கொண்டு தம் மற்றொரு கண்ணையும் அப்பினார். சாக்கியரோ கல்லையே மலராகப் பாவித்து எறிந்தனர். மதுரை மன்னனோ பிட்டுக்கு மண்சுமந்த காலத்தே பெருமானைப் பிரம்பாலே அடித்தான். எனினும், அவர்கட்கும் அருள் செய்த தயாளன் அவன். இதனைக் குறித்தும், அவன் பிறப்பிலியாகிய தன்மையைப் போற்றியும் இச் செய்யுளைப் பாடுகின்றார் காளமேகம்.

**வில்லா லடிக்கச் செருப்பாலுதைக்க வெகுண்டொருவன்**
**கல்லா லெறியப் பிரம்பா லடிக்கவிக் காசினியில்**
**அல்லார் பொழிற்றில் லையம்பல வாணற்கோ ரன்னைபிதா**
**இல்லாத தாழ்வல்ல வோவிங்கு னேயெளி தானதுவே! (96)**

மரச் செறிவினாலே இருள் நிறைந்திருக்கும் சோலைகளை யுடைய சிதம்பரத்தே, அம்பலத்தில் நடனமிட்டிருக்கும் பெருமானுக்கு, இந்த உலகத்திலே ஓர் அன்னை பிதா இல்லாத தாழ்ச்சியினால் அல்லவோ, ஒருவன் வில்லால் அடிக்கவும், மற்றொருவன் செருப்பால் உதைக்கவும், கோபித்து ஒருவன் பிரம்பினாலே அடிக்கவும், ஒருவன் கல்லால் எறியவும் இவ்வாறான தாழ்ச்சிகள் எல்லாம் எளிதாகிப் போயின! அன்னை பிதா இருந்திருந்தால் இப்படி நடக்கப் பார்த்திருப்பார்களோ?" என்பது கருத்து.

இதனால் தாய் தந்தையரின் சிறப்பும் கூறப்பெற்றது. மேலும் பெருமானின் கருணைப் பெருக்கமும் காட்டப் பெற்றது

செயலைக் கருதாது, செய்பவரின் பக்திமையைக் கருதி உவப்பவன் சிவன் என்பது இதனால் விளங்கும்.

## பரம்பொருள் எது?

தில்லைக் கோயிலுள்ளே நடராசர் சந்நிதிக்கு அருகேயே கோவிந்தராயர் சந்நிதியும் இருக்கிறது என்றோம். காளமேகம் தில்லைப் பெருமானைத் தொழுது போற்றிக் கொண்டிருந்தனர். அப்போது கோவிந்தராயரின் கோவிலைச் சேர்ந்த நம்பியார், 'விஷ்ணுவே பரம்' என்று உரக்கச் சொல்லினார். அதைக் கேட்ட காளமேகம் இப்படிக் கூறுகிறார்.

**சத்தாதி யைந்தையும்**
**தாங்காத தெய்வம் தனிமறையும்**
**கர்த்தா வெனுந்தெய்வம் அம்பலத்**
**தேகண்டு கண்களிரு**
**பத்தான வண்மைந்தன் பொய்த்தேவி**
**யைக்கொல்லப் பார்த்தழுத**
**பித்தான வன்றனை யோதெய்வ**
**மாகப் பிதற்றுவ தே?** (97)

சத்தம் ஸ்பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னும் ஐந்து தன் மாத்திரைகளாகிய உடம்பை ஒருபோதுமே எடுத்தறியாத கடவுள்! (புறப்பிலி என்பது கருத்து); ஒப்பற்ற வேதங்களும் தமக்கு அவனே முதல்வன் என்று துதிக்கும் முதற் கடவுளாகிய பெருமான்! அப்பெருமானைச் சிற்றம்பலத்திலே கண்டு தரிசித்த பிற்பாடு,

இருபது கண்களையுடைய இராவணனின் புதல்வனாகிய இந்திரசித்து, மாயா சீதையைக் கொல்வதைப் பார்த்து அழுத பைத்தியக்காரனையோ, 'தெய்வம்' என்று கூறி நாமும் பிதற்றுவது? அது சற்றும் பொருத்தமல்லவே என்பது பொருள்.

"தெய்வமெனப் போற்றற்கு உரியது மாயையினாலே பற்றப்படாததும், பிறவியற்றதும் ஆகிய முழுமுதலே. அஃதன்றி, மாயா காரியமான உடலினை எடுத்துப் பிறந்தவனும்; மாயா சீதையை இந்திரசித்தன் கொல்லக்கண்டு மதிமயங்கி அழுதவனும் ஆகிய மாயைக்கு உட்பட்ட ஒருவனையோ, நாம் தெய்வ மென்பது?' என்கின்றனர். இதனால், நம்பியாரை வாயடக்கியதும் பெற்றனம்.

## மேளமேன்? ராஜாங்கமேன்?

தில்லையிலே, சபாநாயகர் பிச்சாடன வடிவுடனேயே திருவீதி வலம் வருகின்றனர். அவருக்குமுன் எக்காளம் முழங்கு கின்றது. யானை அணிபுனைந்து செல்லுகின்றது. மேளவாத்தியங் களின் ஒலியும் இடியொலி போன்று எழுகின்றது. குடை கொடி முதலிய ராஜாங்க விருதுகளும் செலுத்துகின்றன.

*"பிச்சாடன மூர்த்தியே! பிச்சை எடுக்க தெரு வீதியிலே புறப்படுகிறவர் தாமே நீர்? உமக்கு ஏன் ஐயா இவ்வாறு ஆர்ப்பாட்டங்கள்?" என்று கேட்பவரே போலக் கவிஞர் அந்த ஊர்வலக் காட்சியை வியந்து போற்றுகின்றார்.*

**நச்சவரம் பூண்டதில்லை நாரதரே! தேவரீர்**
**பிச்சை எடுத்துண்ணப் புறப்பட்டும் - உச்சிதமாம்**
**காளமேன் குஞ்சரமேன் கார்க்கடல்போற் றான்முழங்கும்**
**மேளமேன் ராஜாங்க மேன்?** (98)

*நச்சரவம் பூண்ட தில்லை நாதரே! நஞ்சினைக் கொண்ட பாம்பினை அணியாகப் பூண்டிருக்கும் தில்லை நகர்க்கு உரிய தலைவரான எம்பிரானே! தேவரீர் பிச்சை எடுத்து உண்ணும் பொருட்டாகவே திருவீதியிலே எழுந்தருளியும், உச்சிதமாம் - சிறப்புடையதான, காளம் ஏன் - எக்காளம் எதற்காகவோ? குஞ்சரம் ஏன் - யானையும் எதற்காகவோ? கார்க்கடல்போல் தான் முழங்கும்மேளம் ஏன்? - கருமையான கடலின் ஒலிபோல முழக்கமிடுகின்ற மேள வாத்தியங்கள் எதற்கோ? ராஜாங்கம் ஏன்? மற்றும்அரச விருதுகளும் எதற்காகவோ?*

*"பிச்சைக்குப் போகையிலேயும் நுமக்கு இவ்வளவு தடபுடல்கள் எதற்கப்பனே?" என்கிறார் கவிஞர்.*

## சிவனும் அரங்கனும்

*சிதம்பரத்திலே கூத்தப்பிரானைப் போற்றிச் சொல்லிய அதே செய்யுளைத் திருவரங்கத்திற் சென்றபொழுது சொல்லி அரங்கநாதப் பிரானையும் போற்றினாய் காளமேகம். கண்டவர் வியப்புற்று நிற்க, இருகடவுளர்க்கும் ஏற்பப்பொருள் கூட்டி உரைத்து அவர்களைத் தெளிவு படுத்தினார், அந்த அருமையான செய்யுள் இது.*

**இருந் தாரை கேள்வனை**
**யோங்கு மராவை எழுபுனலைத்**
**திருந் தாரை வன்னியை**
**முடிமுடித் தோன்செய்ய வேளைப்பண்டு**
**தருந் தாதை நாயகன்**
**சுந்தரன் தூதன் சமரிலன்று**
**பொருந் தார் புரத்திட்ட**
**தீப்போள் மதியம் புறப்பட்டதே!** (99)

*சிவபெருமான் - அழகினாலே சிறப்புற்ற தாரையின் விருப்பத்திற்கு உரியவனான சந்திரனையும், படமெடுத்து உயரும் பாம்பினையும், எழுகின்ற புலனான கங்கையினையும், செவ்வை யான ஆத்திமாலையினையும், வன்னி மலரையும், முன்னாளிலே*

திருமுடியிற் கொண்டோன், செய்யவனாகிய முருகவேளை முற்காலத்தே தந்தருளிய தாதையுமானவள்; உலகுக்கெல்லாம் ஒரு நாயகன்; சுந்தரமூர்த்திகளுக்காகத் தூதும் நடந்த பெருமான். போரிடத்தே அன்று பகையானோரின் முப்புர கோட்டைகளுக்கும் அவன் இடுவித்த தீயைப்போன்ற கொடுமையுடனே, அதோ சந்திரனும் செவ்வொளி பரப்பிக் கீழ்வானத்தே எழுந்ததே? இனிச்செய்வதுதான் என்னே?

திருமால் - பெருமை பொருந்திய தாரையின் கணவனான வாலியையும், ஓங்கி உயர்ந்த மராமரத்தையும், எழுகடலையும், பகைவரையும், வன்னியென்னும் அரக்கனையும் முன்னாளிலே கொன்று அழித்தவன் திருமால். சிறந்த மன்மதனை முன்னாளிலே பெற்றுத் தந்த தகப்பனும் அவனேயாவான். உலகுக்கு நாயகனாம் அழகான இராமனும் அவனே; அவன் தூதனாகிய ஆஞ்சனேயன் அந் நாளிலே பகைவரூரான இலங்கையிலே இட்ட தீயைப் போன்றதான கொடுமையுடனே சந்திரனும் இப்போது எழுந்ததே? இனி யான் யாது செய்வேன்?

காதலனைப் பிரிந்திருந்து வாடும் ஒரு தலைமகள் சந்திரனின் உதயத்தினாலே மனங்கலங்கி இங்ஙனம் கூறி வாட்டமடைவதாகக் கொள்ளுக. சந்திரனால் அவள் அடைந்த வேதனையின் மிகுதி இப்படிக் கூறப்படுகிறது.

## நடேசனின் உடைமை

தில்லை நடராசப்பெருமானின் உடைமைகள் என்னென்னவோ? அவர் உமையை மணந்து எப்படித்தான் குடித்தனம் நடத்துகிறாரோ? கவிஞர் விளங்கத் தருகிறார்.

**ஏறு கட்டிய கொட்டி லரங்கமே**
**யீரி ரண்டு முகன்வாயி லாயமே**
**மாறுகண் ணப்பன் வாய்மடைப் பள்ளியே**
**வாய்த்த வோடை திருமால்வ தனமே**
**வீறு சேர்சிறுத் தொண்டனில் லாளுந்தி**
**வேட்ட நற்கறி காய்க்கின்ற தோட்டமே**
**நாறு பூம்பொழில் சூழ்தில்லை யம்பல**
**நாரி பகற்கு நாடக சாலையே!** (100)

ஒரு பாகத்தே பெண்ணினைக் - கொண்டவனாகிய பெருமானுக்கு வாகனமாகிய காளை கட்டியிருக்கும் கொட்டில் திருவரங்கமேயாகும்; வேதமோதும் நான்முகனின் வாயே குதிரை லாயமாகும்; வேடனாகவிருந்து பக்தனாக மாறிய கண்ணப்பனின் திருவாயே மடைப்பள்ளியாகும்; தாமரைப் பூப் பொருந்திய ஓடையானது திருமாலின் திருமுகமேயாகும்; சிறப்புப்பொருந்திய சிறுத் தொண்டரின் மனைவியினுடைய திருவயிறே விரும்பிய

*நல்ல காய்கறிகள் காய்க்கும் தோட்டமாகும்; மணம் நாறும் பூஞ்சோலைகளையுடைய தில்லையம்பலமே அவனுக்குரிய நாடக சாலையாகும்.*

*குறிப்பு: முப்புரம் எரித்தபோது திருமால் ரிஷபமாகித் தாங்கினான்; வேதங்கள் அப்போது தேர்க்குதிரைகளாயின; கண்ணப்பர் வாயிற் குதப்பியே ஊனைப் படைத்தார்; திருமால் தம் தாமரைக் கண்ணினைத் திருவடியிலே சார்த்திப் பெருமானைப் பூசித்தனர்; சிறுத் தொண்டரின் மனைவியின் வயிற்று வளர்ந்த பிள்ளைக்கறியினை விரும்பினர்; இவற்றை அமைத்துப் பாடிய முறையினைக் கற்று இன்புறுக!*

**அன்னம் இரங்காமல்**

*மதுரையிலே ஒரு சமயம் திருவிழா நிகழ்ந்து கொண்டிருந்தது. மீனாட்சியம்மை அன்னவாகனத்தே பவனிவந்து கொண்டிருந்தனள். அதனைக் கண்டு மிகவும் இன்புற்ற கவிஞர் இப்படிப் பாடுகின்றார்.*

*"சிவ பெருமான் ஒரு பித்தன். அவன் அப்படிப்பித்தன் ஆயினதனால், அவன் தேவி உணவும் உண்ணாது, வீதியிலே சோகத்துடன் இப்படி வந்து அலைந்து கொண்டிருக்கிறாளே?" என்று பரிதாபப்படுகிறார் கவிஞர்.*

**மாயனார் போற்று மதுராபுரிச் சொக்க**
**நாயனார் பித்தேறினா ரென்றே-நேயமாம்**
**கன்னன்மொழி யங்கயற்கட் காரிகையாள் ஐயையோ**
**அன்னமிறங் காமலலை வாள். (101)**

*மாயனார் போற்றும் மதுராபுரிச் சொக்க நாயனார் பித்தேறினார் என்றே - மாயனான திருமாலும் துதிக்கின்ற சிறப்புடையவரான மதுராபுரியிற் கோயில் கொண்டிருக்கும் சொக்கநாதப் பெருமான் பித்துக்கொண்டவர் ஆயினர் என்று கருதியே,*

*நேயமாம் - அவரிடத்தே அன்புடையவளான, கன்னன் மொழி - கருப்பஞ்சாற்றைப் போல இனிக்கும் பேச்சும், அம்கயல் கண் - அழகிய கயல்போன்ற கண்களும் (உடைய) காரிகையாள், அழகுடையவளான மீனாட்சி அம்மையானவள், அன்னம் இறங்காமல் - அன்ன வாகனத்தைவிட்டு இறங்காமல் (சோறு தொண்டையில் இறங்காமல்), அலைவாள்; - தெருவிலே பவனி வருவாள் (தெருவீதியிலே அலைவாள்); ஐயோ! (இரக்கக் குறிப்பு) அவள்நிலை இரங்கத் தக்கதே என்பது கருத்து.*

### குதிரைக்காரன் மகன்

*மதுரையிலே காளமேகம் மீனாட்சியம்மையைத் தரிசனம் செய்துகொண்டிருந்தார். அருகிலிருந்த ஒருவர் விநாயக பக்தர், விநாயகரைப் பற்றிப் பாடுமாறு காளமேகத்தைக் கேட்டனர். கவிஞர், விநாயகரைக் 'குதிரைக்காரன் மகன்' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டு இப்படிப் பாடுகிறார்.*

**நல்லதொரு புதுமை நாட்டிற்கண் டேனதனைச்**
**சொல்லவா சொல்லவா சொல்லவா-தொல்லை**
**மதுரைவிக்கி னேச்சுரனை மாதுமையாள் பெற்றாள்**
**குதிரைவிற்க வந்தவனைக் கூடி.** (102)

*நல்லதொரு புதுமை நாட்டிற் கண்டேன் - மிகவும் விந்தையான ஓர் அதிசயத்தை இந்த நாட்டிலே கண்டேன்; அதனைச் சொல்லவா - அதனை உங்கட்கும் எடுத்துச்சொல்லவா? தொல்லை மதுரை விக்கினேச்சுரனை - பழமையான மதுரையம் பதிலே எழுந்தருளியிருக்கும் விக்கினேசுவரப் பெருமானை, மாது உமையாள் - உமை அம்மையானவள், குதிரை விற்க வந்தவனைக் கூடிப் பெற்றாள் - (மாணிக்கவாசகரின் பொருட்டாகக்) குதிரை வியாபாரியாக வந்த ஒருவனைக் (சிவபெருமானைக்) கூடியே பெற்றெடுத்தனள்.*

*'குதிரைக்காரன் மகன் இந்த விநாயகன்' என்று கூறி அந்த விநாயக பக்தரைத் திகைக்கச் செய்கிறார் கவிஞர். பிறகு, எப்படி என்று விளக்குகிறார்.*

### அக்காளை ஏறினார்!

*சிவபெருமான் ரிஷப வாகனத்தார். அவரை அவமானமாகப் பேசுவதுபோல ஆனால் போற்றுதற் பொருளோடு இப்படிக் காளமேகம் பாடுகின்றார். ஆலவாய்ச் சொக்கனைக் குறித்தது இது. 'பெண்களைச் சுமந்த பித்தன், தங்கைக்கு மேலே நெருப்பை இட்டவன்; அக்காளைச்சேர்ந்தவன்' என வருவனவெல்லாம் முறையாகச் சிறந்த பொருள் தருவனவே என்பதனை உய்த்தறிக!*

**கண்டீரோ பெண்காள் கடம்பவனத் தீசனார்**
**பெண்டீர் தலைசுமந்த பித்தனார்-எண்டிசைக்கும்**
**மிக்கான தங்கைக்கு மேலே நெருப்பையிட்டார்**
**அக்காளை ஏறினா ராம்.** (103)

*கடம்ப வனத்து ஈசனார் - கடம்பவனத்து ஈசனாராகிய ஆலவாய்ப் பெருமான், பெண்டீர் தலைச்சுமந்த பித்தனார். தலையிற் கங்கையையும் இடப்பாகத்தே மலைமகளையும் என இரு பெண்களைச் சதா சுமந்துக்கொண்டேயிருக்கின்ற ஒரு பைத்தியக் காரர். அவர் என்ன செய்தார் தெரியுமா? எண்டிசைக்கும் மிக்கான*

தம் கைக்கு மேலே நெருப்பை இட்டார் - எட்டுத் திசைகளிலும் மிகுதியாகப் புகழ்பெற்ற தம்முடைய கையின் மேலே அக்கினியை வைத்துக்கொண்டிருப்பவர்; அக்காளை ஏறினாராம் - புகழ் பெற்ற அந்த நந்தியெனும் காளை மாட்டின் மீதும் ஏறி வருபவர்; கண்டீரோ பெண்காள் - பெண்களே! அவரை நீங்களும் பார்த்தீர்களோ?

பெண்களைச் சுமந்த அந்தக் காமப்பித்தன்; தங்கையையும் அக்காளையும் கெடுத்தானே! என்று நிந்தித்தது போல் வரும் வாசகத்து மெய்ப்பொருளை அறிந்து உண்மை காண்க.

**சிற்றிடைச்சி காண்!**

சிதம்பரத்திலே திருக்கோயில்கொண்டு வீற்றிருக்கும் அம்மையின் பெயர் சிவகாமி. அம்மையைப் போற்ற நினைக்கிறார் காளமேகம். அவள் குடும்பம் இடையர் குடும்பம் என்கிறார். அவள் ஒரு சிற்றிடைச்சி; மாட்டுக்காரக் கோனாருடைய தங்கை; ஆட்டுக்கோனானுக்குப் பெண்டானாள்;குட்டி மறிக்க ஒரு கோட்டானையும் பெற்றாள்; இப்படிச் சொல்வது போலத் தோன்றுவது பாடல்.

**மாட்டுக்கோன் தங்கை மதுரைவிட்டுத் தில்லைநகர்**
**ஆட்டுக்கோ னுக்குப்பெண் டாயினாள் - கேட்டிலையோ**
**குட்டி மறிக்கவொரு கோட்டானையும் பெற்றாள்**
**கட்டிமணிச் சிற்றிடைச்சி காண்.** (104)

கேட்டிலையோ! - பெண்ணே! நீ இதனையும் கேட்டதில்லையோ? மாட்டுக்கோன் தங்கை - மாடுகளைக் காப்போனாக விளங்கிய கோபாலனின் தங்கையான இந்தப் பார்வதிதேவி, மதுரைவிட்டு - தான் பிறந்த மதுராபுரியை விட்டு வந்து, தில்லை நகர் ஆட்டுக்கோனுக்குப் பெண்டு ஆயினாள் - தில்லைப் பதியாகிய இச் சிதம்பரத்தே நடனமாடுகின்ற ஆட்டுக் கோனுக்கு (கூத்தப் பெருமானுக்கு) மனைவியானாள்; கட்டி மணிச் சிற்றிடைச்சி - மேகலை கட்டிய அழகிய இடைச்சியடி அவள்; (சிறிதான இடையினை உடையவள் அவள்) குட்டி மறிக்க - ஆட்டுக் குட்டிகளை மறிப்பதற்காக (நம் தலையிலே குட்டிக்கொண்டு வணங்குமாறு) ஒரு கோட்டு ஆனையையும் பெற்றாள் - கோட்டானைப் போன்ற ஒருபிள்ளையையும் (ஒற்றைக் கொம்பனான ஆனைமுகனையும்) பெற்றாளடீ!

சிற்றிடைச்சி - கன்னிப் பருவத்து இடைப் பெண் எனவும், குட்டி மறித்தல் - ஆட்டுக் குட்டிகளை மறித்தல் எனவும், ஆட்டுக் கோன் - ஆட்டிடையன் எனவும் பொருள் படுதலை அறிக; அவற்றின் உண்மையான பொருளையும் அறிந்து இன்புறுக. இது நிந்தாஸ்துதி.

### கண்ணன் வேறா!

*'திருமாலே பரம்பொருள்; சிவன் பரம்பொருள் அல்லன்' என்று சிலர் கூறினர். இது மதுரையை அடுத்த அழகர் கோயிலிலே ஒருசமயம் நிகழ்ந்தது. இதனைக் கேட்ட காளமேகம் நகை கொண்டார். "அவர் வேறு, இவர் வேறா?" இப்படி மெய்ப் பொருள் விளங்கப் பாடினார்,*

**கடம்பவனச் சொக்கருக்குக் கண்ணன்றான் வேறோ**
**இடம்பெரிய கண்ணொன்றை ஈந்தான்-உடம்பதனில்**
**செம்பாதி யானான் சுமக்க எருதானான்**
**அம்பானான் தேவியுமா னான். (105)**

*கடம்பவனமாகிய மதுரையிலே கோயில் கொண்டிருக்கிற சொக்கநாதப் பெருமானுக்குக் கண்ணன்தான் அயலானவன் ஒருவனோ? ஒருபோதும் இல்லையே! விசாலமான பெரிய ஒரு கண்ணினையே முன்பு காணிக்கையாகக் கொடுத்த அன்பன் அவனாயிற்றே! அன்றியும் எம் பெருமானின் திருமேனியிற் சரிபாதியாக விளங்கும் அம்மையும் அவனாயிற்றே! அவரைச் சுமக்கக்கருதி அந்நாளில் காளையாக ஆகியவனும் அவனல் லனோ! திரிபுரதகன காலத்தே எய்தற்குரிய அம்பாகி உதவியவனும் அத்திருமாலே அல்லனோ! மற்று எம்பெருமானின் தேவியும் அவனேயன்றோ?*

*திருமாலைச் சிவனுடைய சக்தியாகவே கொள்வது சைவ மரபு. அதனை, இப்படி விளக்கியுள்ளார் கவிஞர் சிவவிஷ்ணு பேதங்களைக் கடந்த செறிவான பாடல் இது.*

### புதுமை! புதுமை!

*மதுரையிலே மீனாட்சியம்மையை தரிசித்த காளமேகம் அம்மையை ஆனந்த பரவசமாகத் துதிக்கும் சிலேடைப் பாடல் இது.*

**விள்ளப் புதுமையொன் றுண்டால**
**வாயிலின் மேவு தென்னன்**
**பிள்ளைக் கொருகுலை மூன்றே**
**குரும்பை யிடித்ததிலே**
**கொள்ளிக் கணன்றிட்டி யாலோர்**
**குரும்பை குறைந்த மிர்தம்**
**உள்ளிற் பொதிந்த விரண்டிள**
**நீர்க்கச் சுறைந்தது வே. (106)**

***நேர்பொருள்:*** *சொல்வதற்கு ஒரு புதுமை ஒன்று உண்டு. அது திருவாலவாயிடத்தே இருக்கும் தென்னம் பிள்ளையிடத்தே, ஒரு குலையில் மூன்றே குரும்பைகள் பிடித்தன; அவற்றுள்*

கொள்ளிக்கண்ணனின் திருஷ்டியாலே ஒன்று குறைந்து போயிற்று; அமுதம் உள்ளே பொதிந்ததாகப் பிற இரண்டும் இள நீராகிக் கைப்பு உடையதாகவும் ஆயிற்று.

**அம்மையைக் குறித்த பொருள்:** திருவாலவாயினிடத்தே சொல்லுவதற்குத் தக்கதான புதுமையொன்று உள்ளது. தென்னவனான மலையத்துவசனுடைய பெண்ணாகிய தடா தகைக்கு ஒரு வரிசையிலே மூன்று தனங்கள் முகிழ்த்தன. அவற்றுள் ஒன்று நெருப்புக் கண்ணனான சோமசுந்தரப்பிரானின் பார்வைபட்டு மறைந்தது. உயிர்களைக் காப்பாற்றும் அமுதம் உள்ளிடத்தே பொதிந்த இரண்டு இளநீர்கள் போன்ற தனங்களும், பின்கச்சுக்குள்ளே அடங்கு வனவுமாயின.

தடாதகைப் பிராட்டிக்கு மூன்று தனங்கள் எழுந்தன. என்பதும், சிவபிரானைக் கண்டதும் ஒன்று மறைந்ததென்பதும் திருவிளையாடற் புராணத்திலே கூறப்பட்டிருக்கிறது. அதனையே இப்படிச் சுவையாகப் பாடுகிறார் கவிஞர்.

## பருந்து எடுத்துப் போகிறது!

காஞ்சிபுரத்திலே வரதராசப் பெருமாளின் கருடோத்சவம் நடந்து கொண்டிருந்தது. கருட வாகனத்தே பெருமாளும் நகர் வலம் வந்து கொண்டிருந்தனர். அப்போது பெருமாளைப் பற்றி நிந்தாஸ்துதியாகப் பாடியது இது.

**பெருமாளும் நல்ல பெருமாள் அவர்தம்**
**திருநாளும் நல்ல திருநாள்-பெருமாள்**
**இடந்திடத்திற் சும்மா இராமையினா லையோ**
**பருந்தெடுத்துப் போகிறதே பார். (107)**

"இந்தப்பெருமாளும் ஒரு நல்ல பெருமாள்! அவர் திரு நாளும் ஒரு நல்ல திருநாள்! அந்தப் பெருமாள் இருந்த இடத்திலே சும்மா இராமையினால், ஐயோ! அவரைப் பருந்து எடுத்துக் கொண்டு போகிறதே?" அதனைப் பார்! மேற்போக்காகப் படித்தால், பெருமாளையும், அவர் திருநாளையும் புலவர் நிந்திப்பதாகவே தோன்றும். ஆனால் பொருள் பின்வருமாறு கொள்க.

பெருமாளும் நல்ல பெருமாள் - வரதராசப் பெருமாளும் அடியவர்க்கு நலந் தருகின்ற பெருமை உடையவரே; அவர்தம் திருநாளும் நல்ல திருநாள் - அவரைக் குறித்துக் கொண்டாடப் பெறும் திருநாளும் நன்மை தருவதான ஒரு திருநாளே, (அன்பர்க்குத் தாமே அவரவர் இருக்கும் இடம் சென்று அருள்புரியும் கருணைப் பெருக்கினாலே); பெருமாள் இருந் திடத்திற் சும்மா இராமையினால் - பெருமாள் தாமிருந்த இடத்தி

லேயேவாளா இருந்து விடாமையினாலே; பருந்துஎடுத்துப் போகிறதேபார் - கருடன் சுமந்துகொண்டு திருவீதி வழியாகச் சொல்லுகின்றதே. அதனைக் கண்டு போற்றுவாயாக; ஐயோ! அங்ஙனம் போற்றி உய்திபெற நீ முயலாய் ஆயின், ஐயோ! (நின் நிலை இரங்கத்தக்கதே) என்பது கருத்து.

**கனவிலே வந்தான்**

ஒரு பெண்; அவள் கச்சி ஏகாம்பரநாதரின் மேற்காதல் கொண்டாளாம்; அவரைக் கனவிலேயும் கண்டாளாம்; தன் தோழிமாரிடம் தன் கனவுக் காட்சியைக் கூறி, 'அவனைக் கண்டீரோ பெண்களே!' என்றும் கேட்கிறாளாம்! இப்படி ஒரு சிறிய கனவுக் காட்சியைக் கற்பனையிலே பின்னிக் கொண்டு அவள் ஏக்கத்தைப் புலப்படுத்துவது போல ஏகாம்பர நாதனைப் போற்றுகின்றார்.

**நேற்றிராவந் தொருவன் நித்திரையிற் கைப்பிடித்தான்**
**வேற்றூரான் என்று விடாயென்றேன்-ஆற்றியே**
**கஞ்சிகுடி யென்றான் களித்தின்று போவென்றேன்**
**வஞ்சியரே சென்றான் மறைந்து.** (108)

வஞ்சியரே - வஞ்சிக் கொடிபோன்ற பெண்களே! நேற்றிரா வந்து ஒருவன் நித்திரையில் கைப்பிடித்தான் - நேற்றிரவு ஒருவன் வந்து என் உறக்கத்திலே என்கையைப் பற்றினான்: வேற்றூரான் என்று விடாய் என்றேன் - அவனை, அயலூர்க்காரன் என்று முதலிலே நினைந்துக் 'கையைவிடு' என்றேன்; ஆற்றியே கஞ்சி குடி என்றான் - என் சினத்தைத் தணிவித்தவனாகத் தான் காஞ்சியிலே குடியிருப்பவன் என்று அவன் உரிமையுடனே சொன்னான்; களித்து இன்று போ என்றேன் - அவன் என் காதலனே என்று அறிந்ததும் இன்று என்னுடன் களித்திருந்துவிட்டுப் போவாயாக என்று வேண்டினேன்; மறைந்து சென்றான் - அந்த வேளையிலே அவன் மறைந்து போய்விட்டான்; அவனை நீங்கள் யாராவது பார்த்தீர்களோ? என்பது குறிப்பு.

'அவன் கஞ்சியை ஆற்றிக்குடி என்று என்னை ஏளனம் செய்தான்; நான் களி இருக்கிறது தின்று விட்டுப்போ என்று சொன்னேன்' எனத் தன்னை மறைத்துச் சொல்லினாள் என்க.

**கருங் குயிலே**

கவிஞர், காஞ்சியிலே காமாட்சி அம்மையைத் தரிசனம் செய்து கொண்டிருந்தனர். அப்போது, அம்மையைக் கருங்குயில் என்று குறிப்பிட்டு, அதற்கேற்பச் சொற்களையும் நளினமாக அமைத்துப் பாடுகின்றனர்.

**மாக்கைக் கிரங்கும் குருகும்**
**வளர்சக்ர வாகப்புள்ளும்**
**தாக்கச் சரபங் குழைந்த**
**தெவ்வாறு சகதலத்தை**
**ஆக்கிப் பெருக்கித் திருவறச்**
**சாலையில் அன்னமிட்டுக்**
**காக்கைக் கொருகொக்கின் கீழே**
**இருக்குங் கருங்குயிலே. (109)**

நின் பெருமை பொருந்திய கைகளிலே யிருந்து ஒலிக்கும் வளைகளும், வருகின்ற சக்கரவாகப் பறவையினைப்போன்றதாக விளங்கும் தனபாரங்களும், அழுத்தமாகப் பொருந்தித் தாக்கிவிடச் சிங்கத்தைத் தாக்கியளிக்கும் சிம்புள் என்னும் வடிவை மேற்கொண்ட சிவபெருமானின் வலிய திருமேனியும் குழைந்து போயினதே! அதுதான் எப்படியோ? உலகத்தைப் படைத்து வளம்பெருக்கி அழகான அறச்சாலையிலே அனைவருக்கும் உணவும் அளித்து, உயிர்களைக் காக்கும் பொருட்டாக, ஒப்பற்ற மாமரத்தின் கீழே அமர்ந்து தவமிருக்கும், கருமை நிறமும், குயிலினும் இனிய குரலும் உடையவளான அம்மையே! அதனை எனக்குச் சொல்வாயாக.

அம்மையின் தழுவக் குழைந்த திருவிளையாடலை நினைத்தும், உலகிற்கு ஆதியாக விளங்கும் அவள் கருணைப் பெருக்கினை வியந்தும், காளமேகம் இப்படிப் பாடுகின்றார்.

### எலி இழுத்துப் போகிறது!

காஞ்சிபுரத்திலே, விநாயகப் பெருமானுக்கு உற்சவம் நடந்து கொண்டிருந்தது. பெருமான் பெருச்சாளி வாகனத்தில் அமர்ந்து செல்கிறார். "பாவம்! இப்படி இந்தப் பிள்ளையை எலி இழுத்துப் போகிறதே! சிவனுடைய மழு எங்கே? திருமாலின் சக்கரம் எங்கே? பிரமனின் தண்டம் எங்கே? இதனைத் தடுக்காமல்இருப்பதனால் அவர்களிடமிருந்து அவை யாவும் பறிபோய்விட்டனவோ?" என்று அங்கலாய்க்கிறார் கவிஞர்.

**மூப்பான் மழுவும் முராரிதிருச் சக்கரமும்**
**பாப்பான் கதையும் பறிபோச்சோ-மாப்பார்**
**வலமிகுந்த மும்மதத்து வாரணத்தை யையோ**
**எலியிழுத்துப் போகின்ற தென். (110)**

மா பார் வலிமிகுந்த மும்மதத்து வாரணத்தை - பெரிய பருமையான வலிமிகுந்த மும்மதமும் பொருந்திய யானை முகக் கடவுளை, எலி இழுத்துப் போகின்றது என் - பேரெலியாகிய பெருச்சாளி இப்படித் தெருவூடே இழுத்துச் செல்லுகின்றதே, இது என்ன அநியாயம்?

மூப்பான் மழுவும் - ஆதி முதல்வனான சிவபிரானின் மழுவாயுதமும், முராரி திருச்சக்கரமும் - முரன் என்பானைக் கொன்று முராளி எனப் புகழ்பெற்ற திருமாலின் சிறந்த சக்கரப்படையும், பாப்பான் கதையும் - பிரமனின் கதாயுதமும், பறிபோச்சோ - அந்த எலியை அடித்துப் பிள்ளையைக் காப்பதற்கு வழியில்லாமல், அவர்களிடமிருந்து பறி போய்விட்டதோ?

'யானையை எலி இழுத்துப் போகிற அதிசயத்தைப் பார்த்தீர்களோ' என்று வியப்பதும் ஆம்.

## ஆடாரோ அவர்!

திருவாரூரிலே தியாகராசப் பெருமானின் திருநடனத்தைத் தரிசித்துக் கொண்டிருந்தார் கவிஞர். எவ்வளவு அரிய நடனம்! பெருமான்; எவ்வாறு ஆடுகின்றார்! என்று போற்றினார் ஒருவர். அப்போது, 'ஏனய்யா அவர் ஆட மாட்டார்?' என்ற பாடிய நிந்தாஸ்துதி இது.

**ஆடாரோ பின்னையவ ரன்பரெல்லாம் பார்த்திருக்க**
**நீடாரூர் வீதியிலே நின்றுதான்-றோடாரும்**
**மெய்க்கே பரிமளங்கள் வீசும் தியாகேசர்**
**கைக்கே பணமிருந்தக் கால்.** (111)

"கையிலே பணமிருந்த தென்றால் அவன் ஏனய்யா வீதியில் ஆட்டம் போடமாட்டான்?" என்று எக்காளமாகக் கேட்கிறார் கவிஞர்.

தோடு ஆரும் மெய்க்கே பரிமளங்கள் வீசும் தியாகேசர் - காதுகளிலே பொருந்தியிருக்கும் தோடுகளும், உடலிடத்தே கமழ்கின்ற வாசனைப் பொருள்களின் மணமும் உடையவர் இத் தியாகேசர்; அவர் கைக்கே பணம் இருந்தக்கால் - கையிடத்தே பணம் இருந்ததென்றால் (பணம் - பாம்பும் ஆம்) அவர் அன்ப ரெல்லாம் பார்த்திருக்க - அவர் தம் அடியவர்கள் அனைவரும் கண்டு இன்புற்றிருக்க, ஆரூர் வீதியிலே நின்று ஆடாரோ - திருவாரூர்த் தெருவிலே நின்று இப்படி ஆடமாட்டாரோ?

'கையிலே பணமிருந்தால் ஆடாத ஆட்டமெல்லாம் ஆடுவான்', என்ற உலகியற் கருத்தை வைத்து இப்படிக் கூறுகிறார். பணம் - பாம்புப் படமும், பணமும் ஆகும்.

## ஆனின் கழல்

திருவாரூரிலே தியாகேசரின் ரிஷபவாகன உற்சவம் உள்ளத்தைக் கவரக் காளமேகம் மெய்ம்மறந்து நிற்கிறார். அப்போது பெருமானுடைய திருப்பாதங்களின் சிறப்பினை வியந்து இப்படிப் பாடுகிறார்.

**பாரளக்குந் தூதுசெல்லும் பையரவின் மேனடிக்கும்**
**சீரகலி சாபத்தைத் தீர்க்குமே-ஊரருகில்**
**சண்டச் சகடுதைக்குந் தையலாய் கார்நீல**
**கண்டத்தா ரூரான் கழல்,** (112)

*பெண்மணியே! கருநீல கண்டத்தையுடைய ஆரூரான் ஊர்ந்து செல்லுகின்ற ஆனேற்றின் பாதங்கள், மாவலி தந்த உலகை எல்லாம் அளக்கும்; பாண்டவர்க்காகத் தூது செல்லும்; படமுடைய பாம்பான காளிங்கனின் தலை மேலேயும் நடனமிடும்;அழகிய அகலிகையின் சாபத்தையும் போக்கும்; தன் ஊரின் அருகிலே பகைத்து வந்த சகடாசுரனையும் உதைத்துக் கொல்லும்; அத்தகைய சிறப்பினை உடையவை அவை.*

*'மாயனே எருதாகிப் பெருமானைத் தாங்கிச் செல்பவன்' என்பது புராண மரபு. அதனை உளங்கொண்டு மாயனின் திருவிளையாடலை யெல்லாம் இப்படிக் கூறுகின்றார். ஆனின் திருவடிகளே இப்படிச் சிறந்தவையானால், அதனை ஏறிச் செலுத்துவோனின் பாதங்களை பற்றிச் சொல்லுதலும் வேண்டுமா? என்பது உட்கருத்தாகும். அதனை அடைவதே உய்திக்கு வழி என்பதும் முடிபாகும்.*

### வாயிற்படி ஆனாரிலையே

*திருவாரூர்த் தியாகேசப் பெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்காகப் பரவையாரிடத்தே தூது நடந்து சென்றனர். அந்தத் திருவருளைப் போற்ற நினைக்கிறார் கவிஞர். அடிமுடி தேடியும் காணாத மாலும் அயனும் அந்தப் பரவை வீட்டின் வாயிற்படிகளாக உருக்கொண்டு கிடந்திருந்தால், அவற்றைக் கண்டிருக்கலாம் அல்லவோ? என்று, அவர்களை நினைத்து இரங்குவது போலப் பாடுகிறார்.*

**ஆனா ரிலையே அயனும் திருமாலும்**
**கானா ரடிமுடிமுன் காண்பதற்கு- மேனாள்**
**இரவுதிரு வாரூரி லெந்தைபிரான் சென்ற**
**பரவைதிரு வாயில் படி.** (113)

*"பிரமனும் திருமாலும், முன்னாளிலே காட்டிடத்தே தோன்றிய சிவபெருமானது அடியையும் முடியையும் காண்பதற்கு முடியாமற் போயினார்களே! திருவாரூரிலே, ஓர் இரவிலே, எம் தந்தையாகிய அச் சிவபெருமான் தூது நடந்து சென்ற பரவைநாச்சியாரின் வீட்டுவாயிற்படிகளாக அவர்கள் ஆனார்கள் இல்லையே? அங்ஙனம் ஆகியிருந்தால் அவர்கள் கண்டிருப் பார்கள் அல்லவோ?" என்பது குறிப்பு.*

### கிழக் கொல்லன்

*திருவாரூர்த் தியாகேசரைச் சென்று பணிந்தபோது அவரை வியந்து மனமுருகிப் பாடியது இது.*

**தென்னொக்குஞ் சோலைக் கமலைப்**
**பிரான்செஞ் சடாடவி தான்**
**என்னொக்கு மென்னி லெரியொக்கு**
**மந்த வெரியி லிட்ட**
**பொன்னொக்கும் கொன்றை கரியொக்கும்**
**வண்டுநற் பொற்பணி செய்**
**மின்னொக்குங் கங்கைகிழக் கொல்ல**
**னொக்குமவ் வெண்பிறை யே.** (114)

*'அழகு குடியிருப்பது போன்ற வளமான சோலைகளை யுடைய திருவாரூரிலே கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானின் செஞ்சடைக் காடுதான் எதனைப் போன்றதோ' என்று கேட்டால் அது எரியும் நெருப்பினைப் போன்றதாகும் எனலாம். அச் சடையின் மேல்விளங்கும் கொன்றை மலர்களோ என்றால், நெருப்பினில் இட்ட பொன்னைப் போன்றதாக விளங்கும்; அக் கொன்றை மலர்களிடத்தே விளங்கும் வண்டுகளோ கரித் துண்டுகளைப் போன்றுவிளங்கும். அங்கே விளங்கும் கங்கையோ வென்றால், நல்ல பொன்னின் நடுவே வயிரத் துண்டுகளை இணைத்துப் பணிசெய்தார் போன்றதாக மின்னொளி பரப்பி விளங்கும். அவ்விடத்தே விளங்கும் வெண் பிறையோ வென்றால். அந்தப் பொற்பணியினைச் செய்து கொண்டிருக்கிற ஒரு கிழட்டுப் பொற்கொல்லனைப் போலத் தோன்றும்.*

*சிவபெருமானின் சடைமுடியிலே, இப்படி ஒரு பொற்பணி செய்யும் தொழிற் காட்சியையே உருவாக்கி இன்புறுகின்றார் கவிஞர்.*

### சந்து போனால்

*'பெருமான்; ஏனப்பா இப்படி ஆடுகின்றார்?' திருவாரூர்த் தியாகராசப் பெருமானைத் தொழுது நின்ற காளமேகத்தை ஒருவர் கேட்டு விடுகிறார். "ஒரு பெண்ணினிடத்தில் ஒரு முறை அல்லாமல் இருமுறையும் தூதுபோய் வந்தவாராயிற்றே? அந்தக் களைப்புதான் சரியாக நிற்க முடியாமல் கால் ஆட்டங் கண்டிருக்கிறது போலும்!" என்று, அவருக்கு சொல்லுகிறார் கவிஞர்.*

**திருந்தா டாவணியுந் தென்கமலை ஈசர்**
**இருந்தாடா தென்செய் திடுதார்-பொருந்த**
**ஒருகாலே யல்லவே யொண்டடிக் காவன்**
**றிருகாலும் சந்துபோ னால்.** (115)

ஒள்ளிய தொடியணிந்த பரவையாருக்காக, அவள் சுந்தரரோடு மனம் பொருந்துமாறு, ஒரு தடவையே அல்லாமல், அன்றிரவிலேயே இரு தடவையும் தூது நடந்து சென்றால், நன்றாகப் படமெடுத்து ஆடுகின்ற பாம்பினை அணியும் அழகிய திருவாரூர்ப் பெருமானின் காலோய்ந்து ஆடாமல் என்னதான் செய்வார்?

பெருமான், தொண்டனுக்குத் தூது சென்ற சிறப்பினை உரைத்துப் பெருமானின் திருநடனத்தைச் சிறப்பிக்கின்றார் கவிஞர். 'சந்து போனால்' என்பது, 'சந்து நகர்ந்து போனால்' எனவும் பொருள்படும். சந்து நகர்ந்தால் அசைவின்றி நிற்க முடியாமல் போய்க் கால்கள் தாமாகவே ஆட்டம் கொடுக்கும்; இப்படிக் கூறியதாகவும் நாம் கொள்ளலாம்.

## ஒற்றி யாச்சே!

திருவாரூரிலே ஒரு சமயம் காளமேகப் புலவர் தியாகேசப் பெருமானைத் தரிசனம் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய திரு நடனத்தைக் கண்ட அவருக்குப் பெருமானைத் துதித்துப் பாடவேண்டும் போலிருந்தது. அந்த ஆட்டத்தைக் கேலிசெய்வது போல வியந்து பாடுகின்றார்.

**ஆடும் தியாகரே ஆட்டமேன் தானுமக்கு**
**வீடும் சமுசார மேலிட்டுக் கூடிச்**
**செருக்கி விளையாடச் சிறுவரிரண் டாச்சே**
**இருக்குமூ ரொற்றி யாச்சே?** (116)

திரு நடனம் செய்யும் தியாகராயப் பெருமானே! உமக்கு ஏனய்யா இந்த வேண்டாத ஆட்டம் எல்லாம்? வீடும் சமுசார பந்தமும் அதிகமாகச் சேர்ந்து போய்விட்டதே! கர்வத்தோடு விளையாடிக் கொண்டிருக்க ஆண் மக்களும் இருவர் பிறந்து ஆய்விட்டதே! நீர் இருக்கின்ற ஊரும் ஒற்றியூராயிற்றே! (ஒத்திக்கு வைக்கப்பட்டிருப்பதாயிற்றே.)

ஆட்டம் - ஆடம்பர வாழ்வு எனவும், ஒற்றி - கடனுக்கு ஈடாக போக்கியம் வைக்கப்படுவது எனவும் பொருள்பட்டு நிந்தையாக அமைவதும் காண்க. "வளமானவர் ஆட்டமிடுவதிலே பொரு ளிருக்கிறது; உமக்கு எதற்கு ஐயனே ஆட்ட மெல்லாம்?" என்று உரிமையோடு கேட்கின்றார் கவிஞர்.

## வயிரம் இருப்பதா!

செருக்கு மிகுந்த செல்வர் ஒருவர், திருவாரூர்த் தியாகேசருக்கு ஒரு வைர மாலையினை அணிவித்துத் தம்மைக் குறித்துப் பெருமை பேசிக்கொண்டிருந்தார். அப்போது, காளமேகம் பாடியது இது. தியாகராயரைப் புலவர் தரிசித்துக்

*கொண்டிருந்தபோது, அவ்விடமிருந்து ஒருவர், சுவாமிக்குச் சார்த்தியிருந்த வயிரப்பதக்கம் அறவும் பொருந்தவும் பாடுமாறு கேட்டனராம். அப்போது அறப்பாடியது இது என்பர் சிலர். இது பொருந்துமாறு இல்லை. பக்தர்கள் இப்படி ஒருபோதும் கேட்கவே மாட்டார்கள்.*

**அன்னவயல் சூழ்ந்திருக்கும் ஆரூரான் நெஞ்சத்தில்**
**இன்னம் வயிரம் இருப்பதா-முன்னமொரு**
**தொண்டன்மக னைக்கொன்றுஞ் சோழன்மக னைக்கொன்றும்**
**சண்டன்மக னைக்கொன்றும் தான்?** (117)

*அன்னங்கள் விளங்குகின்ற வயல்களைச் சுற்றவும் கொண்டதாய் அமைந்திருக்கின்ற திருவாரூர்ப் பெருமாளின் திருமார்பிடத்தே இன்னமும் வயிரம் இருப்பதோ? (வயிரம் - வயிரமாலை; சினம்.) முதற்காலத்தே ஒப்பற்ற தொண்டனான சிறுத்தொண்டனின் மகனைக் கொன்றானே! மனுச்சோழனின் மகனையும் கொன்றானே! சண்டேசுரனின் தந்தையையும் கொன்றானே! இனியும் எதற்குத் தான் இந்த வயிரமோ? (சினமோ?) 'வயிரம் இருப்பதா?' என்று புலவர் இருபொருள்படப் பாடவும், அந்த வயிரமாலை தானே அற்று விழுந்த தெனவும் கூறுவர், அதனால் செல்வரின் செருக்கும் அழிந்தது என்று கொள்ளுக.*

## அம்பலத்தே போம்!

*திருவாரூர்த் தியாகேசப் பெருமானைத் தரிசித்த காளமேகம் , இவ்வாறு பாடிப் பெருமானைப் போற்றுகின்றார்.*

**பாரூ ரறியப் பலிக்குழன்**
**நீர் பற்றிப் பார்க்குமிடத்**
**தோரூரு மில்லை யிருக்கவென்**
**றாலுமுள் ளூருமொற்றி**
**பேரூ ரறியத் தியாகரென்**
**றே பெரும் பேரும் பெற்றீர்**
**ஆரூரி லேயிருப் பீரினிப்**
**போய்விடும் அம்பலத்தே.** (118)

*உலகத்திலுள்ள ஊரவர் எல்லோருமே அறியும்படியாகப் பிச்சைக்கு அலைந்தீர், உம்மை நெருங்கி உம் நிலையை ஆராய்ந்து பார்க்குமிடத்தே, உமக்கென ஓர் ஊரும் இருப்பதாகத் தோன்றவில்லை. அது தானில்லை; நீர் இருக்க வென்றாலும் இந்தவூர் ஆகுமோ எனநினைத்தால், உள்ள இதுவும் ஒற்றியாக இருக்கிறது. பேரூர்கள் எல்லாம் அறியும்படியாகப் பெரியதொரு தியாகவான் என்று புகழும் பெற்று விட்டீர்! இனி எவருக்குரிய ஊரிலேதான் நீர் தங்கி யிருப்பீரோ? எதுவும் உமக்கென*

இல்லாததாலே, அம்பலத்திற்குச் சென்று விடுவீராக! அதுவே உமக்குப் பொருந்தும்!

திருவொற்றியூர், திருவாரூர் என்றது ஊர்ப் பெயர்களை, ஒற்றி - ஒற்றிவைத்தல் எனவும், எவர் ஊரில் இருப்பீர் எனவும் நயமாக அமைத்தனர். இருக்கும் ஊர் ஒற்றியூர்; திருவாரூரிலும் இருப்பவர் நீரே; இனி அம்பலத்தே போய் நடனமாடுபவரும் நீரே! என்று போற்றுகின்றார் கவிஞர்.

**ஏன் நஞ்சு தின்றார்?**

மனிதர்கள் வறுமையிலே வாடும்போது மனம் வெறுத்து நஞ்சைத் தின்று சாவதற்குக் கருதுவார்கள். வாழ்வில் வெறுப்பு ஏற்படுவதும் சில சமயங்களில் தற்கொலைக்குக் காரணமாகலாம். ஒருவர், சிவபெருமான் நஞ்சினை உட்கொண்ட சிறப்பினை வியந்து கூறிக்கொண்டிருந்தார். மயிலாடுதுறை என்னும் தலத்திலே நிகழ்ந்த நிகழ்ச்சி இது. அதனைக் கேட்டுக் கொண்டிருந்த காளமேகம். இப்படி ஒரு பாடலைச் சொல்லி அவரைத் திகைக்க வைக்கின்றார்.

**வள்ளலெனும் பெரிய மாயூர நாதருக்கு**
**வெள்ளிமலை பொன்மலையு மேயிருக்கத்- தெள்ளுமையாள்**
**அஞ்சலஞ்ச லென்றுதின மண்டையிலே தானிருக்க**
**நஞ்சுதனை யேனருந்தி னார்? (119)**

வள்ளல் எனும் பெரிய மாயூரநாதருக்கு - வள்ளன்மை உடையவர் என்று புகழ்பெற்றவரான மாயூரநாதருக்கு, வெள்ளி மலையாகிய கைலாயமும் பொன்மலையாகிய மகா மேருவுமே சொந்தாயிருக்கும் பொழுதும், தெள் உமையாள் தினம் அஞ்சலஞ் சலென்று அண்டையிலே தானிருக்க - தெளிந்த அறிவுடையவ ளான உமையம்மையானவள், நாள்தோறும், அஞ்ச வேண்டாம் அஞ்ச வேண்டாம் என்று சொல்லியவளாக அவரின் அருகிலேயே இருக்கும்பொழுதும், நஞ்சுதனை ஏன் அருந்தினார் - விரக்தியுற்றுப் பெருமான் ஏனய்யா நஞ்சினை உட்கொண்டார்? (மாயூரம் - மயிலாடு துறை - இப்பொழுது மாயவரமாகிச் சிதைந்து வழங்கும் பழைய ஊர்.)

**புற்று மண்**

வைத்தீச்சுரன் கோயிலில் புற்றுமண் சிறப்பாகும். அதனை குறித்துக் காளமேகம் பாடுகிறார். தம்மை மதியாத சம்பந் தாண்டான்மீது காளமேகம் வசைபாட, அதனால் இவருக்கு நோய் வந்தடைந்ததாம். அந் நோயினின்றும் வைத்தீசர் கோயிற் புற்றுமண்ணை உண்டு இவர் விடுபட்டாராம். அப்போது அதனைச் சிறப்பித்துப் பாடியது இது என்பது வரலாறு.

**மண்டலத்தி னாளும் வயித்தியராய்த் தாமிருந்தும்**
**கண்டவினை தீர்க்கின்றார் கண்டீரோ-தொண்டர்**
**விருந்தைப்பார்த் துண்டருளும் வேளூரென் னாதர்**
**மருந்தைப்பார்த் தாற்சுத்த மண்.** (120)

இந்த உலகிலே எந்நாளும் மருத்துவராகவே தாம் வீற்றிருந்த போதிலும், தம் கழுத்திலே அமைந்த கறையாகிய நோயினை அவர் தீர்த்துக்கொள்வதனை எவரேனும் கண்டிருக்கிறீர்களோ? கண்டது கிடையாதே! தொண்டர்கள் படைக்கின்ற விருந்துகளை எதிர்பார்த்து, அவற்றை உண்டு அருளுகின்ற, வேளூரிலிருக்கும் என்னுடைய தலைவரின் மருந்தைக் கவனித்துப் பார்த்தால், அது வெறும் மண் என்பதையாவது யாரும் அறிவீர்களோ?

பெருமானை இகழ்வது போலப் புகழ்கிறார் 'கண்டவினை தீர்க்கின்றார்' என்பதனை, "ஆன்மாவுக்கு நோயாக கண்ட இருவினையையும் போக்குகின்றார்" எனவும், தொண்டரின் காணிக்கையினை ஏற்று உதவுபவர் எனவும், புற்று மண்ணே சிறந்த மருந்தாகுமெனவும் கொள்ளுக.

## நெருப்பை அணைத்தவள்

'புள்ளிருக்கும் வேளூர்' எனப் புகழ்பெற்று விளங்குகிற வைத்தீசுரன் கோயிலுக்குச் சென்றிருந்தார் காளமேகம். அங்கே, பெருமானைத் தரிசிப்பவர், அம்மையின் பாகமாயமைந்த நிலையிலே நெஞ்சினைப் பறிகொடுத்தார். அப்போது பாடியது இது.

**தீத்தானுன் கண்ணிலே தீத்தானுன் கையிலே**
**தீத்தானு முன்றன் சிரிப்பிலே-தீத்தானுன்**
**மெய்யெலாம் புள்ளிருக்கும் வேளூரா உன்னையிந்தத்**
**தையலா ளெப்படிச் சேர்ந்தாள்?** (121)

புள்ளிருக்கும் வேளூரிலே கோயில் கொண்டிருக்கின்ற பெருமானே! நின் நெற்றிக்கண்ணில் விளங்குவதும் நெருப்புத்தான், நின் திருக்கரத்திலே இருப்பதும் நெருப்புத்தான். நின் திரிபுரம் எரித்த சிரிப்பிலே எழுந்ததும் நெருப்புத்தான். நின் திருமேனி முழுவதுமே நெருப்பு மயமானது தான். இப்படி இருக்கவும், இந்தப் பெண்மணியான உமையம்மை நின்னை எப்படி விரும்பிவந்து அணைந்தாளோ? அதுதான் எனக்கும் வியப்பாயிருக்கிறது பெருமானே!

புள்ளிருக்கும் வேளூர் - சடாயு பூசித்த திருத்தலம். அம்மை தண்மையுடையவள். "அவள் எப்படி நெருப்பு மயமான உடலுடைய அப்பனுடன் சேர்ந்துள்ளாள்?" இப்படிக் கற்பித்து வியக்கிறார் கவிஞர்.

### எந்த வினை தீர்ப்பார்?

வேளூர் வைத்தியநாதரைத் தரிசித்தபின், காளமேகம் அவரைப்பற்றிப் பாடுகின்றார். "இவருடைய சொந்தக்காரர்களின் துன்பங்களையே இவரால் தீர்க்க முடியவில்லையே? இவர் எங்ஙனம் ஐயா பிறருடைய வினைகளைத் தீர்ப்பார்?" என்று கேலி பேசுகிறார்.

**வாதக்கா லந்தமக்கு மைத்துனர்க்கு நீரிழிவாம்**
**பேதப் பெருவயிறாம் பிள்ளைதனைக் - கோதக்கேள்**
**வந்தவினை தீர்க்க வகையறியார் வேளூரர்**
**எந்தவினை தீர்ப்பார் இவர்? (122)**

சொல்லுவதைக் கேட்பாயாக; வேளூரரான சிவ பெருமானுக்குத் தமக்கே வாதக்காலாம்; அவர் மைத்துனர்க்கு நீரிழிவாம்; அவர் பிள்ளைக்கு விகாரமான பெருவயிறாம்! இவ்வாறு, தமக்கும் தம்மவர்கட்கும் வந்த நோய்களைத் தீர்க்கவே வகை அறியாதவராயிருக்கும் இவர், வேறு எந்த வினையைத்தான் தீர்க்கப் போகிறார்?

கால் வாதம் - காற்றே திருவடியான நடனநிலை. நீர் இழிவு - நீரான கடலிடையே துயில்வது. பேதப் பெரு வயிறு - மாறுபாடான பருத்த தொந்தி; மகோதரம்.

தம் வீட்டு நோய்நொடிகளையே தீர்க்கமுடியாது தத்தளிக்கும் அவர், எப்படி நம் வினைகளைத் தீர்க்கப் போகிறார் என்று நிந்திப்பது போலவும் தோன்றும்.

### குறமகளை மணந்தான்

முருகப் பெருமான் குறக்குலக் கொடியான வள்ளியை மணந்தான் அல்லவா. அதனால், பலரும் வருத்தம் அடைந்தார்கள் என்று சொல்வதுபோலக் கடவுளரின் தன்மைகளை அமைத்துப் பாடிய செய்யுள் இது.

**மருகிருக்கும் வேளூரின் வயித்திமகன்**
**குறமகளை மணந்தா னென்றே**
**உருகியர னஞ்சுண்டா னுமையவளுந்**
**தவம்புரிந்தா ளுயர்மான் மேனி**
**கருகிமிக மண்டின்றான் கமலன்முக**
**நாலானான் கடவு ளோர்கள்**
**இருவிழியு மிமையாம லிரவுபக**
**லுறங்காம லிருக்கின் றாரே. (123)**

வாசனைச் செடிகள்; (மருக்கொழுந்தும் ஆம்) விளங்குகின்ற புள்ளிருக்கும் வேளூரிடத்தே கோயில் கொண்டிருக்கிற

வைத்தீசுரரின் திருமகன், குறவனின் மகளைச் சென்று மணந்து கொண்டான். அதனை அறிந்ததும், அவன் தகப்பனான வைத்திய நாதன் நஞ்சைக் குடித்துவிட்டான். தாயாகிய உமையோ தவம் செய்யலானாள். உயர்ந்த மாமனான திருமாலோ தன்மேனி கருநிறம் பெற வருந்திப் பெரிதும் மண்ணைத் தின்னத் தொடங்கினான். பிரமனோ முகத்தைத் தொங்கவிட்டவனானான். மற்றைய கடவுளர்களோ கண்கள் இமையாதவராகி இரவுபகல் கவலையுற்றவர்களாக உறங்காமல் இருக்கின்றார்கள்.

குலமுறை தவறியதனால், இப்படி உறவினர் தம் உயிரை மாய்த்துக் கொள்ளக் கருதினார்கள் என்பது போலக் கூறுகிறார். இவை அவர்களின் சிறப்புக்களா தலையும் உய்த்து அறிக.

## எப்படி வந்தது?

காளமேகம், அண்ணமலையின் அருணாசலப் பெருமானை வழிபட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது சிறுத்தொண்டர் கதை அவர் நினைவிலே எழுந்தது. சிறுத்தொண்டர் தம் மகனையே அறுத்துச் சமைத்துப் பரிமாறி நின்றபோது, பெருமான் 'சீராளா' என்று அழைக்க, அவன் ஓடிவந்து நின்றதையும் நினைத்துக் கொண்டார். 'எப்படி வரமுடியும்' என்று கேட்பதுபோல, அந்தத் திருவிளையாடலைப் போற்றுகின்றார்.

**சட்டியிலே பாதியந்தச் சட்டுவத்தி லேபாதி**
**இட்டகலத் திற்பாதி இட்டிருக்கத் - திட்டமுடன்**
**ஆடிவந்த சோணேசர் அன்றழைத்த போதுபிள்ளை**
**ஓடிவந்த தெவ்வா றுரை?** (124)

சிவனடியாராக வந்த இச் சிவபிரானுக்குச் சிறுத்தொண்டர் படைத்த பிள்ளைக்கறியானது. சட்டியிலே பாதி - சட்டியிற் பாதியாயும், அந்தச் சட்டுவத்திலே பாதி - அந்தச் சட்டியிலிருக்கும் சட்டுவத்திலே ஒரு பாதியாகவும், இட்டகலத்தில் பாதி யிட்டிருக்க - படைத்த உண்கலத்திலே இன்னொரு பாதியாகவும் இட்டிருக்கவும், திட்டமுடன் ஆடிவந்த சோணேசர் - உறுதியுடன் திருவிளையாடல் நிகழ்த்தவே வந்திருந்த அந்த சோணேசரான சிவ பெருமான்; அன்று அழைத்தபோது பிள்ளை ஓடி வந்தது எவ்வாறு உரை - அன்று அறுக்கப்பட்ட பிள்ளையை 'வருக' என்ற அழைத்தபோது, அந்தப் பிள்ளையும் ஓடி வந்தது எவ்வாறு? அதனை எமக்கும் சொல்வாயாக!

## ஊதும் குரங்கு!

கங்கைகொண்ட சோழேச்சுவரம் என்றொரு திருத்தலம் இருக்கிறது. அதன்கண் கோயில் கொண்டிருக்கும் ஈசரைச் சிறப்பித்துப் பாடுகிறார் புலவர். பாடுபவர், சோழனின் இலங்கை வெற்றியையும் சேர்த்தே பாடுகிறார்.

**காவலன் எங்கள் கனவைப்பாஞ் சோழேசன்**
**மாவலி கங்கை மணிவாரி-ஆவனலென்**
**றப்புளங்கை தோய்க்க வதில்வா ரியமுத்தைக்**
**கொப்புளமென் றூதுங் குரங்கு. (125)**

*எங்களைக் காக்கும் பெருமானும், எங்களுடைய சிறந்த சேமநிதி போன்றோனுமான சோழமன்னவன், மிக்க ஆற்றலுடைய வனாகச் சென்று வெற்றிகொண்டு, மாவலி கங்கைக் கரையிடத்தே கிடைத்த இரத்தினங்களைத் தன் கையிலே வாரி, 'ஆ! நெருப்புக் கங்குகள்!' என்று சொல்லியவனாகத் தண்ணீரினுள் தன் அழகிய கைகளைத் தோய்த்தான். கையினை மேலே அவன் எடுக்கும் போது வாரிக் கொணர்ந்த முத்துக்களைக் குரங்கானது அந்நெருப்புச் சுட்ட கொப்புளங்கள் என்று கருதி ஊதுவதாயிற்று.*

*இது கற்பனைதான், என்றாலும் இதனிடத்தே காணப் படுகின்ற நயத்தினைக் கண்டு இன்புறுக. செம்மணிகள் நெருப்புக் கங்குகளாகவும், அடுத்து வாரிய முத்துக்கள் நெருப்புச் சுட்ட கொப்புளங்களாகவும் கூறப்பட்டமை காண்க. 'மாவலி கங்கை' இலங்கையிலுள்ள பேராறு.*

### ஆலங்குடியான்

*'ஆலங்குடி' ஒரு சிவத்தலம். இந்தத் தலத்துப் பெருமானை 'ஆலங்குடியான்' என்பார்கள். அது, நஞ்சை உண்ணாதவன் என்றும் பொருள் தரும் அல்லவா! இதனை வைத்துப் பாடுகிறார் கவிஞர்.*

**ஆலங் குடியானை யாலால முண்டானை**
**ஆலங் குடியானென் றார் சொன்னார் - ஆலங்**
**குடியானே யாயிற் குவலயத்தோ ரெல்லாம்**
**மடியாரோ மண்மீதி லே. (126)**

*திருவாலங்குடியிலே திருக்கோயில் கொண்டிருக்கிற எம்பெருமானை, ஆலகால நஞ்சினை உண்ட அருளாளனை, நஞ்சினைக் குடியாதவன் என்று சொன்னவர்கள் யார்? அவன் அன்று அந்த ஆலகால விஷத்தை குடியாதிருந்தான் என்றால், உலகத்தாரெல்லாம் மண்மேல் மடிந்து வீழ்ந்திருக்க மாட்டார்களோ?*

*'ஆலங்குடி' என்ற சொல் முதலில் ஆலங்குடி என்ற ஊரினையும், 'ஆலங்குடியான்' என அடுத்து நஞ்சினை உண்ணாதவன் என்பதனையும், 'ஆலங்குடியானேயாயின்' என நஞ்சினை உண்ணா திருந்தானேயாயின் என அவன் உலகுக்கு அருளிய கருணைச் சிறப்பையும் காட்டுதல் காண்க.*

**ஊர் காணார்**

அந்த நாளிலே, சிவபெருமான் பாற்கடலிலே எழுந்த நஞ்சினை உண்டு உலகினைக் காத்தனர். அவர் நஞ்சினை உண்ணாமலிருந்தால் என்ன நிகழ்ந்திருக்கும்? இதற்கு விடை கூறுகிறார் கவிஞர்.

**கடுக்கை முடியானே காலைமுடித் தான்போற்**
**கடுக்கைமுடி யானாகிற் காணார்-கடுக்கை**
**உரலடிமீ துற்றானும் உம்பர்களும் மற்றும்**
**உரலடிமீ துற்றானும் ஊர். (127)**

கொன்றையைத் திருமுடியிலே அணிந்துள்ள சிவ பெருமானே முன் காலனை உதைத்து அழித்தான். அது போலவே, அவனே நஞ்சினையும் குடித்தான். அப்படி அவன் குடியானாகில், வேதனும், துதிக்கையுடைய வெள்ளை யானையின் மீது அமர்வோனான இந்திரனும், தேவர்களும், மற்றும் உரலிலே கட்டுண்டு மத்தினாலே அடிபட்ட திருமாலும் ஆகிய இவர்கள் யாவருமே தங்கள் தங்கள் ஊரைச் சென்று காணமுடியாதவராகி அழிந்திருப்பார்களே!

தன் அன்பனைக் காத்தாற் பொருட்டாக எமனை உதைத்த பெருமானே, மீளவும் தேவரைக் காக்கும் பொருட்டாக நஞ்சினையும் உண்டானவன் என்க. இதனால் அவனே முத்தேவரிற் சிறந்தவன் என்பதும் கூறினர்.

**ஏன் எரித்தீர்?**

திருவிடை மருதூர்ச் சிவபெருமானைக் குறித்துப் பாடியது இது. பெருமான் மன்மதனை எரித்த செயலைக் குறித்து நிந்திப்பது போல அமைந்தது.

**கண்ண னிடுங்கறியும் காட்டுசிறுத் தொண்டரன்பிற்**
**பண்ணுசிறு வன்கறியும் பற்றாதோ-தண்ணோடு**
**மட்டியையுஞ் சோலை மருதீச ரேபன்றிக்**
**குட்டியையேன் தீய்த்தீர் குறித்து? (128)**

தண்மையுடனே தேனும் பொருந்தியிருக்கும் சோலையினை யுடைய மருதூரிற் கோயில் கொண்டிருக்கும் பெருமானே! காட்டிடத்தே கண்ணப்ப நாயனார் படைத்த ஊன்கறியும், சிறுத் தொண்டர் அன்பினாலே செய்தளித்த சிறுவனுடைய கறியும் நுமக்குப் போதாதோ? நீர் பன்றிக் குட்டியையும் ஏனய்யனே சுட்டீர்?

'பன்றிக்குட்டிக் கறிக்கு ஆசைப்பட்டு நீர் ஏனய்யா சுடுகிறீர்?' என்று கேட்பது போலப் பெருமானைக் கேட்கிறார் கவிஞர். 'பன்றி' என்றது பன்றியவதாரம் எடுத்த திருமாலையும், 'பன்றிக்

குட்டி' என்றது மால் மகனான மன்மதனையும், 'தீய்த்தீர்' என்றது மன்மதனை எரித்ததையும் குறிப்பதாம்.

## பொய்யிலா மெய்யர்

திருத்துருத்திப் பெருமானைத் தரிசிக்கச் சென்ற கவிஞர் பெருமானின் ஆபரணமாகிய பாம்பினைக் குறிப்பிட்டு இவ்வாறு பாடுகிறார்.

**காலையிலும் வேலை கடையக் கயிறாகும்**
**மாலையிலும் பூமுடித்து வாழுமே-சோலைசெறி**
**செய்யிலா ரம்பயிலும் செந்துருத்தி மாநகர்வாழ்**
**பொய்யில்லா மெய்யரிடும் பூண். (129)**

சோலைகள்செறிந்துள்ள வயல்களிடத்தே முத்துக்கள் விளைகின்ற 'செந்துருத்தி' என்னும் இப்பெரிய திருநகரிடத்தே கோயில் கொண்டிருக்கும் பொய்யிலா மெய்யராகிய பெருமான் அணிந்து கொண்டிருக்கும் ஆபரணமும் ஓர் ஆபரணமாமோ? அது காற்றையே உண்ணும். பாற்கடலைக் கடைவதற்கு மத்துக் கயிறாகவும் விளங்கும். திருமால் உண்ணுகின்ற உலகத்தினை முடிமேற் சுமந்தும் அது வாழ்ந்திருக்கின்றதாகுமோ?

கால் + அயில் = காலையிலும் = காற்றை உண்ணும். வேலை - கடல். மால் + அயிலும் = மாலையிலும். பூ + முடித்து =பூ முடித்து =பூ - பூமி; முடித்து - முடி மேலாகக் கொண்டது, பொய்யிலா மெய்யர் - நித்தியமான மெய்த் திருமேனியினை உடையவர்; சிவபிரான்.

## ஏறும் விடை

திருவீழிமிழலைச் சிவபிரானைத் தொழுது நின்ற கவிஞர் பெருமானின் இடபமாக இருக்கும் திருமாலைச் சிறப்பித்துப் பாடுகிறார்.

**காலாற் படியளக்குங் கண்ணிடந்து பூசிக்கும்**
**சேலாங் கமடமாஞ் சிங்கமாம்-பாலாகும்**
**ஆழியப்பி லேதுயிலு மைவர்க்குத் தூதாகும்**
**விழியப்ப ரேறும் விடை. (130)**

திருவீழியப்பரான பெருமான் ஏறிச்செலுத்தும் விடையான திருமால், தன் திருவடிகளால் நில உலகத்தையே அளப்பர்; கண்ணைத் தோண்டி இட்டும் பூசிப்பர்; பாற்கடலான நீரிலேயும் நித்திரை செய்வர்; ஐவர்க்கு தூதாக நடக்கவும் செய்வர். மேலும் அவரே மச்சாவதாரனாகவும் கூர்மாவதாரனாகவும், நரசிங்காவ தாரனாகவும் விளங்குபவருமாவர்.

*படி - பூமி, இடத்து - தோண்டி. ஆழி + அப்பு = ஆழியப்பு - கடல்நீர். கண்ணிடந்து பூசித்தல் - திருமால் சிவனைக் கண்மலர் தூவி வழிபட்டது.*

## ஒரு மணி

*திருவரங்கநாதரை ஒரு மணியாக உவமித்துப் பாடிய சிலேடைச் செய்யுள் இது.*

**பாங்கு பெருந்திரு வைந்நூற்றிரட்டிப் பணிவிடையில்**
**தூங்கு மதிலொரு மாவேற்றமுண்டு சுரர்முனிவர்**
**ஆங்கவர் செப்பிற் கடங்காதுலக மனைத்தும்பெறும்**
**ஓங்கு மரங்கத் திருப்பெட்டகத்து ளொருமணியே. (131)**

***மணி:*** *புகழ்பெற்ற திருவரங்கத்துத் திருப்பெட்டகத்து வீற்றிருக்கின்றது ஒரு ஒப்பற்ற இரத்தினம். தன்பால் மிகவும் அழகு வாய்ந்தது அது. ஆயிரம் பணவிடை நிறையளவிலே நிறுக்கப்படும் அத்துணை பெரிதும் அது. அதற்கு மேலும் ஒரு மா அளவு மிகுந்திருப்பது எனவும் கூறலாம். தேவர் முனிவர் முதலிய பெரியோர்கள் அதனைப் புகழின் அதற்குள் அடங்காத சிறப்பும் உடையது. உலகமெல்லாம் அதற்கு ஈடாகக் கொடுப்பினும் அது அந்தத் தகுதியினை உடையதேயாகும்.*

***அரங்கநாதர்:*** *புகழாற் சிறப்புற்ற திருவரங்கத்துத் திருக்கோயிலுள்ளே விளங்குகின்றனர், ஒப்பற்ற நீலமணி போல விளங்கும் மேனியனாகிய அரங்கப் பெருமான். அவர் தன் மார்பாகிய பகுதியிடத்தே திருமகளைக் கொண்டிருப்பர். ஆயிரம் படத்தினையுடைய பாம்பணையின்மீது பள்ளி கொள்பவர். அப்படிப் பள்ளிகொள்வதிலும் ஒரு பெரிய உயர்வு உள்ளதாகும். தேவரும் முனிவரும் போற்றினாலும் அவர்களுடைய போற்றுதலையும் கடந்து நிற்பவர் அவர். உலகனைத்தையும் தன் உதரத்தே வைத்துக்காக்கின்ற ஆதிமூலமும் அவரேயாவர்.*

*இவ்வாறு, இரு பொருள்படச் சிலேடையாக அமைந்தது இச் செய்யுள்.*

## மயிலும் பாம்பும்

*திருவரங்கநாதர் பாம்பணையிலே பள்ளிகொண்டிருப்பவர். முருகப்பெருமான் மயில்வாகனத்திலே ஊர்ந்து வருபவன். அவன் திருமாலிற்கு மருமகன் முறையினனும் ஆவான். அவன் தன் மாமனைப் பார்க்கச் செல்லுகிறான். அப்போது நிகழ்வதாகக் கற்பித்துப் பாடியது இது.*

**திரண்டிமை யோர் தொழும்**
**தென்னரங் கேசர்முன் செங்கைகளா**
**றிரண்டுடை யோனும்**
**எதிர்சென்ற தாலெதிர்ந் தார்தமைக்கண்**
**டருண்டெழு மைவார்க்குத்**
**தேரூர் பவன்கொள் அணைவெருண்டு**
**புரண்டொரு புற்றைக்**
**கடந்தொரு புற்றிற் புகுந்ததுவே. (132)**

*கூட்டங் கூட்டமாகத் தேவர்கள் திரண்டு சென்று போற்றுகின்ற சிறப்புடையவர் அழகிய திருவரங்கப் பெருமான். அவருடைய திருமுன்பாகச் செங்கைகள் பன்னிரண்டு உடையோனாகிய முருகப்பெருமானும் எதிரிட்டுச் சென்றனன். அங்ஙனம் குமரப்பெருமான் சென்றதனாலே பகைவரைக் கண்டு அஞ்சி எழுந்த பஞ்சபாண்டவர்க்குத் தேரூர்ந்தவனாகிய திருமால் பள்ளிகொள்ளுகின்ற பாயலாகிய பாம்பு, எதிர்ப்பட்ட முருகனைக் கண்டு, அவன் வாகனமாகிய மயிலுக்குப் பயந்து, இருந்த இடத்தை விட்டுப் புரண்டு, ஒரு புற்றைக் கடந்து, மற்றொரு புற்றினிற் சென்று புகுந்து ஒளிந்துகொண்டதே!*

*குறிப்பு - மாயவனை விட்டுவிட்டுத் தனக்குப் பாதுகாவலான இடத்தைத் தேடியதாகச் சிவபெருமானின் திருச் சடையினிற் சென்று அடைந்தது என்பது கருத்து.*

**சங்கநாதம்**

*அழகர்கோயில் மதுரைக்கு அருகே இருப்பது. அங்கே கோயில் கொண்டிருக்கும் திருமாலைக் குறித்துப் பாடிய செய்யுள் இது. பெருமான் பாரதப் போர்க்களத்திலே பாஞ்சசன்னியத்தை முழக்கியதனை வியந்ததும் இது.*

**சதுரங்கர் சங்கத் தழதர் செங்கைச் சங்கை**
**அதரமிசை வைத்திலரே யாயின்-முதலை**
**வருங்களத்தின் முண்டகக்கை வைப்பரன் றேயன்று**
**பொருங்களத்தில் நூற்றுவர்முன் போய். (133)**

*சதுரப்பாட்டினை உடையதான திருவரங்கத்தே இருப்பவரும், சங்கினைக் கைக்கொண்டோருமான அழகராகிய பெருமான், தன் செங்கையிலே இருந்ததான சங்கினை எடுத்து உதட்டிடத்தே வைத்து முழக்காதிருந்தனர் என்றால், அன்று போரிடற்காகக் கூடிய குருசேத்திரமாகிய களத்திலே, நூற்றுவர்களான துரியோதனாதியருக்கு முன்பாக ஓடிப் போய், முதல்வரான ஐவர்களும் களத்திலேயே தலையில் தம்முடைய கைகளைக் குவித்து வைத்தவாறு பணிந்து நிற்பார்கள் அல்லவோ? அவர்கள் தோல்வியுற்றிருப்பார்கள் என்பது கருத்து.*

இதனை திருவரங்கநாதரைக் குறித்ததாகவும் கொள்வர், போரிற் கலந்து படையெடேன் என்ற பெருமானே வெற்றிக்கு காரணனாயின் என்று நிந்தித்ததுபோல அவனைக் புகழ்ந்தவாறு காண்க.

## வரதரின் யானை வாகனம்

காஞ்சியிலே, வரதராசப் பெருமான் யானை வாகனத்தே திருவீதி உலா வருகிறார். அந்தக் காட்சியை இப்படி வருணிக்கிறார் காளமேகம்.

ஒருமா என்பது ஒன்றில் இருபதிலொரு பங்கு. அதனை அமைத்து அழகாகச் செய்யுள் இயலுகின்றது.

**எட்டொருமா எண்காணி மீதே இருந்தகலைப்**
**பட்டொருமா நான்மாவிற் பாய்ந்ததே-சிட்டர்தொழும்**
**தேவாதி தேவன் திருவத்தி யூர்வரதன்**
**மாவேறி வீதிவரக் கண்டு.** (134)

அவன் மாவேறி வீதியிலே வந்தான். அதைக் கண்டு ஒருமா நான்மாவிற் பாய்ந்தது என்று சொல்லுகிறார். இதன் பொருள்.

எட்டு ஒருமா எண் காணி மீதே இருந்த - (எட்டு ஒருமா+இரண்டுமா (எண் காணி) = பத்துமா - அரை) ஒரு நங்கையின் அரையின் மீது இருந்த, கவலைப்பட்டு - ஆடையாகிய பட்டானது, சிட்டர் தொழும் தேவாதிதேவன் திரு அத்தியூர் வரதன் - தூய்மையான ஒழுக்கமுடைய பெரியார்கள் தொழுது போற்றும் தேவர்களுக்குள் ஆதிதேவனும் திரு அத்திகிரி என்னுமிடத்தே வீற்றிருப்போனுமான வரதராசப் பெருமான் மாவேறி வீதி வரக்கண்டு யானையாகிய விலங்கின் மேலாக அமர்ந்து திருவீதியிலே உலாவரக் கண்டு, ஒருமா, நான்மாவிற் பாய்ந்ததே - (ஒருமா - நான்மா = ஐந்துமா - காலில்) அரையி னின்றும் நழுவிக் காலில் வீழ்ந்ததே! பெருமான் திருவீதி உலாவரக் கண்டு அவன் அழகிலே மயங்கிய ஒரு நங்கை தன் இடையிற் பட்டுத் தளர்ந்து சோரக் காதல் மயக்கத்தினளாகி நின்றாள் என்பது கருத்து.

## மண்ணை உண்டார்

கண்ணபுரப் பெருமானைத் தரிசிக்கச் சென்றிருந்தார் காளமேகப் புலவர். அப்போது மாயனார் மண்ணை உண்ட செய்தியைக் குறித்து இப்படிப் பாடுகின்றார்.

**கண்ணபுரங் கோயிற் கதவடைத்துத் தாழ்போட்டார்**
**மண்ணையுண்டார் வெண்ணையுண்ட மாயனார் - எண்ணும்**
**சிரக்கப் பரையேந்திச் செங்காட்டி லீசர்**
**இரக்கப் புறப்பட்டா ரென்று.** (135)

'திருச்செங்கோட்டிலே கோயில் கொண்டிருக்கும் ஈசனாகிய சிவபெருமான், மதிக்கத்தக்க தலையோடாகிய பிட்சாபாத்திரத்தை ஏந்தியவராகப் பிச்சை ஏற்று உண்பதற்குப் புறப்பட்டுவிட்டார்' என்று அறிந்த கண்ணபுரத்துக் கோயிலார்கள், திருமாலும் சிவனைத் தொடர்ந்து போய்விடக் கூடாதே என்று பயந்து, திருக்கோயிற் கதவை அடைத்துத் தாழும் இட்டுவிட்டார்கள். அதனாலே, வெண்ணையுண்ட மாயனார், அது கிடையாமல் மண்ணைத் தின்பவரானார்!

தாம் தரிசிக்கச் சென்றபோது திருக்கோயிற் கதவினைக் கோயிலார் அடைத்துத் தாழிடக் கண்டவர், இப்படிப் பாடி அவர்கள் செயலைப் பழித்தனர் என்பர். மண - பூமியும் ஆம்; அது பெருமான் தம் திருவுதரத்தே உலகினை அடக்கிக் காப்பதனைக் குறித்தாம். சிவன் உணவேதும் கிடையாமல், பிச்சை எடுக்கப் போய்விட்டான் எனப் பிட்சாடன் மூர்த்தத்தையும், வெண்ணையுண்ட மாயன் மண்ணையுண்டான் எனத் திருமாலின் சிறப்பையும் பாடிய நயத்தினை அறிந்து இன்புறுக.

## பெருமாள் பிறந்த கதை

திருக்கண்ணபுரம் ஒரு வைணவத் தலம். அங்கே கோயில் கொண்டிருக்கும் மூர்த்தியின் பெயர் சவுரி நாராயணன். அவர் திருநட்சத்திரம் அத்தம் என்பர். அதனைக் குறித்துப் பாடியது இது.

**உத்திரத்துக் கோர்நா ளுரோகணிக்குப் பத்தாநாள்**
**சித்திரைக்கு நேரே சிறந்தநாள் - எத்திசையும்**
**காராரும் பூஞ்சோலைக் கண்ணபுரம் வாழ்சவுரி**
**நாரா யணன் பிறந்த நாள்.** (136)

எத்திசையிலும் மேகங்கள் படிகின்ற பூஞ்சோலைகளையுடைய திருக்கண்ணபுரத்திலே கோயில்கொண்டிருக்கும் சவுரி நாராயணரின் பிறந்த நாள் -

உத்திரத்துக்கு அடுத்ததான நட்சத்திரமும் உரோணிக்குப் பத்தாவது நட்சத்திரமும், சித்திரைக்கு நேரே முற்பட்ட நட்சத்திரமும் ஆகிய சிறப்புடைய அத்த நட்சத்திரம் என்று அறிக.

## உன்னிலும் அதிகம்

காளமேகம் திருக் கண்ணபுரத்தில் இருந்தபோது நடந்த நிகழ்ச்சி இது. தெருவில் செல்லும்போது மழை பெய்யத் தொடங்கிற்று. அருகிலிருந்த பெருமாள் கோயிலில் சற்று ஒதுங்கிக் கொள்ள விரைகிறார் காளமேகம். அந்தக் கோயில் நம்பியாரோ இவரை உள்ளேவிட விரும்பவில்லை. கதவை அடைத்துத் தாளிடுகிறார். அப்போது, 'பெருமாளே! உன்னிலுமோ நான் அதிகம்' என்று சொல்வது போலப் பாடியது இது.

**கண்ணபுர மாலே கடவுளிலும் நீயதிகம்**
**உன்னிலுமோ யானதிக மொன்றுகேள் - முன்னமே**
**உன்பிறப்போ பத்தாம் உயர்சிவனுக் கொன்றுமில்லை**
**என்பிறப்பெண் ணத்தொலையா தே. (137)**

*"கண்ணபுரப் பெருமானே! கடவுளாகிய சிவபெருமானைக் காட்டினும் நீ பெரியவன் தான், உன்னைக் காட்டிலுமோ யானே பெரியவன். ஒரு செய்தி மட்டும் கேட்பாயாக: உன்னுடைய பிறப்போ முன்னாளிலே பத்து மட்டுமே யாகும். உயர்வுடைய சிவனுக்குப் பிறப்பு ஒன்றுமே கிடையாது. ஆனால் என் பிறப்பு எவ்வளவு தெரியுமா? எண்ணத் தொலையாத அளவினது! இதையாவது அறிந்து கொள்க."*

*'காளமேகம் நுழைந்தால் பெருமாள் கோயிலின் புனிதம் கெட்டுவிடும்' என்று கருதிக் கதவடைத்த நம்பியாரை வெட்கமுறச் செய்வதற்குக் கவிஞர் இப்படிப் பாடினார் என்று கொள்ள வேண்டும்.*

## புறப்பட்ட வேடிக்கை

*சிவபெருமானின் நகர்வலத்தைக் கண்ட காளமேகம் அதனை நிந்திப்பதுபோல இப்படிப் போற்றுகின்றார்.*

**வாணியன் பாட வண்ணான் சுமக்க வடுகன்செட்டி**
**சேணியன் போற்றக் கடற்பள்ளி முன்றொழத் தீங்கரும்பைக்**
**கோணியன் வாழ்த்தக் கருமான் றுகிறனைக் கொண்டணிந்த**
**வேணிய னானவன் தட்டான் புறப்பட்ட வேடிக்கையே! (138)**

*"பிரமன் மறை முழக்கும் செய்து வரவும், வெண்ணிற எருதான நந்தி சுமந்துவரவும், வயிரவனும் முருகனும் இந்திரனும் போற்றி வரவும், திருப்பாற் கடலில் பள்ளி கொள்வோனான திருமால் தொழவும், இனிய கரும்பினையே வில்லாக வளைத்துக் கொள்வோனான மன்மதன் வாழ்த்து உரைக்கவும், யானைத் தோலை உரித்துக் கைக்கொண்டு அணிந்த சடாமுடியினை உடையவனும், எவருக்கும் காட்சிக்குத் தட்டுப்படாதவனுமான சிவபிரான் வெளியே உலாவரப் புறப்பட்டது ஒரு வேடிக்கையே."*

*பாட்டை நேராகவே 'வாணியன் பாட' என்றாற் போலப் பொருள்கொண்டால் நிந்தையா யிருப்பதும், நுட்பமாகக் கருதினால் பொருள் புலனாவதும் காண்க.*

*வாணியன் - கலை வாணியை உடையவன்; பிரமன். வண்ணான் - வெண்ணமுள்ள ஆன்; நந்தி; வடுகன் - வயிரவன் செட்டி - முருகன்; கடற் பள்ளி - கடலிற்பள்ளி கொள்ளுகிற திருமால், கருமான் - யானை; தட்டான் - காட்சிக்குத் தட்டுப் படாதவன்.*

## கனலேறி வந்தது

*சிவபிரான் இடபாரூடராகப் பவனி வந்து கொண்டிருக் கின்றார். அந்தக் காட்சியிலே தம் உள்ளம் களிகொள்ளக் கவிஞர் இப்படிப் போற்றுகின்றனர்.*

**கரியொன்று பொன்மிகும் பையேறக்**
**கற்றவர் சூழ்ந்து தொழ**
**எரியொன்று செல்வன் றுலாத்தினில்**
**ஏற விருண்ட மஞ்சு**
**சொரிகின்ற நாகமின் சோற்றினி**
**லேறித் தொடர்ந்து வர**
**நரியொன்று சொந்தக் கனலேறி**
**வந்தது நங்களத் தே.** (139)

*"யானைமுகனாகிய பெருமான் பெருச்சாளி வாகனத்தே ஏறியவனாக உடன் வந்து கொண்டிருக்கவும், கற்றவரான சான்றோர் சூழ்ந்து தொழுதுகொண்டே வரவும், தீ நிறமான செந்நிறத்தைக் கொண்ட செல்வனாகிய முருகப் பெருமா னானவன் துலாமுழுக்குக் கட்டமாகிய மாயூரம் என்னும் மயிலின் மேலாக ஏறிவந்து கொண்டிருக்கவும், கருமையான மழை மேகங்கள் மழை சொரிகின்ற இமயத்தின் திருமகளான உமையம்மை அன்ன வாகனத்திலே ஏறிப் பின் தொடர்ந்து வரவும், சம்புவாகிய ஒரு தனிக்கடவுள் தமக்குச் சொந்தமான நந்தியின் மேலே ஏறியவராக நம்முடைய இடத்திலேயே வந்தருளு கின்றனரே! என்னே இதன் கண்கொள்ளாக் காட்சி!*

*மிகும்பை - பெருச்சாளி. நாகம் - மலை, இமயம். சோறு - அன்னம். சொந்தக் கனல் - நம்+தீ+நந்தீ என்று கொள்ள வேண்டும்.*

## கொன்ற பழி போமோ?

*திருச்செங்கோடு ஒரு சிவத்தலம் அங்குச் சென்று சிவபெருமானைத் தொழுகிறார் காளமேகம். "நாட்டிலிருந்து ஓடிவந்து, இப்படி நீர் காட்டிலே தங்கியிருந்தாலும். நீர் முன்னர் செய்த கொலைப் பாவங்கள் உம்மை விட்டுப் போய்விடுமோ?" என்று கேட்கிறார். காலனை உதைத்தது; காமனை எரித்தது; சிறுத்தொண்டனிட்ட அமுதினை உண்டது ஆகிய திருவிளை யாடல்களை எடுத்துக்காட்டித் துதிக்கிறார்.*

**காலனையும் காமனையும் காட்டுசிறுத் தொண்டர்தரு**
**பாலனையும் கொன்ற பழிபோமோ - *சீலமுடன்***
**நாட்டிலே வீற்றிருந்த நாதரே நீர்திருச்செங்**
**காட்டிலே வீற்றிருந்தக் கால்.** (140)

"சீலமுடன் நாட்டிலே வீற்றிருந்த நாதரே - ஒழுக்க முடையவர்போல நாட்டினிடத்தே பல தலங்களிலும் கோயில் கொண்டிருந்த தலைவரே! நீர் திருச்செங்காட்டிலே வீற்றிருந்தக் கால் - நீர் திருசெங்காட்டிலே வந்து தங்கியிருந்தவிடத்தும், காலனையும் எமனையும், காமனையும் - மன்மதனையும், காட்டு சிறுத்தொண்டர் தரு பாலனையும் - பக்திக்கு எடுத்துக் காட்டாகத் திகழ்ந்த சிறுத்தொண்டர் பெற்றெடுத்த சீராளன் என்ற சிறுவனையும், கொன்ற பழி போமோ - கொலை செய்ததனால் ஏற்பட்ட பழிச் சொற்கள் மறைந்து போய்விடுமோ?

இத் தலத்திலே வீற்றிருக்கும் சுவாமியின் பெயர் உத்திராபதி ஈசுவரர்.

## எங்கே இருந்தான் சிவன்?

ஸ்ரீரங்கத்தார்கள் சிவனைக் குறித்துக் கேலி பேச நினைத்தனர். புதிதாகச் சிவமதத்தைச் சார்ந்தவரான காள மேகத்தை நோக்கி, 'திருமால் உலகத்தைக் கவளமாக உண்டபோது, உங்கள் சிவன் எங்கே இருந்தார்?' எனக் கேட்டனர். அப்போது காளமேகம் சொன்னது இது.

**அருந்தினா ணண்டமெலா மன்றுமா லீசன்**
**இருந்தபடி யேதென் றியம்பிற்-பொருந்தி**
**பருவங்களம் யானைகொளப் பாகனதன் மீதே**
**இருந்தபடி ஈசனிருந் தான். (141)**

"திருமால் அந்நாளிலே உலகம் முழுவதையுமே விழுங்கினான். அப்பொழுது ஈசன் இருந்தபடி எவ்வாறு?" என்று சொல்வதானால், யானையானது பெரிதான கவளத்தை எடுத்து உட்கொள்ளுகிறபோது, அதனை இயக்கும் பாகன் அதன் மீதிலே இருந்த நிலையைப் போலச் சிவபெருமானும் திருமாலின் மேலாகவே வீற்றிருந்தனன் என்று அறிக.

அண்டம் - உலகம்; உலகத்து வடிவைக் குறித்தது. ஈசன் - சிவபெருமான். பொருந்தி - மனம் விரும்பி. கவளம் - சோற்றுத் திரளை. திருமாலை யானையாகவும், சிவபிரானை அவனைச் செலுத்தும் பாகனாகவும் கூறினார்.

## கருவைப் பிரான்

திருக்கருவை நல்லூரிலே, களாமரத்தினடியிலே கோயில் கொண்டிருக்கும் பெருமானைப் போற்றுகிறார் கவிஞர். களாமரம் என்பது களவு என்றும் சொல்லப்படுவதாகும் இது, களவாடுதல் என்ற பொருளையும் தரும். இப்படி அமைந்த இருபொரு ளமைதியை வைத்துப் பாடுகிறார் கவிஞர்.

**வெண்ணெய் திருடியுண்ட வேணியர னாரிருக்கக்**
**கண்ணன்மேல் வைத்த களவேது-பெண்ணைத்**
**தலையிற் சுமந்தான்மால் சர்ப்பத்தி லேறி**
**அலையிற் றுயினறா னரன்.** (142)

வெண்ணெயைத் திருடித்தின்ற கண்ணபெருமான் இருக்கவும், சடையணிந்த சிவபெருமானின்மேல் வைத்த களவு எதன் பொருட்டாகவோ? அரன் கங்கையாகிய ஒரு பெண்ணைத் தான் தன் தலையிற் சுமந்தானே அல்லாமல் களவினைச் சுமக்க வில்லையே? ஆனால், திருமாலோ களவின் விளைவுக்கு அஞ்சிப் பாம்பின்மேல் ஏறிக்கொண்டு கடலிடத்தே சென்றல்லவோ உறங்கலாயினான்?

'மொழி மாற்று' என்னும் பாவகை இது. சிவனுக்குச் சொல்வதை மாலுக்கும், மாலுக்குச் சொலவதைச் சிவனுக்குமாக மாற்றியமைத்துப் பொருள்கொள்ளல் வேண்டும்.

## ஆண்டானும் தாதனும்

ஸ்ரீரங்கத்து வைணவரும், திருவானைக்காக் கோயிற் சைவர்களும் அடிக்கடி சண்டையிட்டுக் கொண்டே இருந்தனர். சிவனடியார்களை 'ஆண்டான்', அதாவது பெருமானால் ஆட்கொள்ளப் பட்டவன் என்றும், திருமாலடியார்களைத் 'தாதர்கள்' எனவும் சொல்வார்கள். தாதன் - அடியவன். இந்தச் சொற்கள் ஆண்டான் அடிமை எனவும் வேற்றுப் பொருள் தருவன. அதனைக் குறித்து 'ஆண்டான் அடியவன் என்றால் அடிக்கடி சண்டை நிகழாதிருக்குமோ!' எனக் கேட்பது போலச் சீரங்கத்தாரைத் தாதர்கள் எனப் பழிக்கிறார் கவிஞர்.

**சீரங்கத் தாரும் திருவானைக் காவாரும்**
**போரங்க மாகப் பொருவதேன் - ஓரங்கள்**
**வேண்டா மிதென்ன விபரந் தெரியாதோ**
**ஆண்டானும் தாதனுமா னால்.** (143)

"சீரங்கத்து வைணவரும் திருவானைக்காச் சைவர்களும் போர்க்களத்தே போல வாதிட்டுத் தொடர்ந்து தமக்குள் சண்டை செய்வது ஏனோ? இவ்வாறு கேட்டபின் பட்சபாதமான எதுவும் சொல்லுதல் வேண்டாம். இது என்ன ஓர் அதிசயமோ? இதன் விபரமும் நமக்குத் தெரியாதோ? ஆண்டானும் தாதனும் என்ற நிலையினர் அவர்களானால் அவர்கள் சண்டையிட மாட்டார்களோ?

ஆண்டான் - இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற சிவனடி யான்! தாதன் - திருமால் அடியவன், இதனால் சிவனடியார்க்குத் தாதர்கள் அடியவர்கள் என்பதும் கூறினர்.

## பிறவாத ஆம்பல்

*'திருவலஞ்சுழி' என்னும் திருவூரிலேயுள்ள விநாயகப் பெருமானைக் குறித்துக் கவிராயர் சொல்லிய சுவையான செய்யுள் இது.*

**பறவாத தும்பி கருகாத வெங்கரி பண்புரண்டே**
**இறுகாத தந்தி உருகாத மாதங்க மிந்துநுதல்**
**நிறவாத சிந்துரம் பூசாக் களபம் நெடுசுனையில்**
**பிறவாத வாம்பல் வலஞ்சுழிக் கேவரப் பெற்றனனே!(144)**

*தும்பி, கரி, தந்தி, மாதங்கம், சிந்துரம், களபம், ஆம்பல் என்பனவெல்லாம் வெவ்வேற பொருளைக் குறிப்பனவேனும், அவை யானையின், பெயருமாகும், அதனால் அவற்றைக் குறிப் பிடுவது போல யானை முகனைக் குறிப்பிட்டுப் போற்றுகின்றனர்.*

*பறத்தலைச் செய்யாத தும்பி (வண்டு), கருகிப் போதலைச் செய்யாத வெம்மையான கரி (அடுப்புக்கரி), பண்முறை பிறழ்ந்து கட்டமையாத தந்தி (வீணையின்) தந்தி). அனலிடத்தே உருகாத மாதங்கம் (பெரிதான தங்கக் கட்டி), பிறையனைய நெற்றியிடத்தே நிறங்காட்டாத சிந்துரம் (பொட்டு), பூசுதற்குப் பயன்படாத களபம் (களபம் - சாந்து), நெடிய சுனைநீரினிடத்தே தோன்றாத ஆம்பல் (ஆம்பற்பூ). ஆகிய விநாயகப் பெருமான் திருவலஞ் சுழியினிடத்தே வந்து அருள் செய்தலைப் பெற்றேன் யான்.*

## ஆறுமுகன் பெருமை

*ஒரு முருகன் தலத்திலே, பெருமான் பவனி வருகின்றான். அந்த ஆடம்பரத்தைக் கண்டார் காளமேகம். அப்பன் பிச்சை எடுத்துச் சீவிக்கிறவன்; ஆத்தாள் மலை நீலி! மாமன் உரியிலே வெண்ணை திருடி உண்டவன்; அண்ணன் சப்பைக் காலன்; பெருவயிறன், குடும்ப நிலைமை இப்படிப்பட்ட அருமையுடன் இருக்கிறது இவனுக்கு" என்று நிந்திப்பது போலப் போற்றுகிறார் கவிஞர். 'முருகன் பெருமையைப் பாடுக' என்று கேட்கப் பாடியதாகவும் கொள்க.*

**அப்ப னிரந்துண்ணி ஆத்தாள் மலைநீலி**
**ஒப்பரிய மாமன் உறிதிருடி-சப்பைக்கால்**
**அண்ணன் பெருவயிறன் ஆறுமுகத் தானுக்கிங்**
**கெண்ணும் பெருமை இவை. (145)**

*ஆறுமுகத்தானுக்கு இங்கு எண்ணும் பெருமை ஆறுமுகத்தினனான முருகனுக்கு இவ்விடத்தே நாம் கருதக் கூடிய பெருமைகள் யாவை எனில்...*

*அப்பன் இரந்து உண்ணி - பெற்ற தகப்பனான சிவபெருமானோ பிச்சை ஏற்று உண்ணும் இயல்பினன்; ஆத்தாள்*

*மலை நீலி - பெற்ற தாயோ மலையிடத்துப் பிறந்த கொடுமைக்காரி (நீலவண்ணம் உடையவள்.) - ஒப்பரிய மாமன் உறி திருடி; ஒப்பிடுவதற்கும் அரியவனான தாய் மாமனோ உறியிலே வெண்ணெய் திருடுபவன்; சப்பைக்கால் அண்ணன் பெருவயிறன் சப்பைக் காலனான இவன் அண்ணனோ (மகோதரம் என்னும் பெரியவயிறாகத் தோன்றும் நோயினை உடையவன்) பெரிய வயிற்றினை உடையவன், இவை - எனும் இவைதாம்.*

**காணிக்கு வந்திருந்தான்**

*ஸ்ரீரங்கத்துக் கோயிலார் சிவகுமாரனான பிள்ளை யாருக்குத் திருநாமத்தை இட்டுவிட்டனர். அத்துடன் விஷ்ணுவே பரமன் எனவும் கூறிக்கொண்டனர். அப்போது கவிஞர் பாடியது இது.*

**தந்தை பிறந்திறவாத் தன்மையினால் தன்மாமன்**
**வந்து பிறந்திறக்கும் வன்மையினால் - முந்நொருநாள்**
**வீணிக்கு வேளை எரித்தான் மகன் மாமன்**
**காணிக்கு வந்திருந்தான் காண். (146)**

*“முன்ஒரு காலத்தே வீணான கருவங்கொண்டு சென்ற மன்மதனை எரித்த சிவபெருமானது மகனான விநாயகன். தன் தந்தை இறப்பும் பிறப்பும் அற்றவரான தன்மையுடைமையால், தன் மாமனாகிய திருமால் பிறந்து இறக்கும் வள்ளன்மை உடையவராயிருத்ததலினால், மாமனார் சொத்துக்கு வாரீசாக வந்து இருந்தனன்” என்று அறிவீராக.*

*சிவபிரான் இறவாத பெருமான். அவர்க்குப் பின் அவருடைய சொத்துக்களுக்கு வாரிசாக வரச்சந்தர்ப்பமே கிடையாது. மாமன் மகனான மதனனும் சிவனால் எரிக்கப்பட்டு விட்டான். அதனால், மாமன் இறந்ததும் அந்தச் சொத்துக்கு வாரிசாகப் பிள்ளையார் வந்திருக்கிறார், இப்படி ஏளனம் செய்கிறார் கவிஞர். காணி - நிலங் கரைகள். இச்செய்யுள்.*

**தந்தை பிறந்திறவாத் தன்மையாற் றன்மாம**
**னந்தம் பிறந்திருக்கும் ஆதலாற்-முந்துமளி**
**நாணிக்கு வில்வேளு மாய்தலால் நன்மாமன்**
**காணிக்கு வந்திருந்தான் காண்’. (147)**

*எனவும் வழங்கும் (த.நா, சரிதை203) ‘தன் தந்தையோ பிறந்து இறவாது நிலையிருக்கும் தன்மையன். தன் மாமனான திருமாலோ பன்முறையும் பிறந்து இறக்கும் தன்மையன். அவன் மகனான, வண்டை நாணாகவுடைய கரும்பு வில்லேந்தியான மன்மதனும் செத்துவிட்டான். ஆதலால், விநாயகப் பெருமான், தன் தாய்மாமனின் காணிக்கு உரிமை கொண்டாட வந்திருக்கிறார். இதனைக் காண்பீராக என்பது பொருள்.*

### நஞ்சு உண்ணி

*நஞ்சு உண்டவன் சிவபிரான். அதனைக் குறித்து 'நஞ்சுணி!' என இடக்கராகக் குறிப்பிட்டுப் பாடுமாறு சிலர் கேட்கக் காளமேகம் பாடுகிறார்.*

**சிரித்துப் புரமெரித்தான் சிந்துரத்தைப் பற்றி**
**உரித்துதிரம் பாய வுடுத்தான்-வருத்தமுடன்**
**வாடுமடி யாருடனே வானவரும் தானவரும்**
**ஓடுபயந் தீர்த்தநஞ் சுணி.** (147)

*உயிரே அழிந்து போமோ என்ற வேதனையுடையவராக வாட்டமுறும் அடியார்களுடனே தேவர்களும் அசுரர்களும் அச்சமுற்று ஓடிக்கொண்டிருந்தபோது, அந்த அச்சத்தைத் தீர்த்து நஞ்சை உண்டவன் சிவபெருமான். மேலும், அவன் தன் சிரிப்பினாலே திரிபுரக் கோட்டைகளை எரித்துச் சாம்பலாக்கிய வனும், தாருக வனந்து முனிவர்கள் ஏவிய யானையைப் பற்றி அதன் தோலை உரித்து, உதிரம்கொட்டிக் கொண்டிருக்க இடையிலே உடுத்துக் கொண்டவனும் ஆவான்.*

*நஞ்சை உண்டது ஒன்றுமட்டுமன்று; சிரித்துப் புரமெரித் ததும், சிந்துரத்தை உரித்ததும் அவனே என்று போற்றுகின்றார் அவர்.*

### நெய்யிலே கையிட்டான்

*தில்லை பொன்னம்பலத்திலே சிவபெருமான் நடனமாடு கின்றார். அவர் தம் கையிலே மழுவாயுதத்தை ஏந்துபவர். தில்லைக் கோவிந்தராயர் வெண்ணெய் திருடியுண்ட மாயன்; அவன் ஆயனும் ஆகியவன். இவற்றை வைத்துச் சுவையாகப் பாடுகின்றார் கவிஞர்.*

**தில்லைக்கா வுக்குட் சிதம்பரனா ராட்டையெடுத்**
**தில்லைக்கா ணென்றுமழு வேந்தினார்-சொல்லக்கேள்**
**மெய்யிலே கண்டேன்யான் மீண்டுங்கே ளாயனுமே**
**நெய்யிலே கையிட்டா னே.** (148)

*"தில்லைமரக் காட்டிலுள்ள - சிதம்பரத்தே கோயில் கொண்டிருக்கும் பெருமான், ஆட்டை எடுத்தனர் (திருநடனம் செய்தனர்) யான் எடுக்கவில்லை பாரென்று தன் செயலையும் மறைத்துக்கொண்டு மழுவேந்திப் போரிடவும் அவர் தயாரா யிருந்தனர். சொல்வதனை இன்னமுங் கேள்; அவருடைய உடலிலேயே அவர் ஆடெடுத்திருந்ததன் தன்மையினை யானே நேரிற் கண்டேன் மீளவும் கேள்; ஆயனும் நெய்யிலே கையிட்டுச் சத்தியமும் செய்துள்ளனன்."*

பெருமானின் நடனத்தை ஆடு திருடியதாகவும், அதனைப்பற்றிக் கேட்கப் போக ஆடுதிருடியதும் அல்லாமல் மழுவேந்திச் சண்டைக்கு வந்ததாகவும் குற்றஞ்சுமத்துகிறார். ஆடெடுத்த மெய்ப்பாட்டினைத் தாமே அவன் திருமேனியிற் கண்டதாகவும், மேலும் ஆடு மேய்ப்போனாகிய ஆயன் நெய்யிலே கையிட்டுச் சத்தியம் செய்ததாகவும் சொல்லுகிறார். இப்படி நிந்திப்பது போலக் கூத்தனின் நடனத்தை வியந்து போற்றவும் செய்கிறார் கவிஞர் காளமேகம்.

## மாடு எடுத்துப் போவதேன்?

ஆடு திருடிய கள்வன் அவன், அவனை ஒரு மாடு எடுத்துக் கொண்டு போகிறதே? இது என்ன மாயமோ? சிதம்பரத்துத் தில்லை மூவாயிரவரின் கண் முன்னேயே இப்படியும் நடக்குமோ? இது அநியாயம் அல்லவோ?" கவிஞர் இப்படிக் கவலையோடு கேட்கின்றார்.

**ஆடெடுத்த தில்லை அனவரவத் தாண்டவனை**
**மாடெடுத்துப் போவதென்ன மாயமோ-நீடுமுயர்**
**வானத்தார் போற்றுகின்ற வண்மைச் சிதம்பரத்துத்**
**தானதார் பார்த்திருக்கத் தான். (149)**

'ஆட்டினை எடுத்த அந்தத் தில்லைநகரத்து அன வரதத் தாண்டவன் என்பவனை ஒரு மாடு எடுத்துப் போவதுதான் என்ன மாயமோ? மிகவுயர்ந்த வானத்தவரும் போற்றுகின்ற வண்மை யினை உடைய சிதம்பரத்துத் தானத்தார்கள் பார்த்திருக்கவும் இப்படி நடக்கிறதே?'

பெருமான் ரிஷபாரூடராகப் பவனி வருவதை இப்படிப் போற்றுகின்றார் கவிஞர். அனவரதத் தாண்டவன் - நாள் தவறாது நடனம் செய்பவன். மாடு - நந்தீசர்.

## வேணிப் பிரான்!

பெருமான் மன்மதனையும் முப்புரத்தையும் எரித்தான். எனினும், அவன் உடலில் ஒருபாதி உமையாளுடையதல்லவா? அவன் செய்ததெல்லாம் தன்பத்தினியின் துணையினைக் கொண்டேதான் அல்லவோ? என்கிறார் கவிஞர். சிவன் செயலில் சக்திக்கும் சரிபாதி பங்கு உண்டென்பது உண்மைதானே!

**சித்தசனை முப்புரத்தைச் செந்தழலாய் வீழவொரு**
**பத்தினியைக் கொண்டெரியப் பண்ணினான்-நித்தம்**
**மறையோத வீற்றிருக்கும் மண்டலமென் றில்லைப்**
**பிறைசூடும் வேணிப் பிரான். (150)**

"தில்லை நகரத்திலே வீற்றிருப்பவனும், இளம்பிறை சூடியவனும், செஞ்சடையினை உடையவனுமாகிய பெருமான்

*மன்மதனையும் திரிபுரத்தையும் அவை செந்தழலால் எரிந்து விடும்படியாக ஒப்பற்ற தன் பத்தினியைத் துணைக்கொண்டே செய்தனன். அப்படிப்பட்டவனுக்கு நாளும் மறையோத வீற்றிருக்கின்ற சிறப்புத்தான் எதற்காகவோ? அது வேண்டாததே என்றதாம்."*

*அவளின் துணையைக் கொண்டே அவன் அந்தச் செயல்களைச் செய்திருக்க, அவளை போற்றாமல் அவனை மட்டுமே போற்றுவது முறையன்று; ஆதலின் போற்றுதல் அவனுக்கு மட்டும் எதற்காகவோ? துணைநின்ற அவளையே போற்றுவோம் நாம் என்கிறார் கவிஞர்.*

## இதுவோ படைத்திறன்?

*சிவபிரான், திரிபுரக் கோட்டைகளைச் சிரித்தே எரித்த சிறப்பினை உடையவன். அதனை நிந்திப்பது போலக் கவிஞர் இப்படிப் போற்றுகிறார்.*

**தில்லைக்குள் வாழும் சிதம்பர**
**ரேயும்மைச் செப்ப வென்றால்**
**அல்லற் பிழைப்பே பிழைத்திருந்**
**தீர்முப்பு ராதிகளை**
**வில்லைத் தொடுத்தெய்ய மாட்டாம**
**லேயந்த வேளைதனில்**
**பல்லைத் திறந்துவிட் டீரிது**
**வோநும் படைத் திறமே?** (151)

*"தில்லை நகரத்தினுள்ளே வாழுகின்ற சிதம்பரரே? உம்மைப் பற்றிச் சொல்வதென்றால் நீர் துயரமானப் பிழைப்பினையே கொண்டிருக்கின்றவர் ஆகின்றீர்! முப்புராதிகளான பகைவர்களை வில்லைத் தொடுத்து எய்து வீரனைப் போல வெற்றிக் கொள்வதற்கு முடியாமல், அந்தப் போரிடும் வேளையிலே பல்லைத் திறந்து காட்டினீரே? இதுவோ நும்முடைய படையாண்மை?"*

*அல்லற் பிழைப்பு - கேவலமான பிழைப்பு. போர் முனையிலே பல்லைக் காட்டுதல் மிகவும் கோழைத்தனமாகும்; அதனைச் செய்தவர் தாமே நீர்? என்கின்றனர். சிரித்தே எரித்த வெற்றிச் செயலைக் குறித்து இவ்வாறு நிந்தாஸ்துதியாகப் பாடுகின்றனர் என்று கொள்க.*

## என் செய்வீர்?

*சிவபெருமான் பிச்சை எடுக்கின்றான். எதனால்? வேடிக்கையான ஒரு விளக்கத்தை அதற்குத் தருகிறார் காளமேகம்.*

**மாடு கிடப்பாதம் மனையா ளுடற்பாதி**
**தேடுதற்கும் பிள்ளை தினைக்கடம்பன்-சாடில்**
**அரவா பரணம்பூ ணம்பலத்தீர் பிச்சை**
**இரவாம லீரென்செய் வர்?** (152)

மாடோ கிடப்பாத மாகிவிட்டது! மனையாளோ உடல் பாதியாகிப் போய்விட்டாள்! பொருள் தேடி வருவதற்கு உரிய பிள்ளையோ தினைக் கொல்லைகளிலும் கடப்பமரச் சோலை களிலுமாகச் சுற்றிக்கொண்டிருக்கிறான். பாம்பா பரணத்தினை அணிகின்றவரே! அம்பலத்திலே யுள்ளவரே! நீர் பிச்சை எடுக்காமல் வேறு என்னதான் செய்வீர்?"

'இரவாமல் என்ன செய்வீர்?' என்று கேட்பதன்மூலம். பெருமானின் பிட்சாடன அருட்கோலத்தைப் போற்றுகின்றார் காளமேகம்.

மாடு என்றது நந்தி பெருமானை. கிடப்பாதம் - ஒரு மாட்டு நோய், மனையாள் - உமை, உடற்பாதி - உடலிற்பாதி; உடல் பாதியாகி நலிவுற்றவள். கடம்பன் - முருகன். மாடும் கிடையாயிற்று; மனைவியும் உடல்பாதியானாள்; மகனும் ஊர் சுற்றுபவனானான்; இந் நிலையிலே பிச்சை எடுக்காமல் உம்மால் எப்படி உயிர் வாழ முடியும்? என்று பாடுகிறார்.

## சொக்கலிங்க சுகம்

மதுரைச் சொக்கலிங்கப் பெருமானைத் தரிசித்த கவிஞர் அந்த இன்பத்தை வியந்து பாடுகிறார்.

**காண்டரிய மேனியுமொண் கந்தரமுஞ் சுந்தரனாய்**
**ஆண்டதுவு மேனிக் கமைந்ததுவும் - நீண்டமுகின்**
**மைக்கலிங்க மாகமணி மாடமணி மாமதுரைச்**
**சொக்கலிங்க மென்னுஞ் சுகம்.** (153)

"காணுதற்கும் அரியவான திருமேனியும், ஒளியுடைய செஞ்சடையும், சுந்தரனாக வந்து ஆட்கொண்டதும், மேனி யிடத்தேயே அமைந்ததுவும், எல்லாம் - நீண்ட மேகங்களே கருத்து ஆடையாக மேலே விளங்கும் அழகிய மாடங்களையுடைய சிறந்த மதுரைச் சொக்கலிங்கம் என்னும் பேரின்பப் பொருளுக்கே உரியனவாகும்" சுந்தரம் - மேகம்.

## திருநாமம் எது?

காஞ்சி வரதராசப் பெருமானைப் போற்றி வருபவர் ஒருவர், காளமேகத்திடத்தே வந்து சிவபெருமானைக் குறை கூறியும் ஒருநாள் பேசிவிடுகிறார். அதனால், சினங்கொண்ட கவிஞர் வரதராசப் பெருமானைக் குறிப்பிட்டு இப்படிப் பாடுகிறார்.

**எருதாய்ச் சுமந்துபோ யேத்திக்கண சாத்திப்**
**பொருதாழி வாங்கினதும் பொய்யோ?-பெருமாள்**
**திருநாம மென்று நெற்றி தீட்டியதும் கச்சி**
**ஒருமா விலக்கமல்ல வோ?** (154)

*"திரிபுர தகன காலத்திலே எருதாக உரிக்கொண்டு பெருமானைச் சுமந்து போனான்; சிவபெருமானைப் போற்றித் தன் கண்மலரையே திருவடிக்குக் காணிக்கைப் பொருளாக்கி அருச் சித்துப் போரிடுதற்குரிய சக்கரப்படையினையும் அந்நாளிலே வாங்கினான்; அத்திருமாலின் இச்செயல் எல்லாம் பொய்யோ? மேலும், உங்கள் பெருமாள் திருநாமம் என்று தன் நெற்றியிலே சாத்திக்கொண்டிருப்பது தான் என்ன? காஞ்சிபுரத்திலே ஒப்பற்ற மாவின் அடியிலே இருக்கும் சிவபெருமானைக் குறிக்கொண்டு விளங்கும், அவனுடைய திருப்பாதங்களே அல்லவோ?*

*'திருமால் ஒப்பற்ற சிவபக்தன்! என்று கூறுவதன் மூலம் சிவனுடைய சிறப்பைக் காட்டுகின்றனர் காளமேகம்.*

## கொங்கை வடு

*சிவபெருமான் அருள் திருமேனியினை உடையவன் என்றாலும், அம்மையின் கொங்கைவடுக்கள் மட்டும் அவன் திருமேனியிலே ஒரு போதும் மறையாமலேயே விளங்கும் என்கிறார் காளமேகம். அரிய கற்பனைச் சுவை விளங்கும் சிறந்த பாடல் இது.*

**ஆறா தொருக்காலு மையாமே கம்பருக்கு**
**மாறா வடுவாய் மறையாதே-பேறாகச்**
**செங்கையினா லேயழுத்திச் செய்யகச்சிக் காமாட்சி**
**கொங்கையி னாலிட்ட குறி.** (155)

*"ஐயா! தான் பெற்ற பெரும்பேறாகக் கருதிச் செவ்விய தன்மையுடைய காஞ்சிக் காமாட்சியம்மையானவள், தன் செங்கை யினாலே இறுக அழுத்தித் தழுவித் தன் கொங்கைகளினாலே இட்ட அடையாளமாகிய வடுவானது, ஒரு போதுமே நின் திருமேனியை விட்டு மறையவே மாட்டாது. என்றும் மாறாத வடுவாக அது நின்பால் விளங்கிக்கொண்டிருக்கும்.*

*சிவனே அனைத்துக்கும் முதலாகிய பெருமான் எனினும் அவன் அன்பர்க்கு அருளுகின்ற பெருங்கருணையும் உடையவன். அந்தக் கருணை வெள்ளத்தினாலேயே அம்மையின் கொங்கை வடுக்களை அவன் தன் திருமேனியிற் கொண்டிருக்கிறான் என்று அறிதல் வேண்டும். இதனால், பெருமானின் அருளும், அம்மையின் காதற்பெருக்கமும் கூறியதாயிற்று.*

## ஞான குரு!

*அடியவர்கட்குத் தானே ஞானகுருவாக வந்து மெய்ப் பொருளை உபதேசித்துக் கடைத்தேற்றும் பெருமான் கச்சி ஏகாம்பரநாதனே! அவனுக்கு அந்த ஞானத்தை எவர் போதித்தனர்? அதனைப் பற்றிக் கூறும் செய்யுள் இது.*

**எவர்தமக்கும் ஞானகுரு வேகாம்ப ரேசர்**
**அவர்தமக்கு ஞானகுரு வாரோ-உவரியனை**
**கட்டினான் பார்த்திருக்கக் காதலவன் றன்றலையிற்**
**குட்டினான் தானே குரு.** (156)

*"எத்தகையோருக்கும் ஞானகுருவாக உபதேசித்து அருள் செய்கின்ற பெருமான் கச்சி ஏகாம்பரநாதனே. அந்தப் பெருமானுக்கு ஞானகுருவாக இருந்து அதனை உபதேசித்தவர் யார்? கடலுக்கு அணை கட்டியவனான திருமால் பார்த்துக் கொண்டிருக்க, அந்த நேரத்திலேயே, அவனுடைய மகனான பிரமனின் தலையிலே குட்டினானே அந்தச் சிவகுமரன்தான் அவனுக்கு ஞானகுருவாக இருந்து உபதேசித்த பெருமான்.*

*பிரணவப் பொருளை அறியாத பிரமனைத் தலையிலே குட்டிக் கந்தமாதனக் குகையிலே அடைத்து வைத்தவன் குமரப் பெருமான். பின்னர் தேவரும் மூவரும் வேண்ட அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி அவனை விடுவித்த பெருமான், தன் தந்தையின் வேண்டுதலின்படி அவருக்குப் பிரணவப் பொருளை உனரத்தனன். அந்தக் குமரகுருபரனின் செயலையே காளமேகம் இப்படிக் கூறுகின்றனர். இதனாற் சிவபெருமானின் கருணை வெள்ளத்து மிகுதியையும் உரைத்தனர்.*

## புன்னீர் கேளா!

*திருவண்ணாமலைத் திருக்கோயிலிலே சுவாமி தரிசனம் செய்துகொண்டிருந்தார் காளமேகம். அவருடைய கவனம் சந்நிதிக்கு முன்னால் விளங்கும் நந்திப் பெருமானின் மேற்சென்றது. 'புல்லும் தண்ணீரும் கேளாதே கல்லுருவாக விளங்கும் நந்தீசர்' என்று பாடுகிறார் கவிஞர்.*

**நடக்கவறி யாதுகா னாலு முடக்கிக்**
**கிடக்கவறி யும்புன்னீர் கேளா-விடக்கை**
**யரைப் பணியார் சோகிரி யத்தனா ரோட்டில்**
**இரப்புணியா ரேறும் எருது.** (157)

*"நஞ்சினைக் கையிலே எடுத்து அந்நாளிலே உண்ட சிவபெருமான்; பாம்பாரபணத்தையும் அணிந்த பரமன்; சோணசைலத்தே அனைவருக்கும் அப்பனாகவும் விளங்கும் இறைவன், அவன் தலையோட்டிலே பிச்சையேற்று உண்கின்ற*

வனும் ஆவான். அதனாற்போலும் அவன் ஊர்கின்ற எருதானது, நடக்க அறியாததாகி, நான்கு கால்களையும் முடக்கிக்கொண்டு கிடப்பதற்கு மட்டுமே அறிந்ததாயிருக்கின்றது! அஃதன்றிப் புல்லும் தண்ணீரும் கேட்பதற்கும் அஃது அறியாது கிடக்கின்றது."

'அவனே ஓட்டில் இரந்து உண்கிறவன்; அவன் ஏறும் எருதுக்கு, எங்கே புல்லும் தண்ணீரும் தரப்போகிறான். அதனால், அதுவும் அவற்றைக் கேட்பதற்கும் அறியாததாகிக் கிடக்கிறது போலும்!' என்கின்றனர்.

## கும்பகோணத்தான்

சிவபிரான் ஒளிப்பிழம்பாக நின்ற காலத்துத் திருமால் அடிதேடிச் சென்று காணாது அயர்வுடனே திரும்பினான். அந்த நிகழ்ச்சியை நினைவிற்கொண்டு, கும்பகோணத்து இறைவனை இப்படி போற்றுகின்றார் கவிஞர்.

**அம்பாகி னான் பாத மன்றுபிடித் தாயவற்குன்**
**செம்பாதங் காட்டாத் திறமென்னோ - உம்பர்தொழும்**
**நம்பகோ ணத்தானே நாகச் சிலைவளைந்த**
**கும்பகோ ணத்தானே கூறு.** (158)

"திரிபுர தகன காலத்திலே மகா விஷ்ணுவே நினக்கு அம்பாகினான். அப்படி அம்பாகியவனின் பாதத்தை அன்று கையாற் பிடித்து எய்தவன் நீயே யாவாய்! அப்படி நின்னால் அன்று பாதம் பிடிக்கப்பட்ட அவனுக்குப் பின்னர் நீ நின்னுடைய சிவந்த பாதமலர்களைக் காட்டியருளாத நின் தன்மைதான் என்னவோ? தேவர்களும் தொழுது போற்றுகின்ற முடிவான பொருளாக விளங்கும் பெருமானே! மேருமலையாகிய வில்லினை அன்று வளைத்த, கும்பகோணத்தில் வீற்றிருக்கும் பெருமானே! நின், அந்தத் தன்மையினை எனக்கு விளங்கக் கூறுவாயாக."

அன்று திருமாலின் காலைப் பிடித்த நீ, அவன் நின் காலைப் பிடிக்கத் தேடியும், அவனுக்குக் காட்டா திருந்தனையோ? இதுதான் நியாயமோ? என்கிறார் கவிஞர்.

## ஏனோ தலையிறைஞ்சினீர்!

திருவிரிஞ்சி நகருக்கு இறைவனான சிவபெருமானைப் போற்றியது இது. பெருமான் தலைகவிழ்ந்தவராயிருப்பது பற்றிக் கவிஞர் அவரை இவ்வாறு வினவுகிறார். தலை கவிழ்வது அவமானத்தினாலேதான் என்பவர். 'அது எனதால் வந்துற்றது?' எனவும் கேட்கிறார்.

**வேண்டிய சைவனார் விட்டதூ துக்கோமுன்**
**பாண்டியனார் கையிலடி பட்டதற்கோ-ஆண்டவரே**

**வானோர் புகழ்விரிஞ்சை மார்க்க சகாயரே**
**ஏனோ தலையிறைஞ்சி னீர். (159)**

*"எனை ஆண்டுகொண்ட பெருமானே! தேவர்களும் வந்து போற்றும் திருவிரிஞ்சை நகரிலே கோயில் கொண்டிருக்கும் மார்க்க சகாயனே! உமக்கு வேண்டிய சைவரான சுந்தரர் அனுப்பிவைத்த தூதுக்காகவோ? அன்றி முன்காலத்திலே பாண்டியனின் கைப்பிரம்பினால் அடிப்பட்டதற்காகவோ? அன்றி வேறு எதனாலோ, நீர் இப்படித் தலை கவிழ்ந்து இருக்கின்றீர்!"*

## யாரோ இவர்?

*திருவீரட்டானத்திலே கோயில்கொண்டிருக்கிற சிவ பெருமானைப் பணிந்து போற்றி நிற்கும் காளமேகப் புலவருக்கு, பெருமானின் ஆற்றல்கள் அனைத்தும் நினைவில் எழுகின்றன, அவற்றை இவ்வாறு பாடுகின்றனர்.*

**இவரோவீ ரட்ட ரெனுநாம முள்ளோர்**
**இவரோ வழுவூரி லீசர்-இவரோ**
**கடத்தடக்க தத்துறப்பி டித்திழுத்து தழுத்தி**
**அடித்தறுத்து ரித்துடுத்த வர். (160)**

*வீரட்டானர் என்ற திருப்பெயரினை உடையவரும் இவர்தானோ? இவர் தானோ திருவழுவூரிலே கோயில் கொண்டிருக்கும் ஈசரும்? மும்மதங்களை உடையதும், மிக்க சினமுடையதுமான யானையினைப் பற்றிப் பிடித்து இழுத்து அழுத்தி, அடித்துக்கொன்று, அதனை அறுத்து, அதன் தோலையுரித்து உடுத்த ஆற்றலுடையவரும் இவர் தானோ?"*

## நஞ்சு தின்றதென்?

*தேவர்களும் அசுரர்களும் ஒன்றுகூடிப் பாற்கடலைக் கடைந்தனர். அந்த நாளிலே எளுந்த நஞ்சினைச் சிவ பெருமான் உண்டு அவர்களைக் காத்தனர். அதனைக் குறிப்பிட்டு, 'அவர் தன் உயிரை விட்டுவிடுவதற்குக் கருதிப் போலும் அங்ஙனம் நஞ்சினை அருந்தினர்?' என்று பாடுகின்றார் கவிஞர் காளமேகம்.*

**கல்லால் அடித்ததற்கோ காலால் உதைத்ததற்கோ**
**வில்லா லடித்ததற்கோ வெட்கினீர்-சொல்வீரால்**
**மஞ்சுதனைச் சூடுமுயர் மதிலானைக் காவாரே**
**நஞ்சுதனைத் தின்றறென்முன் னாள். (161)**

*"சாக்கியன் உம்மைக் கல்லால் அடித்தானே அதற்காகவோ? கண்ணப்பன் உம்மைக் காலால் உதைத்தானே அதற்காகவோ? அருச்சுனன் உம்மை வில்லால் அடித்தானே அதற்காகவோ? எதற்காகவோ நீர் வெட்கமுற்றீர்? மேகங்கள் தன்னைச் சூழ்ந்திருக்க விளங்கும் உயரமான திருமதிலினை உடைய திருவானைக்காவிலே*

சிவபெருமானே! நீர் முன் காலத்திலே நஞ்சுதனைத் தின்றீரே அது எதனால் என்பதனை எனக்குச் சொல்வீராக."

உலக வாழ்விலே வெறுப்பு ஏற்படும்போது, ஒருவர் நஞ்சினை உண்டு உயிரை விட்டுவிட முயல்வது இயல்பு, அதனை மனத்துட்கொண்டு, பெருமான் நஞ்சுண்ட செயலுக்கும் இப்படிக் காரணங்களைக் கற்பிக்கிறார் கவிஞர்.

**மழபாடியார்!**

திருமழபாடி என்னும் திருநகரிலே கோயில் கொண்டிருக்கிற சிவபெருமானைத் தரிசிக்கச்சென்றபோது, கவிஞர் பாடியது இது. 'பெயர்தான் அவருக்கு வயித்தியநாதர்! அவருடைய நோய் களையே அவரால் தீர்க்கமுடியவில்லை? அவரெங்கே பிறருடைய நோய்களைத் தீர்க்கப்போகிறார்? என்று அவரை நிந்திப்பதாக அமைந்தது இச்செய்யுள்.

**வலியமழ பாடி வயித்தியநா தர்க்குத்**
**தலைவலியாம் நீரேற்றந் தானாம்-குலைவலியாம்**
**கையோடு சூலையாம் கால்வாத மாங்கண்மேல்**
**ஐயோ வெழுஞாயி றாம்.** (162)

"மழபாடியிலே கோயில் கொண்டிருக்கிறார் வல்லமை யுடைய வயித்தியநாதர். அவருக்குத் தலைவலியாம்; நீரேற்றமாம்; குலைவலியாம்; கால்வாதமாம்; கண்மேல் எழுஞாயிறாம்; இத்தகைய அவரெங்கே பிறரைக் குணப்படுத்தப் போகிறார்.

"தலை" வலிமைகொண்ட சடைக்கற்றையாம்; தலை மேல் கங்கையாகிய நீர் உயர்வு பெற்றிருக்கிறதாம், அனைத்தையும் அழியச் செய்யும் ஆற்றல் உடையவரும் அவராம்; கையிலே அவருக்குத் திருவோடாம்; சூலம் ஏந்தியவரும் அவராம்; அவரது கண்களோ எழுகின்ற ஞாயிற்றைப்போல நெருப்புப் பிழம்புகளாக விளங்குகின்றனவாம். இப்படிப் பெருமானைப் போற்றுவதாகவும் உரைகொள்க.

**அழகரென்றார் யார்?**

"அழகர் கோயிலிலே விளங்கும் பிரானுக்குச் 'சோலை மலை அழகர்' என்றும் ஒரு பெயருண்டு. 'அவரை அழகரென்று எவ்வாறு சொல்ல முடியும்? அவருக்கு அப்படிப் பேரிட்ட அறியாமை உடையவர் யார்?" இப்படிக் கேட்கிறார் கவிஞர்.

**மீனமுக மாமைமுக மேதினியெ லாமிடந்த**
**ஏனமுகஞ் சிங்கமுகம் என்னாமல்-ஞானப்**
**பழகரென்றுஞ் சோலைமலைப் பண்பரென்று மும்மை**
**அழகரென்றும் பேரிட்டார் யார்?** (163)

"மீனமுகம், ஆமைமுகம், உவகமெல்லாம் தோண்டிப் பறித்த பன்றிமுகம், சிங்கமுகம், என்றிப்படி எல்லாம் சொல்லாமல், அறிவின் கனிவைக் கொண்டவரென்றும், சோலைமலையிடத்து வாழும் பண்பாளரென்றும், அழகிய திருமேனியினை உடையவ ரென்றும் உம்மைப்பேரிட்டு அழைத்தவர்தாம் யாவரோ?"

திருமாலின் மச்சாவதாரம். வராகவதாரம், கூர்மாவதாரம், நரசிம்மாவதாரம் ஆகியவற்றைக் குறித்து, அவரை அப்படி அழையாமல், ஏனிப்படி அழகர் என்றனர்? என்று வினவுகிறார் கவிஞர்.

### வீதி வரக் கண்டு!

இராமபிரான் மிகவும் அழகன்; பூமியிடத்தே இருந்து தோன்றியவளான சீதையின் கணவன்; அவன் திருவீதியிலே பவனி வருகின்றான்! அவன் அழகிலே மயங்கினாள் ஒரு பெண். தன் அரையிடத்து ஆடையும் நெகிழ்ந்து காலில் விழ, அவள் தன்னை மறந்து. அவனையே காமுற்று நிற்கிறாள். இப்படிக் கற்பித்துப் பாடுகிறார் காளமேகம்.

**ஓரொருமா வொன்றுமா வொன்பதுமா வின்கலையை**
**ஈரொருமா மும்மாவுக் கீந்ததே-பாரறியப்**
**பொன்மானின் பின்போன பூமங்கை யாள்வாரைக்**
**கன்மாவின் வீதிவரக் கண்டு.** (164)

'உலகமெல்லாம் அறியும்படியாகப் பொன்மானின் பின்னே சென்றவர் பூமங்கையான சீதையை ஆட்கொண்டவரான இராமபிரான், தன் புண்ணிய வசத்தினாலே அவர் திருவீதியிலே உலா வருதலைக் கண்டனள் ஒப்பற்ற ஒரு பெண்ணணங்கு. அவர்மேல் அவள் மையலும் கொண்டனள். அந்தக் காட்சி அவ்ளுடைய காலுக்கு அளித்து விட்டதே? என்ன கொடுமை இது.

ஓரொருமா - ஒப்பற்ற ஒரு திருமகள் போல்வாள். ஒன்றுமா ஒன்பதுமா - பத்துமா; அரை. ஈரொருமா - மும்மா - ஐந்துமா - கால். பொன் மான் - மாயமான்; சீதையின் விருப்பத்தை நிறைவேற்ற இராமபிரான் துரத்திச்சென்றது.

### என்ன பலன்?

ஒன்றைச் செய்தால், செய்தவர்க்கு ஏதாவது அதனாற் பலன் இருக்க வேண்டும். பலனில்லாமல் ஒரு செயலைச் செய்பவர்களை உலகம் என்றும் மதியாது. இந்த உலக உண்மையைச் சிவ பெருமான் மீதும் ஏற்றித் திருவிருத்திநாதரைப் போற்றுகின்றார் காளமேகம்.

**திருவிருத்தி நாதர் திருவளியா தென்னைக்**
**கருவிருத்தி யென்னபலன் கண்டார்-எருதுபோய்க்**
**கோட்டிபத்தி லேறினரோ கோவணம்போய்ப் பட்டாச்சோ**
**ஓட்டிலிரந் துண்டதும்போச் சோ? (165)**

"திருவிருத்திநாதர் தம்முடைய திருவடிப் பேறாகிய செல்வத்தினைத் தந்தருளாமல், என்னைக் கருக்குழியிலே இருத்தியதனாலே என்ன பலனைக் கண்டுவிட்டார்? தம்முடைய எருதைக் கைவிட்டுக் கொம்புகளையுடைய யானையின் மேலே அவர் ஏறிவிட்டாரோ அல்லது, அவருடைய கோவணம் - போய் உடுத்துவதும் பட்டாக அவருக்கு உயர்ந்ததோ? அல்லது, ஓட்டிலே இரந்து உண்ணுகின்ற தன்மையாவது அவருக்கு இல்லாமற் போயிற்றோ? எதுவும் இல்லையே! இருந்தும் என்னைக் கருவிருத்தி அவர் கண்ட பலன்தான் என்னவோ?

தம்மைக் கருக்குழியில் தள்ளியதற்கு வருந்தி, இப்படிப் பாடுகின்றார் கவிஞர். இதனால் தம் பிறவியினை அறுத்தருளப் பெருமானை வேண்டினரும் ஆம்.

## பெண்கள் பெருமை

கடவுளரும் பெண் மாயையினை விட்டவர்களில்லை. அவர்கள் தம்முடனேயே, தம் உடலுடனேயே தத்தம் நாயகியரைக் கொண்டு சுமக்கின்றனர். இப்படிக் கடைமொழி மாற்றாகச் செய்த செய்யுள் இது. 'உலகு உண்டு உமிழ்ந்த தாமரைக் கண்ணோன்' என்பதை முதலிற் கொண்டு பொருத்திப் பொருள் காண வேண்டும்.

**இந்திரையை மார்பில் வைத்தான் ஈசன் உமையையிடத்**
**தந்தி பகலழைத்தான் அம்புயத்தோன்-சுந்தமிகு**
**வெண்டா மரைமயிலை வேண்டிவைத்தா னாவிலுல**
**குண்டுமிழ்ந்த தாமரைக்கண் ணோன். (166)**

"உலகினை எடுத்து விழுங்கி மீளவும் உமிழ்ந்த செந்தாமரைக் கண்ணனான திருமால், இந்திரையாகிய திருமகளைத் தன் மார்பிடத்தே வைத்துக் கொண்டான். ஈசனான சிவபிரானோ, உமையைத் தன் இடப்பாகத்திலேயே இரவு பகலாகக் கொண்டிருக்கின்றான். தாமரை வாசனாகிய பிரமதேவனோ, வெண்டாமரையிலே வீற்றிருப்பவளாகிய கலைவாணியைத் தன் நாவிலேயே கொண்டிருக்கிறான்."

"முத் தேவர்களின் நிலையே இப்படியானால், மனிதர்கள் பெண்களைப் போற்றுவதும், அவரைத் தாம் அடையுமாறு காமுற்றுத் திரிவதும் தவறாகுமோ?" இவ்வாறு, ஆண்களின் காமநோய்க்கு ஒரு சமாதானமும் கூறுகிறார் கவிஞர்.

### வாகனங்கள்

*பிரமதேவன், திருமால், சங்கரர், இந்திரன், குபேரன் ஆகியோரின் வாகனங்களைக் குறிப்பிட்டுச் சொல்லியச் செய்யுள் இது. கடைமொழி மாற்று என்னும் வகையைச் சார்ந்தது. 'விதிக்காம்' என்பதனை முதலிற் கொண்டு பொருத்தி உரை காணவேண்டும்.*

**அன்னம் திருமாலுக் காங்கருடன் சங்கரற்காம்**
**பன்னிடப மிந்திரற்காம் பார்க்குங்கால்-துன்னு**
**மதவா ரணமளகை மன்னனுக்காம் பஞ்ச**
**கதிசேர் புரவிவிதிக் காம்.** (167)

*"பிரமனுக்கு அன்னம் வாகனமாகும்; திருமாலுக்குக் கருடன் வாகனமாகும்; சங்கரற்குப் புகழ்மிக்க எருது வாகனமாகும்; சொல்லுமிடத்து, இந்திரனுக்கு மதம் நிறைந்த வெள்ளையானை வாகனமாகும்; அளகாபுரி மன்னனாகிய குபேரனுக்குப் பஞ்சகதியும் பொருந்திய குதிரை வாகனமாகும்"*

*விதி - பிரமன், அளகை மன்னன் - குபேரன்; இவன் வாகனங்களுள் ஒன்று குதிரை. 'பஞ்சகதி சேர் புரவி' என்றதனால், ஐந்து புலன்களின் ஓட்டத்தையுடைய புருஷவாகனத்தைக் குறித்த தாகவும் கொள்வர்.*

### ஆயிரம் வேணும்

*சிதம்பரத்துப் பொன்னம்பலத்திலே நடனஞ் செய்கின்ற கூத்தப்பிரானைக் கண்டு போற்றுகிறார் காளமேகப் புலவர். பெருமானின் கழல் விளங்கும் திருப்பாதங்களிலே தம்மை மறக்கின்றார் அவர்! பெருமானை இவ்வண்ணமாக யாசிக்கவும் செய்கின்றார்.*

**காணத் தொழப்புகழக் கண்ணுங்கை யும்வாயும்**
**சேணிந் திரவாணன் சேடன்போல்-வேணும்**
**பனகசய னத்துறைவோன் பாரிடந்துங் காணாக்**
**கனகசபை யிற்றண்டைக் கால்.** (168)

*"பாம்பணையிலே பள்ளிகொள்வோனாகிய திருமால், பூமியைத் தோண்டிக் கூர்மமாகிச் சென்றும் அந்நாளிற் காணவியலாததாக விளங்கியதும், பொன்னம்பலத்திலேயான் இன்று காணப் பேறுபெற்றமாகிய கழல் விளங்கும் நின் திருவடிகளைக் காணவும் தொழவும் போற்றவும், கண்ணும் கையும் நாவும், இந்திரனைப் போலவும் வருணனைப் போலவும் ஆதிசேடனைப் போலவும், ஆயிரமாயிரங்களாக எனக்குத் தந்து அருளவேண்டும், பெருமானே!*

**பாண்டித் தலங்கள்**

*பாண்டியநாட்டுச் சிவத்தலங்கள் எவையெனக் கூறுகின்ற செய்யுள் இது.*

**கூடல் புனவாயில் குற்றால மாப்பனூர்**
**ஏடகநெல் வேலி யிராமேசம்-ஆடானை**
**தென்பரங்குன் றஞ்சுழியல் தென்றிருப்புத் தூர்காசி**
**வன்கொடுங்குன் றம்பூ வணம்.** (169)

*கூடல் - மதுரை; புனவாயில் - திருப்புன வாயில்; குற்றாலம் - திருக்குற்றாலம்; ஆப்பனூர் - திருவாப்பனூர்; ஏடகம் - திருவேடகம்; நெல்வேலி - திருநெல்வேலி; இராமேசம் - திருஇராமேச்சுரம்; ஆடானை - திரு ஆடானை. தென்பரங்குன்றம் - திருப்பரங்குன்றம், சுழியல்; திருச்சுழியல்; திருப்புத்தூர் - திருப்புத்தூர்; தென்காசி - தென்காசி; வன்கொடுங்குன்றம் - திருக்கொடுங் குன்றம்; பூவணம் - திருப்பூவணம்; இவை யாவும் பாண்டிநாட்டுத் தலங்கள் ஆகும்.*

*சொல்லாட்சி மிகுந்தவர் செய்யும் கவிதைகள் எவ்வாறு சந்தச் செறிவும் பொருட்செறிவும் தம்முள் ஒருங்கே இணைந்து, செவிக்கும் உளத்துக்கும் இனிமை தருவனவாக அமைகின்றன என்பதற்கு இச்செய்யுள்கள் சான்றுகளாகும்.*

*கவியேறான காளமேகப் புலவரின் செய்யுள்கள் இவ்வகையிலே ஒப்பில்லாத செழுமை கொண்டவை. நினைந்து நினைந்து கவியின்பத் தேறலை நுகர்வாருக்கு நித்தமும் இனிமையும் அறிவு நலமும் தருபவை.*

*தெய்விகக் கவிதைகள் என்றதும் இதன் இத்தகைய சிறப்பினாலேதான். கால்வெள்ளத்தைக் கடந்து என்றும் புதுப்பொருள் நயம் காட்டிக் காட்டிக் கற்பனைக் காட்சிகளைக் கவினுறப் படைக்கும் சொல்லோவியங்கள் இவை.*

## 7. செறிவான செய்யுட்கள்

*இந்தப் பகுதியிலே விளங்கும் பாடல்கள் பலவும், கவிஞர் தனித்த சமயங்களிலே தனிப்பட்ட செய்திகளையும் மனிதர் களையும் போற்றியும் பழித்தும் பாடியவையாகும். இவற்றுள் கவிஞரின் சிறந்த புலமை நலத்தினையும் சொற்சுவையோடு பொருட்சுவையும் பொருந்தக் கவியியற்றும் திறத்தினையும் காணலாம்.*

**விழி வேல்**

*தாசி கமலாட்சி என்பவள் கவிஞருக்கு வேண்டியவளாக இருந்தாள். ஒரு சமயம் அவளுக்கு மருந்து வாங்குவதற்காகக்*

கடைக்குச் சென்றார் காளமேகம். கடைக்காரச் செட்டியின் பெயர் பெற்றான் செட்டி. அவன் கடையடைப்பித்துத் தன்னைப் பாடினால்தான் மருந்து தருவதாகச் சொல்லக் கவிஞர் அப்போது பாடியது.

**முற்றாத காஞ்சியினும் முல்லையினும் பாலையினும்**
**கற்றான்பின் சென்ற கருணைமால்-பெற்றான்றன்**
**ஆலைப் பதித்தா ரளகத்தி யாட்கயனார்**
**வேலைப் பதித்தார் விழி.** (170)

"என்றும் முடிவு பெறுதல் என்பதில்லாத காஞ்சிபுரத்திலும், காட்டுப் பகுதியான முல்லை நிலத்திலும், பாலை நிலத்தினும் கற்றான் பின்னே சென்ற கருணையினை உடையவன் திருமால்."

"அவனைப்போன்ற கருணையுள்ள, இந்தக் கடற்கரைப் பட்டினத்தே யுள்ளவனான இந்தப் பெற்றான் செட்டியின் நீண்ட கூந்தலையுடைய மனைவிக்குப் பிரமதேவர் வேலாயுதத்தினையே கண்ணாகப் படைத்துள்ளனரே! என்னே சிறப்பு அது!"

'கற்றான்' என்ற சொல்லுக்குப் படித்தவன் எனவும், கன்றையுடைய பசுவெனவும், முனிவன் எனவும் பொருள் 'கற்றான் பின்சென்ற திருமால்' என்பதனை இம்மூவகைப் பொருள்களுடனும் கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும்.

காஞ்சியிலே திருமால் பைந்நாகப் பாயைச் சுருட்டிக் கொண்டு திருமழிசையாரின் பின்னாகச் சென்றதையும், காட்டிலே கண்ணபிரானாகப் பசு மேய்த்தவனாகச் சென்றதையும், பாலையிலே விசுவாமித்திரனைப் பின்தொடர்ந்து இராமனாகச் சென்றதனையும் இவை குறிக்கும். அளகம் - கூந்தல், தார்அளகம் - தாரையுடைய அளகமும் ஆம்; தார் - பூமாலை.

## சரிந்த தனம்!

பெற்றான் செட்டியின் மனைவிக்கு ஒரு குழந்தையும் பிறந்தது. அப்போது கவிஞர் பாடிய செய்யுள் இது.

**கஞ்ச முகையும் களிற்றானை யின்கொம்பும்**
**அஞ்சுமுலை நாலுமுலை யானதுவும்-மிஞ்சுபுகழ்**
**பெற்றான்தன் மாலை பிறர்களித்த துங்குதலை**
**கற்றான் பிறந்தபின்பு காண்.** (171)

"தாமரையின் மொட்டும், களிற்று யானையின் கொம்பும், தாம் உருவினாலே ஒப்பாக மாட்டோம் என் அஞ்சி ஒதுங்கி நிமிர்ந்த இவளின் கொங்கைகள் தொங்கு முலைகளாக மாறிப் போயினதும், நிறைந்த புகழுடைய பெற்றான் செட்டி தன் ஆசையைப் பிறருக்கு அளித்ததும் எல்லாம், மழலை கற்றவனாகிய இந்தக் குழந்தை வந்து பிறந்ததன் பின்னரே என்று அறிவாயாக."

*கஞ்சம் - தாமரை; முகை - மொட்டு; தாமரை மொட்டும், களிற்றுயானைக் கொம்பும் நிமிர்ந்த இளங் கொங்கைகட்கு உவமையாயின. மகன் பிறந்ததனால் முலை தொங்கிப் போன தன்மையினை, 'நாலு முலை' என்றனர்.*

*அவன் வேற்றுப் பெண்ணைச் சுற்றித் திரிவதைக் கண்டு பாடியது இதுவெனவும் கொள்ளலாம். அல்லது, அவனுடைய புதிய வேசை யுறவினைக் குறித்து எச்சரித்துப் பாடியதும் ஆம்.*

### கழுதைக் குரல்!

*நாகையிலே, ஒரு தாசி மிகவும் கர்ணகடூரமான குரலிலே பாடினாள். சகிக்க முடியாத அந்த வேதனையைத் தாங்கிக் கொண்டிருந்த கவிஞரிடம், 'பாடல் எப்படி?' என்று ஒருவர் கேட்டுவிட்டார்! அப்போது பாடியது இது.*

**வாழ்த்த திருநாகை வாகான தேவடியாள்**
**பாழ்த்த குரலெடுத்துப் பாடினாள்-நேற்றுக்**
**கழுதைகெட்ட வண்ணான்கண் டேன்கண் டேனென்று**
**பழுதையெடுத் தோடிவந்தான் பார்.** (172)

*"வாழ்வு சிறந்த அழகிய நாகைப் பட்டினத்திலே, உடற்கட்டுள்ள இந்தத் தாசியானவள், தன் பாழான குரலினாலே உரக்கப் பாடினாள். நேற்றுத் தன் கழுதையைப் போக்கடித்துவிட்ட வண்ணான், "கண்டேன்! கண்டேன்!" என்ற சொல்லியவனாக, ஒரு தடியையும் கையில் எடுத்துக் கொண்டவனாக, இவ்விடத்திற்கு ஓடோடியும் வந்தான். இந்த வேடிக்கையைப் பாருங்கள்.*

*'அவளுடைய குரல் கழுதையின் கத்துதலுக்குச் சமமா யிருந்தது' என்று சாதுரியமாகப் பழித்தனர் கவிஞர். அவள் வெட்கித் தலை கவிழ்ந்தாள். கவிஞரை அபிப்பிராயம் கேட்ட வரும் அவளைத் தொடர்ந்தனர்.*

### நான்கு வகை நயனம்

*மதுரையிலே, 'கூத்தாள்' என்றொரு தாசி இருந்தாள். கவிஞரிடத்தே மிகவும் அன்பு கொண்டவள் அவள். அவள் கண்களையும், அவள் தமக்கை, தாய், பாட்டி ஆகியோரின் கண்களையும் இப்படிக் கூறிச் சிறப்பிக்கிறார் கவிஞர்.*

**கூத்தாள் விழிகணெடுங் கூர்வேலாம் கூத்தாள்தன்**
**மூத்தாள் விழிகள் முழுநீலம்-மூத்தாள்தன்**
**ஆத்தாள் விழிகள் அரவிந்தம் ஆத்தாள்தன்**
**ஆத்தாள் விழிகளிரண் டம்பு.** (173)

*கூத்தாள் என்பவளின் விழிகள் இரண்டும் நெடிதான கூரிய வேல்முனையைப் போன்றன; கூத்தாளுடைய மூத்தாளின் விழிகள்*

முழுநீலத் தன்மையுடைய நீலோற்பல மலர் போன்றன; மூத்தாளின் ஆத்தாளுடைய கண்கள் தாமரைப் பூப் போன்றவை; அந்த ஆத்தாளின் ஆத்தாளுடைய கண்களோ இரண்டு அம்புகளைப் போன்றவை.

## கோட்டானைக் கொடு!

தெருவில் நின்ற ஒரு சிறுவனைக் கவிஞர் அன்புடன் பார்க்க, அச்சிறுவனின் தாயாருக்குத்தன் மகன்மீது திருஷ்டி தோஷம் பட்டுவிடப்போகிறதே என்ற பயம் ஏற்பட்டு விடுகிறது. 'உன்னைக் கொடுக்க' என்ற, அவள் கைந் நெறிக்கக் கவிஞர்சினங் கொண்டு இவ்வாறு பாடுகின்றார்.

**என்னைக் கொடுத்தா லிரக்கமுனக் குண்டாமோ**
**வன்னக் கமலமுக வல்லியே-துன்னுமதக்**
**காட்டானைக் கோட்டுமலைக் காரிகையே நீபயந்த**
**கோட்டானைத் தானே கொடு. (174)**

"அழகிய தாமரை மலரினைப் போன்ற முகத்தினை உடையவளே! மிக்க மதம் பொழியும் காட்டு யானையின் கொம்பினைப் போன்ற தனங்களையுடைய அழகியே! என்னைச் சாகக் கொடுப்பதனால் உனக்கு எத்தகைய இரக்கமும் என்னிடத்தே உண்டாகுமோ? அதனால், நீ பெற்ற கோட்டான் இருக்கிறதே, அதனையே எமனுக்குக் கொடுப்பாயாக, அப்போது தான் உன் செருக்கு அடங்கும்."

'திருஷ்டி தோஷம் பட்டால் சிறுகுழந்தைகள் நோயுற்று மடிந்துவிடும்' என்றொரு நம்பிக்கை. அந்தத் திருஷ்டிக்கு உடையவரைக் குறித்து கைநெறித்தால் அந்தத் தோஷம் அவரைத் தாக்கி அழித்து விடும், குழந்தைக்கு ஆபத்தில்லை என்பதும் ஒரு நம்பிக்கை. இவற்றினால் வந்துற்றதே தாயின் கைந்நெறிப்பும் சொல்லும் ஆகும். அவள் பேதைமையைச் சுட்டிக்கவிஞர் பாடிய செய்யுள் இது. கோட்டான் - கோட்டான் போன்ற பிள்ளை எனவும் பால் குடித்துக் கொண்டிருக்கும் பாலன் எனவும் பொருள்படுவதாகும்.

## மாதம் காதவழி

ஆயக்காரனான விகடராமன் என்பவன், தன் குதிரையைப் பற்றிப் பெருமை பேசிக் கொண்டிருந்தான்! அவனையும் அவன் குதிரையையும் ஏளனஞ் செய்து கவிஞர் பாடியது இச் செய்யுள்.

**முன்னே கடிவாளம் மூன்றுபேர் தொட்டிழுக்கப்**
**பின்னே யிருந்திரண்டு பேர்தள்ள-எந்நேரம்**
**வேதம்போம் வாயான் விகடரா மன்குதிரை**
**மாதம்போம் காத வழி. (175)**

"முன்புறத்திலே கடிவாளத்தைப் பற்றி மூன்றுபேர்கள் இழுத்துக்கொண்டு போகவும், பின்புறமாக இருந்து இரண்டு பேர்கள் தள்ளிக்கொண்டு போகவுமாக எப்பொழுதும் வேதஒலி வெளிப்படும் வாயினனான விகடராமனின் குதிரையானது, ஒரு மாதத்தில் காதவழியினைக் கடந்து விடும் வேகத்தை உடையதாகும்." காதம் - பத்து மைல்."

**ஏற்ற மா!**

வேங்கட்டன் என்பவர் ஆமூரில் இருந்தவர். அவருடைய குதிரையைப் புகழ்ந்து பாடியது இச்செய்யுள். இவர் முழுப்பெயர் திருவேங்கட முதலியார் ஆகும்.

**ஆறும் பதினாறு மாமூரில் வேங்கட்டன்**
**ஏறும் பரிமாவே யேற்றமா-வேறுமா**
**வெந்தமா சும்மா வெறுமா களிகிளற**
**வந்தமா சந்துமா மா?** (176)

"ஆற்றுப் பாய்ச்சலும், பதினாறு பேறுகளும் மலிந்துள்ள ஆமூரிலே, வேங்கட்டன் என்பவன் ஏறிச் செலுத்துகின்ற குதிரையே மிகவுஞ் சிறந்த குதிரையாகும். வேறு குதிரைகள் எல்லாம் வெந்த மா, சும்மா, வெறுமா, களி கிளற வந்த மா என்ற சொற்களிலே பயின்று வரும், 'மா' என்ற சொல் எங்ஙனம் குதிரையைக் குறிக்காதோ, அதுபோலவே குதிரைகளாகக் கூறத் தகுந்தன வாகா."

**பதினாறு பேர்கள்!**

"பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வாய்" எனப் பலரும் வாழ்த்துகிறார்கள். அவை எவை என்பதனைக் கூறுவது இச் செய்யுள்.

**துதிவாணி வீரம் விசயஞ் சந்தானம் துணிவுதனம்**
**அதிதானியஞ் சௌபாக்கியம் போக - வறிவழகு**
**புதிதாம் பெருமை யறங்குலநோ வகல்பூண்வயது**
**பதினாறுபேறும் தருவாய் மதுரைப் பராபரனே.** (177)

மதுரைப் பராபரனே - மதுரைப் போரூரிலே கோயில் கொண்டிருக்கின்ற பரம்பொருளே! துதி - புகழ் (1) வாணி - கல்வி (2), வீரம் - மனவுறுதி (3), விசயம் - வெற்றி (4), சந்தானம் - மக்கட்பேறு (5), துணிவு - தைரியம் (6), தனம் - செல்வம் (7), அதி தானியம் - அதிகமான தானியவளம் (8), சௌபாக்கியம் - சிறந்த இன்பம் (9), போகம் - நல்ல அனுபோகம் (10), அறிவு - ஞானம் (11), அழகு - பொலிவு (12), புதிதாம் பெருமை - புதுவதாக வந்து நாளுக்கு நாள் சேர்கின்ற சிறப்பு (13), அறம் - அறஞ்செய்யும் பண்பு (14), குலம் - நல்ல குடிப்பிறப்பு (15), நோவகல் பூண்வயது - நோயில்லாமை

யோடு கூடியமைந்த நீண்ட ஆயுள் நலம் (16) என்ற பதினாறு பேறும் - என்று சொல்லப் படுகின்ற இந்தப் பதினாறு பேறுகளையும், தருவாய் - தந்து எனக்கு அருள் செய்வாயாக,

### அறிவிப்பார் இல்லையே!

தெருவிலே கீரை விற்றுக் கொண்டு போனாள் ஒருத்தி. அவளின் அழகினை வியந்து கூறிய செய்யுள் இது.

**வெள்ளை யானேறும் விமல ரடிபணியும்**
**பிள்ளையான் வாழும் பெருந்தெருவில்-வள்ளை**
**இலைக்கறிவிற் பாண்மருங் குலிற்றுவிடு மென்று**
**முலைக்கறிவிப் பாரிலையே முன். (178)**

"வெள்ளையான காளையின்மீது எழுந்தருளுகின்ற விமலனார் சிவபெருமான். அச் சிவபிரானின் திருவடிகளைப் பணிகின்றவன் பிள்ளையான். அவன் வாழுகின்ற பெருந் தெருவிலே, வள்ளைக் கொடியின் இலையைக் கறி சமைப்பதற்காக விறகிறவள் இவள். இவளுடைய இடையானது சுமை தாளாமல் இற்றுவிடும் என்று, இவளுடைய பருத்த தனங்களுக்கு, இவள் முன்னே போய் எடுத்துச் சொல்லுபவர் இவ்விடத்தில் எவரும் இல்லையே?"

பிள்ளையான் - பிள்ளையன்; காவை வடமலையப்ப பிள்ளையன் என்றாற்போலத் தலைமைப் பட்டம்.

### இரவு பட்ட பாடு

தமிழறியாத தாசி ஒருத்தியின் வீட்டிற்குச் சென்றதனைப் பற்றி வேடிக்கையாகக் கவிஞர் கூறிய செய்யுள் இது.

**ஏமிரா வோரியென்பா ளெந்துண்டி வஸ்தி யென்பாள்**
**தாமிராச் சொன்ன வெல்லாம் தலைகடை தெரிந்ததில்லை**
**போமிராச் சூழும் சோலைப் பொருகொண்டைத் திம்மிகையில்**
**நாமிராப் பட்டபாடு நமன்கையிற் பாடுதானே. (179)**

'ஏமிரா வோரி' (என்னடா, அடே) என்பாள், 'எந்துண்டி வஸ்தி' (எங்கிருந்து வருகின்றாய்)என்பாள், இரவு அவள் இப்படிச் சொன்னதெல்லாம் தலை கடை எதுவும் நமக்குத் தெரிந்தவாக இல்லை. கழியும் இரவு சென்று அடர்கின்ற சோலையினைப் போன்றதாக விளங்கும் கொண்டையினையுடைய திம்மி என்பவளிடத்திலே, நாம் இவ்வாறாக இரவெல்லாம் பட்டபாடு, எமனிடத்திலே சிக்கினவர் படுகின்ற பெரும்பாடு போன்றதே யாகும்.'

## வீறாப்பு ஏன்?

கிழத்தாசி ஒருத்தி, காளமேகத்தை இழிவாகப் பேசினாள். அப்போது அவர் சொன்னது இச் செய்யுள்.

**இந்து முடிக்கும் சடையாளர்**
**இருக்கும் தொண்டை வளநாட்டில்**
**சிந்து படிக்கக் கவிபடிக்கத்**
**தெரியா மடவா யுன்றனுக்குக்**
**கெந்தப் பொடியேன் பூமுடியேன்**
**கிழமாய் நரைத்து முகந்திரைந்தும்**
**இந்த முறுக்கேன் வீறாப்பேன்**
**எடுப்பே னுன்னைக் கெடுப்பேனே.** (180)

"சந்திரனைத் தரித்த சடையினரான சிவபிரான் கோயில் கொண்டிருக்கும் இத் தொண்டைவள நாட்டிலே, சிந்து படிக்கவும் கவிபடிக்கவும் அறியாத மடமையினை உடையவளே! உனக்கு வாசனைப் பொடிதான் எதற்காக? பூ முடிப்பும் எதற்காக? கிழமாக நரைத்து முகமும் திரைந்து போன பின்பு இந்த எடுப்பும் எதற்காக? உன்னை யான் அழித்தே விடுவேன். அதனையும் காண்பாயாக!"

## கலகம் தெளிந்தபின்

ஒரு தாசி வீட்டிற்குச் சென்றனர் கவிஞர். அவள் கதை சொல்லும்படியாகக் கேட்டு அவரைத் தொந்தரவு செய்தனள். அப்போது இப்படிக் கூறுகின்றார் கவிஞர்.

**சேரமான் புறப்படத் தென்றலும் வீசத் தூயிலொழிய**
**யாமங்க டோறும் குயில்வந்து கூவிடவந் நேரத்திலே**
**நாமும் பிழைத்து மனிதர்முன் பேசிட நாமுமுண்டாய்க்**
**காமக்கலகந் தெளிந்தபின் னானும் கதை சொல்வனே.** (181)

"நிலவும் வானத்தே எழுந்து தோன்றத் தென்றலும் வந்து வீசத், துயிலும் இல்லாமற்போக யாமங்கள்தோறும் குயில் வந்து கூவிக்கொண்டிருக்க, அந்நேரத்திலே நானும் அவற்றால் எழும் விரகவேதனைக்குத் தப்பிப் பிழைத்து மனிதர்கள் முன்பாகப் பேசுவதற்கு ஏற்றபடி வாழ்ந்தும் இருந்தால், இந்தக் காமக்கலகம் தெளிவுற்ற பின்னர், யானும் நினக்குக் கதை சொல்லுகின்றேன்."

பொழுதை வீணடிக்க அவள் புரிந்த சாகசத்தை உணர்ந்து கொண்டவர் கவிஞர், அதனால் இவ்வாறு கூறி, அவள் எண்ணத்தைத் தாமும் அறிந்த வகையைக் காட்டினர் என்க.

## சோமியின் அழகு

ஆற்றூரிலே 'சோமி' என்றொரு தாசி இருந்தாள். அவள் அழகு மிகுந்தவள். அவளுடைய அழகை வியந்து, கவிஞர் கூறிய செய்யுள் இது.

**ஆராயு முத்தமிழாற் றூரிற்சோமி யழகுகண்டு**
**நாராயணனெடு மாலாகினான் மற்றை நான்முகனும்**
**ஓராயிரமட லூர்ந்தான் வின்மார னுருவழிந்தான்**
**பேரான வானவர் கோனும்கண் ணாயிரம் பெற்றனனே. (182)**

"இயலிசை நாடகமென்ற முத்தமிழையும் ஆராய்கின்ற சிறப்புடையது ஆற்றூர். அந்த ஆற்றூரிலேயுள்ள சோமி என்பவனின் அழகினைக் கண்டதும் நாராயணன் நெடுமாலாக ஆகினான்! அஃதன்றி நான்முகனும் ஓராயிரம் மடல் ஊர்ந்தான்: கருப்பு வில்லியான மாரனோ தன் உடனே அழியப் பெற்றான். புகழ்பெற்ற வானவர் கோமானோ ஆயிரங் கண்களைப் பெற்றவனானான்."

நெடுமால் - நீண்ட மேனி: பெரிதான மயக்கம். ஓராயிரம் மடல் ஏறல் - ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரையிலே வீற்றிருத்தல்: ஆயிரமுறை மடலூர்தல், உருவழிதல் - உடல் மெலிதல்:சாம்பராதல்.

'தேவர்களையும் நனியச்செய்த பேரழகினை உடையவள் அவள்' என்று பாராட்டுகின்றனர் கவிஞர்.

**இரு பாகற்காய்!**

இஞ்சிகுடி என்னும் ஊரிலே ஒரு தாசி இருந்தாள், அவள் பெயர் கலைச்சி. அவள், கவிஞரைப் பாராட்டாது ஏளனஞ் செய்ய அவர் பாடிய வசை இச்செய்யுள்.

**ஏய்ந்த தனங்க ளிரண்டுமிரு பாகற்காய்**
**வாய்ந்தவிடை செக்குலக்கை மாத்திரமே-தேய்ந்தகுழல்**
**முக்கலச்சிக் கும்பிடிக்கு மூதேவி யாள்கமலைக்**
**குக்கலிச்சிக் குங்கலைச்சிக் கு. (183)**

"தேய்ந்த குழல் முக்கலச்சிக்கும் பிடிக்கும் மூதேவியாள் - பாறிப்போன தலைமயிரிலும் முக்கலம் அளவிற்குச் சிக்குப் பிடித்திருக்கும் மூதேவி போன்றவளான தன்மையுடையவள்; கமலைக் குக்கல் இச்சிக்கும் கலைச்சிக்கு - திருவாரூர்த் தெருநாய் மட்டுமே விரும்பி அணுகக் கூடியவள்: அத்தகையவளான இந்தக் கலைச்சி என்பவளுக்கு, ஏய்ந்த தனங்கள் இரண்டும் இரு பாகற்காய் - அமைந்த தனங்கள் இரண்டுமோ என்றால், இரண்டு பாகற்காய்களைப் போன்று ஒட்டித் தொங்குவனவாம்: வாய்ந்த இடை செக்கு உலக்கை மாத்திரமே - பொருந்திய இடையோ வென்றால் செக்கு உலக்கையின் அளவே யாகும்?"

இதனால், கலைச்சியின் அழகை எல்லாம் இழித்துப் பழித்தனர் என்க.

## பாணம் தொடுப்பானோ?

*கவிஞர் பாடிய வகையினைக் கேட்டனள் கலைச்சியின் தாயார். அவள் அதனால் வருத்தமும் அடைத்தாள். தன் மகளைக் கடிந்ததுடன், அவளை மன்னித்தருளவும் கவிஞரை வேண்டிக் கொண்டாள். கவிஞரும் அப்போது கலைச்சியின் சிறப்பை வியந்து இப்படிப் பாடுகிறார்.*

**நஞ்சுகுடி கொண்டகணை நாலுந் தெரிந்துமதன்**
**இஞ்சிகுடி தன்னிலும்வந் தெய்வானோ-விஞ்சு**
**முலைச்சிகரத் தாலமுத்தி முத்தமிட்டுச் சற்றே**
**கலைச்சிகரத் தாலணைந்தக் கால்.** (184)

*"விஞ்சுமுலைச் சிகரத்தால் அமுத்தி முத்தமிட்டு - பருத்துப் புடைத்த தன் தனக்காம்புகளினாலே அமுத்தி முத்தமிட்டு, கலைச்சி கரத்தால் சற்றே அணைந்தக்கால் - கலைச்சி என்பவள் தன் கரங்களாலே சற்று நேரம் அணைத்த விடத்து; மதன் - மன்மதனானவன், நஞ்சு எடுத்துகுடி கொண்ட கணை நாலுந் தெரிந்து இஞ்சுகுடி தன்னிலும் வந்து எய்வானோ?" - நஞ்சினை நிலையாகக் கொண்டிருக்கும் மலரம்புகள் நான்கினையும் ஆராய்ந்தெடுத்து இஞ்சிகுடி என்கின்ற இவ்வூரிலும் வந்து என்மீது எய்வானோ?" அங்ஙனம் எய்யவேண்டிய வேலை அவனுக்கு இல்லை என்பது கருத்து.*

*தாமரை முல்லை மா அசோகம் நீலம் என்னும் ஐந்து மலர்க் கணைகளுள் நெஞ்சில் அரவிந்தமும், நீள்சூதம் கொங்கையினும், துஞ்சும் விழியில் அசோகமும், சென்னியிலே முல்லையும், அல்குலிலே நீலமுமாக எய்வது மாரனின் மரபு. 'நாலும்' என்றதனால், ஐந்தாவதான நீலத்தை எய்தலை நாடி, அவளைக் கூடுதலையும் விரும்பினார் கவிஞர் என்க.*

## சத விகரம்

*பெண்ணைப் பற்றிய ஒரு சண்டையிலே, சகோதரர் சிலர் மாண்டுவிட, அவர்களின் அறியாமைக்கு இரங்கிக் கவிஞர் கூறிய செய்யுள் இது.*

**வாலி மடிந்ததுவும் வல்லரக்கர் பட்டதுவும்**
**கோலமுடி மன்னர் குறைந்ததுவும்-சால**
**மதியுடைய நூற்றொருவர் மாண்டதுவு மையோ**
**சதவிகரத் தால்வந்த தாழ்வு.** (185)

*'வாலி' என்பவன் முன்னாளிலே மடிந்ததுவும், வல்லமையுள்ள அரக்கர்கள் அந் நாளிலே இறந்ததுவும், அழகிய முடி மன்னர்கள் பலர் போரிலே வெட்டுண்டதுவும், மிகுந்த அறிவினையுடையவரான துரியோதனாதியர் மாண்டதுவும்*

எல்லாம், ஐயோ! சதவிகரத்தால் (சதியால் - பெண்ணைப் பற்றிய செயலால்) வந்துற்ற வீழ்ச்சியே!

துரியோதனாதியர் நூற்றுவரே என்னும், நூற்றொருவர் என்கிறார் கவிஞர். இது குந்தி புத்திரனான கர்ணனையும் சேர்த்துச் சொல்லியது.

சத விகரம் என்பது சகரம் எனவும், தகர இகரம் பிரிவுபடும். ஆதலால் சதி என்றனம்! மதியுடைய என்ற சொல், சிறந்த ஆன்றோரைத் துணையாகவுடைய எனவும் பொருள்படும். 'நூற்றுவர்கள் மாண்டதுவும்' எனவும் பாடம்; சதி விரகம் - பிறருடைய மனைவிமேற் கொள்ளும் காமம்.

## புனத்தோடு இரங்கல்

தலைவி, இல்லத்தினரால் இற்செறிக்கப்பட்டனள், அதனை அறிந்த தலைவன் புனத்தினை நோக்கிப் புலம்புவதாக அமைந்த செய்யுள் இது.

**கம்பத்தா னைக்கடையிற் கட்டினான் கால்சாய**
**அம்பைத்தா வித்தான்கா லானதே-வம்புசெறி**
**இவைகாள் கிள்ளைகள் பூங்குயில்கா ளன்றில்காள்**
**பாவையா ளாண்ட பதி.** (186)

'புதுமைச் செறிவுடைய பூவைகளே! கிளிகளே! அழகிய குயில்கள்! அன்றில்களே! பொற்பாவை போன்ற என் காதலியாள் ஆட்சி செய்துகொண்டிருந்த இந்த இடமானது -

பத்துத் தலையினையுடைய இராவணனைத் தன் வாலிலே கட்டியவனான வாலியானவன் காலற்றுச் செத்து விழுமாறு அம்பைச் செலுத்தின இராமனின் பாதமாக (அரிதாளாக) ஆகிவிட்டதே? இனி என்ன செய்வேன்?"

தினையறுத்த பின்னர் அவள் வரவும் நின்றது; அந்தத் தினைப்புனத்திலே விளங்கிய அரிதாளைக் கண்டு இப்படி நோகின்றான் தலைவன்: அரிதாள் - கதிர் அரியப்பட்ட பின் விளங்குகின்ற தாள். காலற்று - மூச்சற்று.

## வெறி விலக்கல்

ஒரு பெண் காதல் நோயினாலே உடல் மெலிந்தாள். அவள் தாய் தெய்வக் குற்றம் என்று அதனைக் கருதினாள், தெய்வத்துக்கு பலியிட்டுப் போற்றவும் முற்பட்டாள். அப்போது, மகள் தோழியிடத்திற் கூறுகிற பாங்கிலே அமைந்த செய்யுள் இது.

**முந்நான்கில் ஒன்றுடையான் முந்நான்கி லொன்றெடுத்து**
**முந்நான்கி லொன்றின்மேல் மோதினான்-முந்நான்கில்**
**ஒன்றறிந்தா லாகுமோ ஓஒ மடமயிலே**
**அன்றணைந்தான் வாராவிட் டால்!** (187)

“ முந்நான்கில் ஒன்று உடையான் - பன்னிரு இராசிகளிலே ஒன்றான மீனைத் (மகரம்) தன் கொடியாக உடையவனான மன்மதன், முந்நான்கில் ஒன்றெடுத்து - பன்னிரு இராசிகளிலே ஒன்றான (தனுசு) வில்லினை எடுத்து, முந்நான்கி லொன்றின்மேல் மோதினான். பன்னிரு இராசிகளில் ஒன்றாகும் கன்னியாகிய என்றன்மீது மோதி விட்டனன், ஓஓ! அழகிய மயிலனைய தோழியே! அன்றணைதான் வாராவிட்டால் - அந் நாளிலே என்னைத் தழுவிய என் காதலன் வாராவிட்டால், முந் நான்கில் ஒன்று அரிந்தால் ஆகுமோ? - பன்னிரு இராசிகளுள் ஒன்றான மேடத்தை (ஆட்டை) அரிந்து பலியிட்டால் மட்டும் என் நோய் நீங்கிப் போகுமோ? நீங்காது என்பது கருத்து.

## குட்டிச் செட்டி!

குட்டிச்செட்டி என்றொருவன் கவிஞரை அவதூறாகப் பேசி ஏளனம் செய்தபோது, அவன் சொல்லிய ஆயிரம் யானை என்ற சொல்லை அமைத்து, அவனை அவமானப் படுத்தும் வகையிலே. கவிஞர் செய்த செய்யுள் இது. எட்டிகுளம் கிராமத்து அதிபதியான ஒரு பிரபு, புலவர்க்குக் கொடுக்கும் பரிசினைக் குட்டிச் செட்டி என்பவன் மறுத்துத் தனக்கும் பாகந் தராமையால், அப்புலவர்களுக்கு விரைவில் பரிசளிக்காமல் துன்புறுத்தி வந்தான். அதனைப் புலவர்கள் உரைக்கக் கேட்டுக் கவிஞர் இச்செய்யுளைச் சொன்னார். சொன்னதும், அந்தக்குட்டிச் செட்டியின் மகள் துன்பத்துக்கு உள்ளாக, அவன் நடுங்கிப் பணிந்து புலவர்களைப் போற்றினான். அவன் மகள் துயரமும் நீங்கியது. இது இச்செய்யுளின் வரலாறாகக் காணப்படுவது.

**எட்டி குளத்திலிருந்து சரக்கு விற்கும்**
**குட்டிசெட்டி தன்மகளைக் கொண்டுபோய்-நொட்டுதற்கே**
**ஆயிரம் யானை யெழுநூறு கூன்பகடு**
**பாயும் பகடேண்பத் தைந்து. (188)**

இதன் பொருள் வெளிப்படை, அவன் தன் மகளையே கெடுத்த கொடியவன் என்று பழிக்கிறார்.

## ஒருத்தி போட்டாளே!

கும்பகோணத்திலே, ஒரு சமயம் ஒரு பெரிய சோறூட்டு விழா நடந்தது. அந்தச் சோறூட்டு விழாவிற் காளமேகமும் கலந்து கொண்டார். பந்தி பந்தியாக அமர்ந்து அனைவரும் உணவருந்திக் கொண்டிருந்தனர். அப்போது, ஒரு நிகழ்ச்சி நடந்தது.

தலையின் முன்புறத்திலே குடுமிவைக்கும் வழக்கமுடைய ஒருவன், கவிஞருக்கு அருகிலேயே இருந்து சாப்பிட்டுக் கொண்

டிருந்தான். அவனுடைய குடுமிதிடுமென அவிழ்ந்து இலையிலும் போய் விழுந்தது. தன் தலைமயிரை எடுத்து அவன் உதறவே, எச்சிற் பருக்கைகளுள் சில காளமேகத்தின் இலையிலே யும் போய் விழுந்தன. அதனால் அவனை இப்படிப் பாடி நிந்திக்கிறார் கவிஞர்.

**சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்**
**பொருக்குலர்ந்த வாயா புலையா-திருக்குடந்தைக்**
**கோட்டானே நாயே குரங்கே யுனையொருத்தி**
**போட்டாளே வேலையற்றுப் போய். (189)**

"கட்டவிழ்ந்து போன முன் குடுமியினையுடைய சோழியனே! சோற்றுப்பொருக்கு காய்ந்து அகலாதே ஒட்டிக் கொண்டிருக்கும் வாயனே! இழிந்தவனே! திருக்குடந்தை நகரின் கோட்டானே! நாயே! குரங்கே! ஒருத்தி, வேறு வேலையற்றுப் போய் உன்னையும் ஒரு பிள்ளையாகப் பெற்றுப் போட்டாளே? அவளை எப்படி நொந்து கொள்வது?"

சுருக்கு - தலைமுடியை அள்ளிச் செருகும் தன்மை. பொருக்கு - காய்ந்துபோன பருக்கைகள். கோட்டான் - ஆந்தை.

இந்தச் செய்யுள் அடியிற் கண்டபடியும் வழங்கும்.

**சொருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்**
**பொருக்குலர்ந்த வாயா புலையா - திருக்குடந்தை**
**நாயா நரியாவுன் னாய்முகமும் சேய்வடிவும்**
**தாயார்தான் கண்டிலளோ தான்? (189அ)**

## சத்திரத்துச் சாப்பாடு

நாகப்பட்டினத்திலே காத்தான் வருணகுலாதித்தன் சத்திரம் ஒன்று இருந்தது. அந்தப் பக்கமாகப் போய்க் கொண்டிருந்த காளமேகப்புலவர் உணவுக்காகச் சென்றார். பகலெல்லாம் காத்திருக்கச் செய்து, இரவில் நெடுநேரத்திற்குப் பின்னரே சாப்பாடு என்று ஏதோ ஒன்றையும் அங்கே அவருக்குப் போட்டார்கள். கவிஞரின் பொறுமை அதற்குமேலும் நிலைபெறவில்லை. இப்படிப் பாடுகின்றார்.

**கத்துக்கடல் சூழ்நாகைக் காத்தான்தன் சத்திரத்தில்**
**அத்தமிக்கும் போதி லரிசிவரும்-குத்தி**
**உலையிலிட வூரடங்கு மோரகப்பை யன்னம்**
**இலையிலிட வெள்ளி எழும். (190)**

"ஒலிக்குங் கடலின் ஆரவாரத்தினாலே சூழப்பெற்றிருக் கின்ற, இந்த நாகப்பட்டினத்துக் காத்தான் என்பவனுடைய சத்திரத்திலே, பொழுது மலைவாயிலிற் சென்று மறைகின்ற

*பொழுதிலேதான் அரிசி வரும். அரிசியைத் தீட்டி உலையிலே இவர்கள் இடுவதற்குள்ளாக ஊரெல்லாம் உறங்கி ஒலியடங்கிப் போகும். இவர்கள் இரவலர்க்கு ஓர் அகப்பை அன்னத்தை இலையில் இடவும் வேண்டுமானால், அதற்குள் விடிவெள்ளியே வானத்தில் எழுந்துவிடும்; ('இதுவும் ஒரு சத்திரமோ?' என்பது குறிப்பு.)"*

*இதனைக் கேட்ட சத்திரத்தினர் காத்தானிடம் சென்று இந்தப் பாடலைச் சொன்னார்கள். அவன்செய்தியைப் புரிந்து கொண்டான். திருத்தங்களை உடனே செய்தான். காளமேகத்திடமும் வந்து, தன்னைப் பொறுத்தருளும்படி வேண்டினான். அப்போது, கவிஞர் அவனுடைய மனமாற்றத்தைப் பாராட்டியவராகப் பொருளினை மாற்றி உரைத்து அவனை மனமகிழுமாறு செய்கின்றார்.*

## குமுறுகின்ற கூழ்!

*வீரசென்னன் என்பவனின் நாட்டிலே ஒரு வடுகன் வீட்டிலே உண்ட கூழினைப்பற்றிக் கவிஞர் சொல்லிய செய்யுள் இது.*

**ஏழாளை யடித்தபுலி தனையடித்தான்**
**வீரசென்ன னென்றே காட்டில்**
**வாழாமற் சிறுபுலிக ளீப்புலியோ**
**டெலிப்புலியாம் வடிவங் கொண்டு**
**பாழாகிக் காடெல்லாம் பரிதவிக்க**
**வடுகரடுப் படயில் வந்து**
**கூழாகி வயிற்றினிற் போம் பொழுது**
**குணம் போகாமற் குமுறுந் தானே!** (191)

*"ஏழு ஆட்களை அடித்துவிட்ட புலியினை வீரசென்னன் என்பவன் அடித்துவிட்டான் என்று கேட்டுப் பயந்து, தாமும் காட்டிலே வாழாமல், சிறிய புலியளெல்லாம் ஈப்புலியாகவும் எலிப்புலியாகவும் வடிவங்கொண்டு வந்து, காடெல்லாம் பாழ்பட்டுப் போய்ப் பரிதவிக்க, வடுகர்களின் அடுப்படியிலே வந்து கூழ்வடிவமாயின. என் வயிற்றினில் போகும்பொழுது மட்டும் தம்குணம் முற்றவும் போகாமல் அவை இரைச்சலிடுகின்றன (குமுறுகின்றன.)"*

*கூழ் உண்டதனால் வயிறு இரைச்சலிடக் கவிஞர் அதனை இப்படிக் கூறுகின்றார்.*

## மறவாத சாப்பாடு

*ஸ்ரீரங்கத்திலே, ஒரு வீட்டிற் சாப்பிட்ட கவிஞருக்கு, அந்த மனவேதனையினைத் தாங்கவே முடியவில்லை. அந்த சாப்பாட்டின் தன்மையை நினைத்து இப்படிப் பாடுகிறார்.*

**நீச்சாற் பெருத்திடுங் காவேரி யாற்றை நிலைநிறுத்திச்**
**சாய்ச்சா ளிலைக்கறிச் சாற்றையெல் லாமது தானுமன்றிக்**
**காய்ச்சாப் புளியும்நற் கல்லுடன் சோறும் கலந்துவைத்த**
**ஆச்சாளை யான்மறவேன் மறந்தால் மன மாற்றிடுமோ? (192)**

"வெள்ளத்தினாலே மிகுந்திடும் காவேரியாற்றைத் தடுத்து நிறுத்திக் கீரைச்சாற்றினை வெள்ளமாக என் இலையிலே சாய்த்தாள்; அதுவும் அல்லாமல்அந்தக் கீரைச் சாற்றிலிட்ட புளி கொதிக்கவும் இல்லை; அத்துடன் நல்ல கற்களோடு சோற்றையும் சிறிதே கலந்து இலையிலேயும் வைத்தாள். இப்படி எனக்கு உணவளித்த அந்த அம்மையை, யான் எந்நாளும் மறக்கவே மாட்டேன்; அப்படி நான் ஒருவேளை மறந்தாலும், என் மனம் அதனை என்றாவது மறந்திடுமோ?" மறவாதென்பது கருத்து.

**பட்டரின் ஈகை**

திருப்பனந்தாளிலே ஒரு பட்டர் இருந்தார். அவருடைய சோற்றுக் கொடையினைச் சிறப்பித்து இப்படிப் பாடுகிறார் கவிஞர்.

**விண்ணீரும் வற்றிப் புவிநீரும் வற்றி**
**விரும்பி மழைத்**
**தண்ணீரும் வற்றிப் புலவோர் தவிக்கின்ற**
**காலத்திலே**
**உண்ணீ ருண்ணீரென் றுபசாரஞ் சொல்லி**
**யுபசரித்துத்**
**தண்ணீரும் சோறுந் தருவான் திருப்பனந்**
**தாட் பட்டனே. (193)**

"வானத்திலிருந்து பெய்கின்ற மழைவளமும் இல்லாமற் போய், நிலத்தினின்று கிடைக்கும் ஊற்று நீரும் வெளிவராமல் வற்றிப்போய், புலவர்கள் உணவற்றுத் தவிக்கின்ற காலத்திலே, மனம் விரும்பி, உண்ணுங்கள் உண்ணுங்கள் என்று உபசார வார்த்தைகளைச் சொல்லி உபசரித்துத், தண்ணீரும் சோறும் அவர்களுக்குத் தருபவன், திருப்பனந்தாள் பட்டவன் ஒருவனே யாவான்."

விண்ணீர் - ஆகாய கங்கை எனவும் உரைப்பர்.

**அமராபதியார் விருந்து**

அமராபதிக் குருக்கள் என்பவர், ஒருநாள் கவிராயருக்குப் பலவகைக் கறிகளுடனே சிறந்த விருந்து ஒன்றினை நடத்தினார். விருந்தின் சிறப்புக் கவிஞரின் செய்யுளாக இப்படி மணக்கிறது.

**ஆனை குதிரைதரு மன்னைதனைக் கொன்றகறி**
**சேனை மன்ன ரைக்காய்துன் னியவரை-பூநெயுடன்**
**கூட்டியமு திட்டான் குருக்களம ராபதியான்**
**வீட்டிலுண்டு வந்தேன் விருந்து.** (194)

"குருக்கள் மரபினைச் சேர்ந்தவரான அமராபதியார் என்பவரின் வீட்டிலே இன்று விருந்து உண்டு வந்தேன். ஆனை - அத்திக்காய்: குதிரை - மாங்காய்; தருமன்னை தனைக்கொன்ற கறி - வாழைக்காய்; சேனை - சேனைக் கிழங்கு; மன்னரைக்காய் - நெல்லிக்காய்; அவரை - அவரைக்காய், ஆகியவற்றால் துன்னீ - உண்பதற்கான கறிவகையினைச் செய்து, பூநெயுடன் - மணக்கும் நெய்யுடன், கூட்டி அமுத்திட்டான் - சேர்த்து எனக்கு அவன் அமுது இட்டனன்".

மேலெழுந்தபடி பார்த்தால், "ஆனைக் கறியும், குதிரைக் கறியும், பெற்ற தாயைக்கொன்ற கறியும், படைமன்னரைக் கொன்ற கறியும், பூனைக் கறியுடனே சேர்த்து உணவளித்தான்" என்று தோன்றும் நயத்தினை அறிக.

**பூசுணிக்காய் கறி**

கொண்டத்தூரிலே ஒரு வீட்டிலே உணவருந்தினார் கவிஞர். பூசுணிக்காய்க் கறி மிகவும் சுவைகேடாயிருக்க, அதனைப் பழித்து இப்படிப் பாடுகிறார்.

**கண்டக்காற் கிட்டுங் கயிலாயங் வைக்கொண்டுட்**
**கொண்டக்கால் மோட்சம் கொடுக்குமே-கொண்டத்தூர்**
**தண்டைக்கா லம்மை சமைத்துவைத்த பூசணிக்காய்**
**அண்டர்க்கா மீசருக்கு மாம்.** (195)

"கொண்டத்தூரிலே இருக்கும், தண்டை அணிந்த கால்களை யுடைய இந்த அம்மை சமைத்து வைத்த பூசுணிக்காய்க் கறியினைப் பார்த்த பொழுதிலோ கயிலாயத்தை அடைவதாகத் தோன்றும்; கையிலெடுத்து உண்டுவிட்டாலோ மோட்சத்தையே கொடுத்து விடும்; இது தேவர்களுக்கும் ஈசர்க்குமே பொருத்தமானதாகும்."

"பார்த்தாலே உயிர் போய்க் கொண்டிருப்பதுபோன்ற பிரமை ஏற்படும்; உண்டாலோ உயிரே போய்விடும்; தேவர்கள் பாற்கடலை விரும்பிக் கடைய, அங்கே ஆலக்கால விஷம் எழுந்தது; அதனால், அவர்கட்கு ஒருவேளை இது பிடிக்கலாம்; அந்த நஞ்சை உண்டானே ஈசன். அவனுக்கும் இது பிடிக்கலாம்' என்பது கருத்து. கறியை வியந்து பாடியதாகவும் சிலர் இதற்குப் பொருள் கொள்வதுண்டு.

## மா வடுவே

ஒரு மரத்திலே ஏராளமான மாவடுக்கள் விளங்கினதைக் கண்ட கவிஞருக்கு, மாவடு ஊறுகாயின்மேல் மனம் செல்லுகிறது. இப்படிப் பாடுகிறார்,

**திங்க ளுதலார் திருமணம்போ லேகீறிப்**
**பொங்குகட லுப்பைப் புகட்டியே-எங்களிட**
**ஆச்சாளுக் கூறுகா யாகாம லாருக்காக்**
**கர்ச்சாய் வடுகமாங் காய். (196)**

"வடுக மாங்காய் - வடுகாக விளங்கும் மாங்காயே! பிறையனைய நெற்றியினையுடைய பெண்களின் அழகான மனத்தைப் போலக் கீறி, பொங்கும் கடலினின்றுங் கிடைத்த உப்பினைப் புகட்டி, எங்களுடைய ஆச்சாளுக்கு ஊறுகாயாக ஆகாமற்படிக்கு வேறு யாருக்காகவோ நீ இப்படிக் காய்ந்திருக்கின்றாய்?"

ஆச்சாள் - ஆத்தாள் என்ற சொல்லின் சிதைவு. அன்றி, ஒருத்தியின் பெயரும் ஆம். பெயரென்று கொண்டால், ஆச்சாள் படைத்த ஊறுகாயை வியந்து மாவடுவைக் கண்டபோது பாடியதாகக் கொள்க.

## சட்டி பானை

சட்டி பானைகளைச் செய்து கொண்டிருக்கும் ஓர் இடம்; கவிஞர் அங்கே சென்று விசாரிக்கிறார்; அவள் தப்பாக புரிந்து கொண்டாள். அந்தக் கருத்தில் எழுந்த வெண்பா இது.

**ஆண்டி குயவா வடாவுன்பெண் டாட்டிதனைத்**
**தோண்டியொன்று கேட்டேன் துரத்தினாள்-வேண்டியிரு**
**கைக்கரகம் கேட்டேன் காலதனைத் தூக்கியே**
**சக்கரத்தைக் காட்டினாள் தான். (197)**

"ஆண்டி என்னும் பெயரினையுடைய குயவனே! உன் பெண்டாட்டியினைத் 'தோண்டி' ஒன்று கேட்டேன்; அவள் என்னைத் துரத்தினாள். மீண்டும் வேண்டிக் கொண்டவனாக, 'இருகைக் கரகம்' கேட்டேன்; அவளோ, தன் இரு கால்களைத் தூக்கியவளாகச் சக்கரத்தைக் காட்டினாள்! இது ஏனோ?"

தோண்டி - அல்குலையும் குடத்தையும், கைக்கரகம் - தனங்களையும், கலசங்களையும், சக்கரம் - பானைவனையும் சக்கரத்தையும், மறைவிடத்தையும் குறிப்பன.

## நீர் மோர்

மோர் விற்பவள் ஒருத்தி, நீரிலே சிறிது மோரையும் கலந்து மோரென்று கூறி விற்று வந்தாள். அந்த மோரின் தன்மையைக் கண்ட கவிஞர் பாடியது இது,

**காரென்று பேர்படைத்தாய் ககனத் துறும்போது**
**நீரென்று பேர்படைத்தாய் நெடுந்தரையில் வந்ததற்பின்**
**வாரொன்று மென்முலையா ராய்ச்சியர்கை வந்ததற்பின்**
**மோரென்று பேர்படைத்தாய் முப்பேரும் பெற்றாயே. (198)**

*"வானத்தை அடையும்போது நீ 'மேகம்' என்ற பெயரினைப் பெற்றனை! நெடிதான தரையிடத்தே வந்ததன் பின்னர், 'நீர்' என்ற பெயரினையும் பெற்றனை. கச்சுப் பொருந்திய மென்மையான முலைகளையுடைய ஆய்ச்சியர்களின் கையிடத்தே வந்ததன் பின்னால், நீ 'மோர்' எனவும் பெயர்பெற்றனை! நீரே, நீ இப்படி மூன்று பெயர்களையும் பெற்று விட்டனையே! நின் சிறப்புத்தான் என்னே?"*

## வதை செய்தால்

*மகளின் காதல் மெலிவை அணங்கு தாக்கியதென்று எண்ணி, வெறியாடலுக்குத் தாய் ஏற்பாடு செய்ய, அப்போது மகள் சொல்லுகிறதாக அமைந்தது இச் செய்யுள்.*

**போலநிற மாவார்க்குப் பூணார மாவாரை**
**ஏலவதை செய்தால் இயல்பாமோ-சாலப்**
**பழிக்கஞ்சுந் தென்மதுரைப் பாவையிரு நான்கு**
**விழிக்கஞ்சன் சோமனலை வேந்து. (199)**

*"மிகுதியாக எழுந்த ஊரலரான பழிக்கு அஞ்சுகின்ற, தென்மதுரையிலிருக்கும் பாவைபோன்ற என் தோழியே! எட்டு விழிகளையுடைய பிரமதேவன், சந்திரன், கடல் தெய்வமாகிய வருணன் ஆகிய இவர்களைப் போன்ற பெண்களுக்கு, ஆடு முதலியவற்றைப் பலியிடுவதனால் மீண்டும் மேனி பழைய தன்மையினை அடைந்து விடுமோ?"*

*பிரமன் வெண்ணிறத்தோன்; சந்திரன் நாளுக்கு நாள் உடல் தேய்ந்து போகின்ற தன்மையுடையவன்; வருணன் கருநீல நிறத்தவன். பிரிவினாலே உடல் வெளுத்தும், தேய்ந்தும், பசலைபடர்ந்தும் போயின நிலைமையை இப்படிக் கூறினர். சோமன், சிவனும் ஆம்; அப்போது உடலின் கொதிப்பைக் குறித்ததாகக் கொள்க.*

## பழிகாரா!

*கயற்றாற்றிலே கருட உற்சவம் நடந்து கொண்டிருந்தது. விழாவைக் கண்டு மகிழ்ந்திருந்த கவிஞரைக் கோயிலார் வற்புறுத்திச் சப்பரத்தைச் சுமக்குமாறு செய்தனர். அந்த வேதனையைத் தாளாத அவர், இவ்வாறு பாடிப் பழிக்கின்றனர்.*

**பாளைமணம் கமழுகின்ற கயற்றாற்றுப்**
**பெருமானே பழிகா ரரகேள்**
**வேளையென்றா லிவ்வேளை பதினாறு**
**நாழிகைக்கு மேலா யிற்றென்**
**தோளை முறித் ததுமன்றி நம்பியா**
**னையுங்கூடச் சுமக்கச் செய்தாய்**
**நாளையினி யார் சுமப்பா ரெந்நாளும்**
**உன்கோயில் நாசந் தானே! (200)**

*பாளையின் மணம் கமழுகின்ற கயற்றாறு என்னும் ஊரிலே கோயில்கொண்டிருக்கும் பெருமானே! பழிகாரனே! யான் சொல்லும் இதனையும் கேட்பாயாக; வேளை என்றால் இவ்வேளை இரவு பதினாறு நாழிகைக்கும் மேற்பட்டதாக ஆகிவிட்டது. நின் வாகனத்தைச் சுமக்கவைத்து என் தோள்களை முறியச் செய்ததும் அல்லாமல், இந்த நம்பியானையும் நின்னோடு கூடச் சுமக்கும்படியாக என்னைச் செய்துவிட்டாய். இனிமேல், நாளைக்கு உன்னை எவர் சுமக்கப் போகிறார்கள்? உன் கோயில், இனி எந்நாளுமே நாசந்தான்."*

*இதற்குப் பின்னர் கயற்றாற்றுக் கோயிலில் திருவிழா நெடுங்காலம் நின்றுவிட்டது என்பது வரலாறு.*

### ஏரி உடைதல்!

*ஏரி உடையுமாறு கவிஞர் பாடிய செய்யுள். இது ஏரியின் பெருக்கினால் ஊரும்செய்யும் பாழாகாமற் செய்ய வேண்டிய முறைகளைக் கூறுகிறார்.*

**கலங்கற் றுறையதனிற் காராளர் போதத்**
**தெலுங்கப்ப நாரணன் தெண்டிக்கச் - சலம்பெருகி**
**நட்டாற கொண்டுகரை நன்றா யுடைந்துநீர்**
**கட்டா தொழிதல் கடன். (201)**

*"காராளர்கள் கலங்கல் துறையினிடத்தே செல்லவும், தெலுங்கப்ப நாராணனானவன் வெட்டிவிடவும், எங்கணும் நீர்ப்பெருக்கெடுத்து, நட்டாற்று வெள்ளமாக எங்கும் பெருகிக் கொண்டு கரையும் நன்றாக முற்றவும் உடைந்து போக, ஏரியில் கட்டுப்பட்டிராமல் முற்றவும் நீர் வடிந்து போதலே செய்தற்கான முறையாகும்."*

### கடையர்கள்

*வணிகத்தில் ஏராளமான பொருளைச் சம்பாதித்தும், அதனை நல்லோர்க்கு உதவும் மனமற்றுத் தீய வழிகளிலேயே செலவிட்டு வருகின்ற சிலரைப்பற்றிப் பழித்துக் கூறிய செய்யுள் இது.*

**கருந்தலை செந்தலை தங்கான் றிரிக்கால் கடையிற்சுற்றி**
**வருந்திக் குடவற்கும் தாட்டிகுங் கொத்திட்டு மாய்வதல்லலால்**
**கரந்தைக ளாண்டி லொருக்கால் வருவது கண்டிருந்தும்**
**அரும்புக்குங் கொத்துக்கும் வந்தார் பிழைப்ப தரிதென்பரே.**

**(202)**

*"கருந்தலையெனவும் (கால்), செந்தலை எனவும் (அரைக்கால்), தங்கான் எனவும் (அரை), திருக்கால் எனவும் (முக்கால்) வருத்தப்பட்டுக் கடையிலே பொருளைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்த்து, அப்படிச் சேர்த்ததைப் பரத்தைக்கும் கூத்திக்குமாகப் பங்கிட்டு அழிவதல்லாமல் - கரந்தைகள் ஆண்டிற்கு ஒருமுறை வருவதனைத் தெரிந்திருந்தும், 'அம்புக்கும் கொத்துக்கும் வந்துவிட்டார்கள்; இனி நாங்கள் கடைவைத்துப் பிழைப்பதே அரிது' என்பார்கள் இந்தக் கடைக்காரர்கள்.*

*கரந்தைகள் - அரசாங்க வரி வாங்குவோர்.*

**பாவிகள்!**

**தண்டாங்கூர் மாசனங்காள் சற்குணர்நீர் என்றிருந்தேன்**
**பண்டங் குறையவிற்ற பாவிகாள் - பெண்டுகளைத்**
**தேடியுண்ண விட்டீர் தெருக்க டெருக்கடொறும்**
**ஆடிமுத லானிவரைக் கும். (203)**

*தண்டாங்கூர் என்ற ஊரிலே, ஓர் ஒருந்தாயக் காலத்திலே, வியாபாரிகள் பண்டங்களை அநியாயமான விலைக்கு விற்றுக் கொண்டிருந்தார்கள். அதனைக் கண்டு மனம் வெதும்பிப் பாடியது இது.*

*'தண்டாங்கூர் என்னும் ஊரிலே இருக்கின்ற மிகவும் பெரிய மனிதர்களே! (நீங்கள் அனைவருமே நல்ல குணம் உடையவர்கள்; என்று நான் இதுவரை எண்ணியிருந்தேன்.*

*பண்டங் கறைய விற்ற பாவிகாள் - பொருள்களைப் பெற்ற விலையின் அளவுக்கேற்பக் கொடாமல் அளவைக் குறைத்து விற்ற பாவிகளே! ஆடி முதல் ஆனிவரைக்கும் - அதாவது ஆண்டு முழுவதும் பெண்களைத் தேடியுண்ண விட்டீர் - பெண்களைப் பொருள் தேடி உண்ணுமாறு கைவிட்டீர்களே? (நீங்கள் உருப்படுவீர்களா?)"*

*அகவிலை அதிகரித்ததால் பெண்கள் உணவுக்காகப் பொருள் தேட முனைந்த கொடுமையை எடுத்துக் காட்டிக் கடைக்காரர்களைப் பழிக்கிறார் கவிஞர், 'கொள்ளை இலாபம்' வைத்து விற்கும் பெரிய பெரிய மனிதர்களும், பதுக்கல்காரர்களும் இச்செய்யுளை நன்றாகக் கவனிக்க வேண்டும்.*

## நாராயணன்

கம்பர் பெருமான், செய்யுளின் சந்தத்தை நோக்கி 'நாராயணன்' என்ற சொல்லை, 'நராயணன்' என்றனர். அவர் செயலை ஏளனஞ் செய்யும் கவிஞர் இப்படிப் பாடுகிறார்.

**நாராயணனை நராயணனென் றேகம்பன்**
**ஓராமற் சொன்ன வுறுதியால் - நேராக**
**வாரென்றால் வர்ரென்பென் வாளென்றால் வள்ளென்பேன்**
**காரென்றாற் கர்ரென்பேன் யான்.** (204)

"கம்பன் சற்றும் ஆராயாமல், 'நாராயணன்' என்ற சொல்லை, 'நராயணன்' என்று சொன்ன அதே நெஞ்சின் உறுதியினாலே, அதற்கு ஒப்பாக, யானும் இனிமேல் 'வார்' என்றால் 'வர்' என்பேன், 'வாள்' என்றால் 'வள்' என்பேன், 'கார்' என்றால் 'கர்' என்பேன்."

நாராயணன் என்பது, திருமாலின் திருநாமம்; இதற்கு, ஜலத்திலே இருப்பவன் என்பது பொருள். நராயணன் என்றால், மனிதரில் இருப்பவன் என்பது பொருளாகிறது. இப்படிப் பொருள் முற்றவும் வேறுபடுகிறதனால் கவிஞர் கம்பரின் போக்கினைக் கண்டித்து உரைக்கின்றனர்.

## பாம்பு கொண்டதோ?

தென்றல் வருகின்ற காலத்தே, ஒரு சமயம் தென்றற் காற்றையே காணவில்லை. திருச்செங்காட்டிலிருந்த கவிஞர், அப்போது இவ்வாறு பாடினார்.

**அம்பேந்து கையா னவன்பதியி லைம்மாவைக்**
**கொம்பேந்தி தந்தைபணி கொண்டதோ-அன்பா**
**வரிந்த மகவை யமுதுக் கழையென்**
**றிருந்தவன்றன் செங்காட்டி லே.** (205)

"சிறுத்தொண்டன் சிவனடியார்க்கு அமுதிடுகின்ற பேரன்பிலே அரிந்த சிறுபிள்ளையை, 'உடனிருந்து அமுது உண்பதற்கு அழைப்பாயாக' என்று சொல்லி வீற்றிருந்தவன் சிவபிரான். அவன் கோயில் கொண்டிருக்கின்ற திருச்செங் காட்டிலே, கமண்டலத்தை ஏந்தியிருக்கும் கையினனான அகத்தி யனின் பொதியமலையினின்று வருகின்ற தென்றற் காற்றினை, கொம்புகளைச் சுமந்திருக்கும் விநாயகப் பிரானின் தகப்பனுடைய ஆபரணமான பாம்புகள் தாம் இப்போது உண்டுவிட்டனவோ?"

அம்பு - கமண்டலமும் எழுகடலும் ஆம். கொம்பு ஏந்தி - ஒற்றைக் கொம்பினைக் கையிலே ஏந்தியிருப்பவனும் ஆகும். பணி - ஆபரணம்; பாம்பு, 'பாம்பு காற்றைக் குடித்ததோ?' என்று வினவும் நயத்தினை அறிக.

## ஆமூர் முதலியார்

முன் ஒரு செய்யுளிலே, ஆமூரிலுள்ள திருவேங்கட முதலியாரின் குதிரையைச் சிறப்பித்த கவிஞரின் செய்யுளை அறிந்தோம். அவருடைய கொடைச் சிறப்பைப் புகழ்ந்தது இது.

**உள்ளங்கால் வெள்ளெலும்பு தோன்ற வொருகோடி**
**வெள்ளங்கா லந்திரிந்து விட்டோமே-உள்ளபடி**
**ஆமூர் முதலி யமரர்கோ னிங்கிருப்பப்**
**போமூர் அறியாமற் போய்.** (206)

"ஆமூரின் முதலியாகிய அமரர்கோமான் போன்றவன் இங்கே இருக்கவும், போவதற்குரிய ஊர் இதுவென முதலிலேயே அறியாதபடி பல ஊர்கட்கும் நடந்துபோய், உள்ளங்காலிலே வெள்ளெலும்பு தோன்றும்படியாக, ஒரு கோடி வெள்ளங்காலம் வீணாகப் பலவூரும் சுற்றி அலைந்து விட்டோமே!"

"ஆமூர்க் களப்பாளனைப் பாடிய செய்யுளெனவும் இதனைச் சொல்வார்கள். ஒருகோடி வெள்ளம் - பன்னெடுங் காலம்; கோடி என்பதும் வெள்ளம் என்பதும் பேரெண்கள் ஆகும்.

## பண்பின் தகுதி

பண்புடையவர் பண்பற்றவர், பாவிகள் பாவஞ் செய்யாதவர், நண்பர் நண்பரல்லார் இவர்களை நாம் கொள்ளவேண்டிய முறைமைகளைப் பற்றிப் பாடிய செய்யுள் இது. இது, மதுரையிற் சொல்லியது.

**பண்புளருக் கோர்பறவை பாவத்திற் கோரிலக்கம்**
**நண்பிலரைக் கண்டக்கா னாற்காலி-திண்புவியை**
**ஆள்வார் மதுரை யழகியசொக் கர்க்கரவம்**
**நீள்வா கனநன் னிலம்.** (207)

"பண்புள்ளவர்களுக்கு ஓர் பறவை (அது ஈ - கொடு); பாவத்திற்கு ஓர் இலக்கம் (அது அஞ்சு - பாவத்திற்கு அஞ்சி ஒதுங்க வேண்டும் என்பது கருத்து); நண்பில்லாதவரைக் கண்டால் நாற்காலி - (அது விலங்கு - விலகிப் போய்விடு) என்பது பொருள்.

செறிவுற்ற நிலத்தினை எல்லாம் ஆட்கொள்பவராகிய மதுரை நகரத்து அழகிய சொக்கநாதப் பெருமானுக்கு, நிலையாகப் (அரவம் வாகனம் நன்னிலம் என்க) பணிவிடை செய்."

பண்பாளர்க்குக் கொடுத்தும், பாவத்திற்கு அஞ்சியும், பகைவரிடத்திலிருந்து விலகியும், சொக்கநாதப் பெருமானுக்குப் பணிவிடை செய்தும் வாழ்வாயாக என்பது கருத்து.

'ஓர் பறவை' என்பதனை, 'ஒப்பற்ற பறவை' எனப் பொருள் கொண்டால், 'அன்னம்' என்றாகிச் சோறிடுதலைக் குறித்ததாக அமையும்.

**வாழ்க! வாழ்க!**

ஒரு திருமண வீட்டிலே திருமாலடியார்களும் சிவனடியார்களும் குழுமியிருந்தனர், மணமக்களை வாழ்த்துகிறார் கவிஞர். இரு சாராரின் மனமும் புண்படாதபடி உரைக்கின்ற சிறப்பினைக் காண்க.

**சாரங்க பாணியா ரஞ்சக்கரத்தர் கஞ்சனைமுன்**
**ஓரங்கங் கொய்த உகிர்வாளர்-பாரெங்கும்**
**ஏத்திடுமை யாக ரினிதா யிவரும்மைக்**
**காத்திடுவ ரெப்போதும் காண்.** (208)

***சிவ பரமாக:*** சாரங்கபாணியார் - மானேந்திய கையினர்; அஞ்சு அக்கரத்தர் - பஞ்சாட்சர சொருபமானவர்; கஞ்சனை முன் ஓரங்கம் கொய்த உகிர்வாளர் - தாமரை வாசனாகிய பிரமனை முன்காலத்திலே ஒரு தலையினைக் கிள்ளிய நகத்தினை உடையவர்; பார் எங்கும் ஏத்திடும் உமை ஆகர் - உலகமெல்லாம் போற்றுகின்ற உமையம்மையைத் திருமேனியிற் பாதியாகக் கொண்டிருப்பவர்; இவரும்மை எப்போதும் காத்திடுவர் காண் - இத்தகைய ஈசர் உங்களை எந்நாளும் காத்திடுவாராக! 'காண்', அசை.

***திருமால் பரமாக :*** சாரங்க; பாணியர் - சாரங்கம் ஆகிய வில்லினைக் கைக்கொண்டவர்; அஞ்சக்கரத்தர் - அழகிய சக்கரப் படையினை உடையவர்; முன் ஓர் அங்கம் கொய்த உகிர்வாளர் - மாமனாகிய கஞ்சனை முன்னாளிலே ஒப்பற்ற உடலைக் கிழித்த நகத்தினையுடையவர்; பார் எங்கும். ஏத்திடும் மையாகர் - உலகெங்கும் போற்றிடும் கரிய திருமேனியுடையவர்; திருமாலாகிய இவர் உம்மை எப்போதும் காத்திடுவாராக!

இருவகையினரும் உவக்குமாறு பொருளை விரித்துரைத்துக் காளமேகம் அவர்களை மகிழ்வித்தனர் என்க.

**மதுரைக்கு எவ்வாறு சென்றீர்!**

'ஞானவரோதயர்' என்பவர் திருச்சிராப்பள்ளிக்கு மேற்கேயுள்ள வயலூர் என்னுமிடத்தில் வாழ்ந்த சிவசமயத் துறவியாராவார். தமிழ் வடமொழி என்னும் இரண்டினும் வல்லவராகவும், சித்தாந்த புராண நூல்களுள் ஆழ்ந்த புலமையும் தெளிவும் உடையவராகவும் இவர் விளங்கினார்.

கந்த புராணத்தைக் கச்சியப்ப முனிவர் தமிழ்ச் செய்யுளாற் பாடினார். அதன் பிற்பகுதியாக உபதேச காண்டத்தைப் பாடுமாறு, தம் ஆசிரியராகிய ஆறுமுக சுவாமி ஆணையிட, இவர் அதனை 2600 செய்யுட்களால் பாடினார் என்பர். இந்த ஞானவரோதயரைக் 'காளமேகத்திற்கு ஆசிரியர்' என்று, உயர்திரு. மு. இராகவையங்கார் போன்ற ஆராய்ச்சிப் பெரியோர்கள் கருதுவர்.

இந்தப் பெரியார், ஒரு சமயம் மதுரை நகருக்குச் சென்று வந்தனர். இப்பொழுது, இவரைக் கண்டு தரிசித்த காளமேகப் புலவர், இவருடைய பெருமையை வியந்து கூறிய செய்யுள் இதுவாகும்.

**முதிரத் தமிழ்தெரி நின்பாடல் தன்னை முறையறிந்தே**
**எதிரொக்கக் கோப்பதற் கேழேழு பேரில்லை இன்றமிழின்**
**பதரைத் தெரிந்தெறி கோவில்லை யேறப் பலகையில்லை**
**மதுரைக்கு நீ சென்ற தெவ்வாறு ஞான வரோதயனே!(209)**

"ஞான வரோதயப் பெருமானே! முதிர்ந்த சுவையோடு தமிழினிமை புலப்படும் தங்களது பாடல்களை முறையாக அறிந்து, எதிரேயிருந்து கோத்து ஒழுங்கு செய்து வைப்பதற்கு, நாற்பத்தொன்பதின்மராகிய சங்கப் புலவர்களும் இப்போது இல்லை; இனிதான தமிழிடத்தே கலந்து கிடக்கும் பதர்களைத் தெரிந்து கழித்துப் போடுதற்குறிய தலைவனான பிள்ளைப் பாண்டியனும் இப்போது இல்லை; சங்கப் பலகையில் ஏறித் தங்களின் புலமையை நிலைநாட்ட வென்றால், அந்தப் பலகையும் இப்போது இல்லை. இருந்தும், தாங்கள் மதுரைக்குச் சென்றது தான் எதற்காகவோ? அதனைச் சொல்வீர்களாக!" என்பது இதன் பொருள்.

இதனால், ஞானவரோதயரின் ஒப்பற்ற புலமைச் சிறப்பை உளமுவந்து போற்றுகின்றார்.

**விதி விடங்கா!**

திருவாரூர்த் தியாகேசப் பெருமானுக்கு வீதி விடங்கன் என்பதும் ஒரு திருப்பெயர். உளியாற் செதுக்கி அமைக்கப் பெறாது, தானே கிளைத்த விடங்கம். பெருமானின் திருமேனி என்பது ஐதிகம். திருவாரூர்ப் பெருமானைத் தரிசிக்கச் சென்ற கவிஞர், பெருமானின் சிறப்பை இவ்வாறு பாடுகின்றனர்.

**சேலை யுடையழகா தேவரகண் டாகமுநீர்**
**மாலை யழகா மணிமார்பா-வேலை**
**அடங்கார் புரமெரித்த வாரூரா வீதி**
**விடங்கா பிரியா விடை. (210)**

"மாதொரு பாகனாகி அதனால் ஒரு பாகத்தே சேலையும் உடையாக விளங்க வீற்றிருக்கும் அழகனே! தேவர்களாலும் அளந்து அறிதற்கு ஒண்ணாத பெருமானே! செங்கழு நீர் மாலையை அணிந்திருக்கும் அழகனே! அழகிய மார்பகத்தை உடையோனே! கடல் போன்று அடக்கமின்றி ஆர்ப்பரித்துத் திரிந்த முப்புரத்து அசுரர்களின் கோட்டைகளைச் சிரித்தே எரித்தருளிய சிவபிரானே! திரு ஆரூரனே! வீதி விடங்கனே! நின்னைப் பிரியாமல் என்றுஞ் சுமந்திருக்கும் பேறு பெற்றது நின் இடபம் அல்லவோ!" என்பது பொருள்.

**மாவலி வாணா**

மாவலி வாணர் என்னும் வாணர்குலத்து அரசர்கள். ஒரு காலத்தே தமிழ்நாட்டுச் சிற்றரசர்களாகச் சிறப்புற்று விளங்கினர், விசயநகர வேந்தர்கள் காலத்தில் இவர்களின் சிறப்பு, சில சமயங்களில் பாண்டியரைக் காட்டினும் கூடியிருந்ததும் உண்டு. அப்பொழுது, இவர்களுள் ஒருவன், தன்னைப் பற்றிச் செருக்குடையோனாகத் திகழக் காளமேகத்தின் நெஞ்சத்தின்கண் வேதனை பெருகுகின்றது.

புகழ்பெற்ற பாண்டியவரசை அழித்துப் 'பாண்டிய குலாந்தகன்' என்ற விருதையும் சூடிக்கொண்ட வாணனை அவர் வெறுப்புடனேயே கருதுகின்றார். அவனை இகழ்ந்து சொல்லிய செய்யுள் இது.

**சொக்கன் மதுரையில் தொண்டர்க்கு முன்னவிழ்த்த**
**பொய்க்குதிரை சண்டைக்குப் போமதோ-மிக்க**
**கரசரணா வந்தக் கரும்புறத்தார்க் கெல்லாம்**
**அரசரணா மாவலிவா ணா!** (211)

இதன்பாற் குறிப்பிடப்படும் வாணன் 'திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலி வாணாதிராயன்' என்பர்.

மாவலிவாணனே! சொக்கேசப்பெருமான், அந்நாளிலே தம் தொண்டரான வாதவூரடிகளின் பொருட்டாக, மதுரை நகரிற் கொண்டுவிட்ட பொய்க்குதிரைகள், போர்க்களத்திற்குப் போகக் கூடியவையோ? அவை போகாவன்றே! அது போலவே,

பருத்த காலுங் கையுங்கொண்டு உருவால், பெரிதாக விளங்குபவனே! விலங்குகளைக் கொன்று அவற்றின் ஊனைத் தின்று திரியும் இழிதொழிலாளர்க்கு அரசனே! நீதான் இந் நாட்டு மக்களைக் காத்துப் பேணுதற்கு ஏற்ற அரசாகிய அரணாவாயோ? 'நீ ஆக மாட்டாய்' என்பது கருத்து.

### கடுகி வரவும்

காளமேகப் புலவர், தமிழினிமையை விரும்பிப் போற்றியது போலவே, அழகின் இனிமையை ஆராதிப்பதிலும் ஆர்வம் உடையவராக இருந்தார். இதனால், திமிருவானைக்கா மோகனாங்கியைப் போல, வேறு சிலருடைய தொடர்பும் இவருக்கு இருந்து வந்தது. இவர்களுள் ஒருத்தி 'தொண்டி' என்பவள்.

இவள், திருநள்ளாற்றைச் சேர்ந்தவள், காளமேகம் நாகைப் பட்டினம் சென்றிருந்தபோது, இவர்களுக்குள் தொடர்பு ஏற்பட்டது. இருவருக்கும் இடையே அளவிறந்த பாசமும் உண்டாயிற்று.

நாகையிலிருந்து, காளமேகம் குடந்தைக்குச் செல்ல நினைத்தார். அப்போது, தொண்டியும் திருநள்ளாற்றுக்குப் போக நினைத்தாள். இருவரும், தத்தம் விருப்பப்படி சென்றனர்.

குடந்தைக்கு வந்தபின், தொண்டியைப் பிரிந்திருக்க முடியாமல் காளமேகம் வருந்தினார். தம்முடைய ஆராத காமத்தை நயமாக எடுத்தெழுதி, அவர் அனுப்பிய ஓலை இதுவாகும்.

**நள்ளாற்றுத் தொண்டிக்கு நல்வரதன் தீட்டுமடல்**
**விள்ளாமல் எத்தனைநாள் வெம்புவேன்-கள்ள**
**மதனப் பயலொருவன் வந்துபொருஞ் சண்டைக்கு**
**உதவக் கடுகிவர வும்.** (212)

'நள்ளாற்றினளான தொண்டிக்கு நல்லவனாகிய வரதன் தீட்டும் ஓலை; கள்ளனாகிய மதனப்பயல் என்னும் ஒருவன் வந்து என்னுடனே பொருதுகின்றான். வெளியிலே சொல்லாமல் உள்ளேயே போரிட்டு எத்தனை நாளுக்கு நான் வெந்து கொண்டிருப்பேன்? அதனால், அவனோடு சண்டையிட்டு அவனை வெல்வதற்கு, எனக்குத் துணையாக நீயும் விரைந்து வருவாயாக" என்பது பொருள்.

'உதவக் கடுகி வரவும்' என்ற அழைப்பிலேயே கவிஞரின் உள்ளத்தை நாம் காணலாம்.

### ஊறல் அமிர்தம்

காளமேகத்தின் ஓலையைப் பெற்ற தொண்டியும், அவர் விரும்பியபடியே, விரைந்து குடந்தைக்கு வந்து சேர்ந்தாள். இருவரும் ஆராத காம மயக்கத்தில் ஆழ்ந்து திளைத்தனர். அப்பொழுது, அவளை வியந்து சொல்லிய செய்யுள் இது.

**தேற லமிர்தம் தெவிட்டிடி னுங்கனிவாய்**
**ஊற லமிர்தம் உவட்டாதே-வீறுமதன்**
**தன்னாணை நள்ளாறர் தம்மாணை யும்மாணை**
**என்னாணை தொண்டியா ரே!** (213)

*தேன் கலந்த பாலாகிய அமுதம் உண்ணத் தெவிட்டினாலும், உன்னுடைய கோவைக் கனிபோன்ற வாயிதழ்க் சுடையிலே ஊறிவரும் அமுதம் உண்ணஉண்ணத் தெவிட்டாத இன்பத்தைத் தருவதாயிருக்கிறது. வீறு மதனின் ஆணை! நள்ளாற்றிலே கோயில் கொண்டிருக்கும் பெருமான் மீது ஆணை! உன்மீது ஆணை! என்மீது ஆணை! தொண்டியாரே எம்மைக் கைவிடாதேயும் என்பது பொருள்.*

**சாகலானான்**

*வேளாளன் ஒருவன் வீட்டிற்குக் காளமேகம் சென்றார். வேளாளர்கள் விருந்தினைப் பேணுகின்ற பண்பு கொண்டவர்கள். ஆனால், அந்த வேளாளனோ பண்பற்றவனாக இருந்தான். வீட்டில் இருந்துகொண்டே, மனைவி மூலம், 'வீட்டில் கணவர் இல்லை' என்று சொல்லிக் கவிஞரை அனுப்பிவிட முயன்றான். அவனுடைய செயல் கவிஞரை வருத்த, அவர் பாடிய செய்யுள் இது.*

**பாலலகை யன்று பரிந்தளித்த கோத்திரத்துக்**
**காலமென வந்த அடைக்கலவன் - சூலந்**
**திருக்கையி லேயேந்தும் சிவனிருக்க வேளான்**
**இருக்கையிலே சாகலா னான்.** (214)

*"ஒருபால் உடலைத் தாங்கி நின்றே பேயாக உருமாறிய காரைக்கால் அம்மையார், அக்காலத்தே பரிவுடன் பேணிக் காத்த சிவனடியார் கூட்டத்திலேதான் வாழுதற்கான காலபேதம் என்ற ஒன்றைக் கருதியே வந்து சேர்ந்திருக்கின்றான் இந்த வேளாளன். எமனது பாசத்துட்படாது அடைக்கலம் தருபவனாகிய, சூலத்தைத் திருக்கையில் ஏந்தியிருக்கும் சிவபிரான் இருக்கவும், இவன் உடலில் 'உயிர் இருக்கையிலேயே இல்லாமற்போய்ச் சாகிறவன் ஆகின்றானே!' என்பது பொருள்.*

*இருந்தும் இல்லையென்பதனால், அவனை இல்லாதவ னாகவே கொண்டு, 'சாகலானான்' என்கின்றார் கவிஞர். இதன்பின், அவன் தன் செயலுக்கு நாணியவனாகக் கவிஞரைப் பணியக் கவிஞரும் அவனை மன்னித்து, அவனாலே உபசரிக்கப் பெற்று மகிழ்ந்தனர்.*

## நம்பிமார் மீன் தின்றார்

'நம்பிமார் என்பவர்கள், திருமால் கோயில்களிலே பணி செய்கின்ற சிறப்பினை உடையவர்கள். மிகவும் ஒழுக்க சீலராகவும், சிறந்த பக்தியாளராகவும், ஆழ்ந்த ஞான சீலராகவும் இவர்கள் விளங்குவார்கள். எனினும், திருக்கண்ணமங்கை நம்பிமார்களுள் சிலர், காளமேகத்திடம் ஏதோ தாறுமாறாக நடந்திருக்கின்றனர். காளமேகத்தின் சைவச் செலவால், அவர்கள் மனக்கசப்பு அடைந்தும் இருக்கலாம். எனவே, அவர்களை நிந்தித்துக் காளமேகம் இப்படிப் பாடுகின்றார்.

**தருக்குலவு கண்ணமங்கைத் தானத்தார் எல்லாம்**
**திருக்குளத்து மீனொழியத் தின்னார்-குருக்கொடுக்கும்**
**நம்பிமார் என்றிருந்தோம் நாட்டில் அழிகூத்தி**
**தம்பிமா ராயிருந்தார் தாம்.** (215)

"திருக்கண்ணமங்கைத் தானத்தாராகிய நம்பிமார்களை எல்லாம் பெருமை கொடுப்பதற்குரிய சிறந்தவர்கள் என்று இதுவரை நாம் எண்ணியிருந்தோம். ஆனால், மரங்கள் செறிந் திருக்கும் கண்ணமங்கையிலுள்ள நம்பிமார்களோ, கோயில் திருக்குளத்து மீன்களுள் ஒன்று விடாமல் தின்று விட்டார்கள். இந்தச் செயலால், நாட்டின் அழிவுக்குக் காரணமாகும் கூத்தியரின் தம்பிமாராகவே இவர்களைக் கருதுதல் வேண்டும்" என்பது இதன் பொருள்.

'திருக்குளத்து மீன் தின்னார்' என்பதைத் 'திருக்கு உளத்து மீன் தின்னார்' எனப் பகுத்துக்கொண்டு, மயங்கித் திரியும் உள்ளத்து நினைகளாகிய மீன்களை அடக்கி ஆட்கொண்டனர்' எனவும் பொருள் கொள்ளலாம். ஆனால், கண்ணபுரத்தைப் பற்றி இவர் பாடியிருக்கும், 'கண்ணபுரமாலே' என்னும் நூற்றுமுப்பத் தேழாவது செய்யுளை நோக்கினால், இவர் நம்பியார்கள்மீது வசைபாடியதாகவே கொள்ள இடமேற்படுகின்றது. மற்றும் 'கண்ணபுரம் கோயிற் கதவடைத்து' என்ற செய்யுளும் இதனை வலியுறுத்தும்.

## தீர்த்தாள்

கம்பர் பாடியதாகக் 'கந்தமலர்ப் பிரமன்' எனத் தொடங்கும் வெண்பா ஒன்று வழக்கிலிருக்கிறது. இதனைக் கம்பர் பாடல்கள் என்னும் நூலிற் காணலாம்.

**கந்த மலர்ப்பிரமன் கன்னிமட வார்க்கெல்லாம்**
**அந்தவிள நீரை முலை யாக்கினான்-சுந்தரஞ்சேர்**
**தோற்றமிகு வல்லிக்குத் தோப்பைமுலை யாக்கினான்**
**ஏற்றமிதில் யார்தான் இயம்பு.** (216)

என்பது அந்தச் செய்யுள். அதன்கண், தன்னுடைய பருவ முதிர்ச்சியை ஒப்பனைகளால் மறைத்துக்கொண்டு மினுக்கிக் குலுக்கி வந்த 'வல்லி' என்னும் தாசியைக் கம்பர் பெருமான் நகையாடியதைக் கண்டோம். அந்தச் செய்யுளைப் போலவே, தமிழ் நாவலர் சரிதையுள், காளமேகம் பாடியதாகவே ஒரு செய்யுள் தொகுக்கப்பட்டிருக்கிறது. அதனை நாம் இங்கே காண்போம்.

திருக் கண்ணபுரத்திலே காளமேகத்திற்கு எங்கும் எதிர்ப் பாகவே இருந்ததை அவரது செய்யுட்கள் பலவும் நமக்கு உணர்த்துகின்றன. அவ்வூர்த் தாசியருள் ஒருத்தி தீர்த்தாள் என்பவள். அவளுடைய வனப்பை இகழ்ந்து கவிஞர் பாடிய வசை இது.

**கந்த மலரயனார் கண்ணபுர மின்னாருக்**
**கந்தவிள நீரை முலை யாக்கினார்-சந்ததமுந்**
**தோற்றமுள தீர்த்தாட்குத் தோப்பைமுலை யாக்கினார்**
**ஏற்றமெவர்க் காமோ வினி? (217)**

"தாமரை வாசராகிய பிரமதேவர், திருக்கண்ணபுரத்திலே வாழ்பவரான பிற பெண்களுக்கெல்லாம், அழகிய தென்னங் குரும்பைகளை மட்டுமே மார்பகங்களாகப் படைத்தனர் ஆனால், எப்போதும் கவர்ச்சியாகத் தோற்றும்படி வருகின்ற இந்த தீர்த்தாளுக்கோ, அவர் தென்னந்தோப்பையே மார்பகங்களாக்கி விட்டனர். இனி, இவர்களுள் சிறப்பு எவர்க்கு ஆகும்? சிறந்த தீர்த்தாளுக்குத்தான் என்பது போலத் தோன்றினாலும், 'தோப்பை' என்ற சொல்லைத் 'தோற்பை' எனப்பகுத்து, 'தோலா கிய பை' எனப் பொருள் கண்டு, அவளை இகழ்ந்து பாடியதாகவே கொள்ளல் வேண்டும்.

## குடவாசல் விண்ணாள்

திருக்குடவாசல் என்பது தஞ்சை மாவட்டத்திலுள்ள ஓரூர். இவ்வூரிலே வாழ்ந்திருந்த விண்ணாள் என்பவள் மிகவும் குறும்புக்காரி. காளமேகப் புலவரிடம் சென்று தன்னைப்பற்றியும் ஒரு வசைகவி பாடுமாறு கேட்டாளாம். அவள் அழகுள்ளவள், அவள் மீது அன்புடையவர் கவிஞர். என்றாலும் அவளுடைய வேண்டுகோளைப் புறக்கணிக்க முடியவில்லை. அதனால், இந்தச் செய்யுளைப் பாடினர்.

**செக்கோ மருங்குல் சிறுபய றோதனஞ் சிக்கலிதம்**
**வைக்கோற் கழிகற்றை யோகுழி யோவிழி வாவிதோறும்**
**கொக்கேறி மேய்குட வாசல் விண்ணாள் வரைக் கோம்பி யன்னீர்**
**எக்கோ படைத்தது நீரே நெருப்பில் எரிந்தவரே! (218)**

'சிவபெருமானின் நெற்றிக் கண் நெருப்பிலே பட்டு எரிந்துபோன காமதேவரே! இவள் இடையோ செக்குப் போலப் பருத்திருக்கிறது. இவள் மார்பகங்களோ சிறு பயற்றின் அளவாகச் சிறுத்துள்ளன. சிக்குப் பிடித்த இவள் கூந்தல் வைக்கோற் கற்றைக் கழித்துப் போட்டாற் போலத் தோன்றுகின்றது. விழிகள் இருக்க வேண்டிய இடத்திலே குழிகள் விளங்குகின்றன. குளங்கள் தோறும் கொக்குகள் சென்று மீன்களை மேய்ந்து கொண்டிருக்கும் குடவாசல் நகரத்திலே இவ் விண்ணாளும் இப்படித் தோன்று கின்றாள். மலையகத்துக் காணப்படும் ஓணானைப் போன்றவரே! எதற்காகத்தான் இவளையும் பெண்ணென்று படைத்தீரோ?

செய்யுளைக் கேட்டதும் விண்ணாள் சிரித்துவிட்டாள். அழகிற் சிறந்த அவளுக்குக் கவிஞர் பாடிய வசைப்பாடல் வேடிக்கையாகவே இருந்தது.

### புலிக்குட்டிச் சிங்கன்

புலிக்குட்டிச் சிங்கன் என்பவன் ஒரு செல்வனாக இருந் திருக்கவேண்டும். இத்துடன் தான் புலவன் என்று செருக்கியும் திரிந்தான். இவன் காளமேகத்தை மதியாது போக, அதனாற் கவிஞர் அவன்மீது வசையாகப் பாடிய செய்யுள் இது. புலிக்குட்டிச் சிங்கனைக் காதலித்து, அவனுடன் போய் விடுகின்றாள் ஒரு பெண். அவனுடைய இழிந்த மனத்தை அறியாது, தன் பேதைமையால் அறிவிழந்த அவள், சில நாட்களில் அவனாற் கைவிடப் பெற்றுத் தாய் வீட்டிற்குத் திரும்புகின்றாள். அவளுடைய உருக்குலைந்த தோற்றத்தைக் கண்டதும் அவளுடைய தமையனின் மனம் கொதிக்கின்றது. புலிக்குட்டிச் சிங்கனின் ஈனத்தனத்தை அறியாமல், சொன்னாலும் கேளாமல் சென்று மானமிழந்து வந்து நிற்கும் தங்கையைக் கண்டதும் அவன் குமுறுகின்றான், இந்தப் பாங்கிலே செய்யுள் நடக்கிறது.

**போன போன விடந்தொ றுந்தலை**
**பொட்டெ ழுப்பிறர் குட்டவே**
**புண்ப டைத்தம னத்த னாகிய**
**பொட்டி புத்திர னத்திரன்**
**மான வீனனி லச்சை கேடனொ**
**ழுக்க மற்றபு ழுக்கையன்**
**மாண்ப ணாம்புலிக் குட்டிச் சிங்கன்**
**வரைக்கு ளேறியி றங்குவீர்**
**பேனு மீருமெ டுக்கவோ சடை**
**பின்னி வேப்பெணெய் வார்க்கவோ**
**பிரிவி ழிக்கரி யெழுத வோவொரு**
**பீறு துண்டமு டுக்கவோ**

**கான கந்தனில் வைக்க வோவிரு**
**காலவி லங்கிடு விக்கவோ**
**கற்க ரங்கொடு சாட வோவொரு**
**காரியத்தினை யேவுமே. (219)**

தான் போன இடங்களில் எல்லாம் அவமானப்பட்டுத் தலையில் பொட்டு எழத்தக்க வகையில் பிறராற் குட்டப் பட்டுப் புண்படைத்தவன் புலிக்குட்டிச் சிங்கன் என்பவன். அத்தகைய இழிந்த மனத்தவனாகிய அவன் அறிவற்ற மூடன் பெற்ற புதல்வனும் ஆவான். அவன் அம்பு செலுத்துபவன் என்றும் கூறிக்கொள்வான். மானங்கெட்டவன்! வெட்கங்கெட்டவன்! ஒழுக்கங்கெட்டவன்! மிகக் கேவலமானவன் அவன்!

அத்தகைய சிறப்புடைய புலிக்குட்டிச் சிங்கனின் எல்லைக்குள் சென்றுவிட்டு, இறங்கி வருகின்ற பெருமை யுடையவரே!

உம் கூந்தலில் நிறைந்திருக்கும் பேனையும் ஈரையும் எடுக்கவோ? சடை பின்னி வேப்பெண்ணெய் வார்க்கவோ? அவனைப் பிரிந்து வாடும் தங்கள் கண்களுக்கு மை எழுதவோ? அல்லது உமக்குக் கிழிந்த கந்தலை உடுத்து விடவோ?

காட்டில் கொண்டு விட்டுவிடவோ? அல்லது காலில் விலங்கிட்டு வைக்கவோ? அல்லது, கையில் கற்களை எடுத்து உம்மீது எறிந்து உம்மைக் கொன்றுவிடவோ? இவற்றுள் எதனைச் செய்யலாம்? அதனை நீரே கூறுவீராக என்பது பொருள்.

காமத்தைக் காதலென மயங்கி அறிவிழந்து கண்டவன் பின்னே சென்ற பெண்களுள் பலர் இந்த நிலைக்கே ஆளாவர். அவள் அடைந்துவிட்ட அவல நிலையும், அதைக் கண்டு கொதித்து, அவளுடைய உறவினர் கொள்ளும் ஆவேசவுணர்வும் இச் செய்யுளிற் காணப்படும்.

குடும்பத்தின் தகுதிக்குக் குறைவு ஏற்படும்போது அன்பு காட்டியும் அருமை பாராட்டியும் வளர்த்து ஆளாக்கிய குலக்கொடியையே வெறுத்து ஒதுக்கும் மனநிலையையே மக்கள் பெரும்பாலும் கொள்வர். அந்த மனநிலையின் விளக்கமாகவும் இதனைக் கொள்ளுக.



# பாடல் முதற்குறிப்பு

## (எண் - பாடல் எண்)

